# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமாவளியும், அஷ்டோத்தரமும்.

(விரிவான தமிழ் அர்த்தத்துடன் கூடியது.)



ஸ்ரீ ராஜராஜேச்வரி.


மாம்பலம் குருகுல வெளியீடு,

2, ஸ்டேஷன் ரோடு, மேலமாம்பலம்,

சென்னை 17.

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமாவளியும்,

## அஷ்டோத்தரமும்.

(*விரிவான தமிழ் அர்த்தத்துடன் கூடியது.*)


*ஆசிரியர் :*

**ஸ்ரீவத்ஸ, ஸோமதேவ சர்மா**

**குருகுலம், 2, ஸ்டேஷன் ரோடு, மேலமாம்பலம்,**

**சென்னை 17.**


ஸ்ரீ ராமஜயம்
வைகாசி மீ 11உ
அநல வரு


மன்மதஸு-புரட்டாசிமீ.] [ விலை ரூ. 2—8—0.

**1955.**

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்
## அவதாரிகை.

---

ஸ்ரீ லலிதா பரமேச்வரியை வழிபட ஸஹஸ்ர நாமம் ஒன்று மிக ப்ரஸித்தமாய் ஆஸேது ஹிமாசலம் அனுஷ்டிக்கப்படுகிறது. அது ப்ரும்மாண்ட புராணத்தில் உத்தரபாகத்தில் ஸ்ரீ லலிதோபாக்யாநத்தில் ஸ்தோத்ர கண்டத்தில் உளது. மற்ற புராணங்களில் வேறு வகையான ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் காணப்படினும் இதே ஸ்ரீ பாஸ்கர ராயர் முதலிய உபாஸகர்களால் கைப்பற்றப்பட்டு உரை எழுதப்பட்டது. இதற்குப் பெருமை ஏற்படக் காரணம் ஸ்ரீ லலிதா தேவியே பக்தர்களது நன்மையை நாடி இந்த ஸஹஸ்ர நாமத்தை இயற்றும்படி வசினீ காமேச்வரீ முதலிய வாக் தேவதைகளுக்கு உத்திரவிட்டாள். இதைப் பாராயணம் செய்பவர்க்கு விரைவில் கோரிய ஸகல பலனையும் தருவதாக ஸ்ரீ தேவியே அருளி இருக்கிருள். இது, வேத துல்யமானதால் வேதத்தில் எவரும் ஒரு அக்ஷரத்தைக்கூட சேர்க்கவோ, குறைக்கவோ முடியாதபடி பஞ்சாஶத் அனுவாகம் கோர்வை முதலியவைகளை அமைத்ததுபோல், இந்த ஸஹஸ்ர நாமத்திற்கு சலாக்ஷர ஸூத்ரம் என்ற ஓர் அனுக்ரமணிகை அமைக்கப்பட்டுள்ளது. அதன் கர்த்தா யார் எனக் கூற முடியவில்லை. சல என்ருல் நேராகக்கூருமல் மறைவாகக் கூறுவது என்று பொருள். க. ட. ப. ய. என்று எழுத்துகள் மூலமாக தேவி ஸஹஸ்ர நாமாவில் க. ச. ஜ. என்ற எழுத்துகளைக் கொண்டு ஆரம்பிக்கும் நாமாக்கள் எவ்வளவு எனக்கண்டு கூறப்பட்டுள்ளது. இந்த ஸூத்ரத்தின்படி 32 அக்ஷரங்களை ஆதியாகக்கொண்டே ஸஹஸ்ர நாமம் அமைந்தது எனத்தெரிகிறது. ஓர் உத்தமகுரு 32 ஸாமுத்ரிகாலக்ஷணமும் பொருந்தி இருப்பதுபோல் 32 எழுத்துக்களால் பூர்ணமான இது மிக உயர்ந்த ஸஹஸ்ர நாமம் எனத் தெரிகின்றது. பல பாஷ்யங்களிருந்தாலும் பாஸ்கர ராயர் இயற்றியதே சிறந்தது.

## ஸ்ரீ தேவியின் தத்துவம்.

உலகைத் தோற்றிவித்துப் பரிபாலித்து முடிவில் தனக்குள் ஒடுக்கிக்கொள்வது ஒரு ஶக்தியாம். முறையே இதைச்செய்பவர் ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ருலும் இவர்கள் ஒரு ஶக்தியைக்கொண்டே இந்த கார்யத்தைச் செய்கின்றனர். ஒரு கார்யத்தைச் செய்ய முடியாதவர் "இதைச் செய்ய எனக்கு சக்தி இல்லை" என்றேகூறுகின்றனர். ஶிவனில்லை, விஷ்ணு இல்லை எனக்கூறுவதில்லை. ஶக்தியே எல்லோருக்கும் ஶக்தியைத் தருகிருள். இவள் தானே ஶக்தி வடிவமாதலால் யாரிடமும் ஶக்தியைப் பெருமல் ஸ்வதந்த்ரமாக விளங்குகிருள். ஒரு பொருள் தித்திக்கவேண்டுமானல் அதற்கு வெல்லமல்லது சர்க்கரை போடுகிருேம். சர்க்கரைக்குத் தித்திப்பு வேருென்றிலில்லை. இயற்கையாகவே தித்திப்பு அமைந்துள்ளது. இதேபோல் தேவியினது ஶக்தி இயற்கையேயாம். இதையே "பராஸ்ய ஶக்தி:" என்று வேதமும், "ஶிவஶ் ஶக்த்யாயுக்த:" என்று ஸௌந்தர்யலஹரியும் விளக்குகின்றன. இந்த ஶக்தி ஒன்றேயாயினும் ப்ரும்மவித்யா, ஸ்ரீ வித்யா, ஆத்ம வித்யா, பராஶக்தி, பரப்ரும்ம மஹிஷீ என்ற பெயர்களால் அகண்ட ஸச்சிதாநந்த வடிவமாகக் கூறப்படுகிருள். ஸ்ரீ ராஜராஜேஶ்வரீ, காமேஶ்வரீ, மஹா த்ரிபுர ஸுந்தரீ, பராபட்டரிகா, என்றது போன்ற பற்பல ஸகுண நாமங்களாலும் அழைக்கப்படுபவள் இவளேயாம்.

தேவியின் உபாஸனையே முக்யம். ஸ்ரீ ருத்ரம் பரமஶிவன் பெருமையைக் கூறும். புருஷஸூக்தம் புருஷோத்தமன் பெருமையை வர்ணிக்கும். ஸ்ரீஸூக்தம் தேவியின் சிறப்பை வர்ணிக்கிறது. அதோடு மாத்திரமில்லாமல் பூஸூக்தம், நித்ராஸூக்தம், மேதாஸூக்தம், துர்க்காஸூக்தம் போன்ற பற்பல வேத மந்த்ரங்களும் வேதத்திற்கே தாய்என்று வர்ணிக்கப்படும் காயத்ரீ மஹாமந்த்ரமும் தேவி உபாஸனையைக்கூறுகின்றன. தேவீ உபநிஷத், த்ரிபுரோபநிஷத், பாவனேபநிஷத் தேவியையே வர்ணிக்கின்றன. தேவி உலகிற்கே தாயானதால் அன்னைபோல் அனைவரிடமும் கருணை காட்டுகிருள். தந்தையைவிடச்

சேயினிடம் தாயே அன்புகொண்டவள் என்பது உலக ப்ரஸித்தம். காளிதாஸனைக் கவிகுல திலகமாக்கியவள் அன்னை. போஜனை மஹம்மதிய வலையில் சிக்காமல் காத்தவள் அன்னை. அறுபதினாயிரம் ஆண்டு சென்ற தசரதனுக்குப் பகவானையே குழந்தையாகத் தந்தவள் அன்னை. மதுகைடபரை மாய்க்கும்படி மாதவனுக்கு ஶக்தி அளித்தவள் மாதா. ராவணனைக்கொன்று ஸீதையை மீட்டுவர உதவியவள் மாதா. கம்ஸனிடமிருந்து கண்ணனைக் காத்தவள் கருணை மாதா. துர்பிக்ஷத்தில் கௌதமருக்கு உதவிபுரிந்து ஸகல முனிவரையும் காத்தவள் கருணை மாதா! பதினெண் புராணங்களாலும் போற்றப்படுபவள் மாதா. மஹிஷாஸுரனை மாய்த்தவள் மாதா. பண்டாஸுரனை வென்றவள் மாதா. சண்டமுண்டர்களையும், சும்பநிஶும்பர்களையும் கொன்றவள் மாதா! யக்ஞங்களிலே ஸ்வாஹா என பூஜிக்கப்படுபவள் மாதா. பித்ரு கர்மாவிலே ஸ்வதா எனப்படுபவள் மாதா. ஸரஸ்வதீ என்ற பெயரால் அழைக்கப்படுபவள் மாதா. செல்வத்தைத் தரும் லக்ஷ்மீ மாதா, கலைமகள் மாதா, தக்ஷிணை மாதா, எல்லாம் மாதாவே. பெண்மக்கள் அனைவரும் மாதாவின் அம்ஶம். தாயை முன்னிட்டே எல்லா தேவர்களையும் பூஜிக்கவேண்டுமென்பது விதி. ஆலயத்திலும் அம்பிகை தர்ஶநம் முதலில். பார்வதீ பரமேஶ்வரன், லக்ஷ்மீ நாராயணன், ஸீதாராமன், ராதாக்ருஷ்ணன் என்றே கூறவேண்டும். ஷோடஶாக்ஷரீ முதலிய மந்த்ரங்களாலும் ஸ்ரீ சக்கரம் முதலிய யந்த்ரங்களாலும், பலதந்த்ரங்களாலும், பூஜிக்கப்படுபவள் அன்னையே! குருகுலத்திலிருந்து வெளிக் கிளம்பும் மாணவனுக்கு முதலில் அன்னையைத் தெய்வமாகக்கொள்ள என்று கூறி பிறகுதான் தந்தை, குரு, அதிதி இவர்களைப்பற்றி வேதம் கூறுகிறது. ஶக்தியின் வடிவமான பெண்களுடன் சேர்ந்து வாழ்வதே வாழ்க்கையாம். பத்னியில்லாதவர்க்கு யாகமில்லை. போகமில்லை. பித்ரு கார்யம் செய்ய பத்னி உள்ளவரே பாத்ரம். தானம் தர்மம் செய்ய மனைவியின் ஸம்மதம் மிக முக்யம். கலியுகத்தில் தேவிபக்தியே சிறந்ததென பல ஶாஸ்த்ரங்களின் துணிபு. அத்தகைய பராஶக்தியின் பெருமையை விளக்கி அவள் பூஜையால் அன்பர்

இன்புற வேண்டுமென்பது நமது அவா ஆதலின் அவளது திவ்ய ஸஹஸ்ர நாமங்களைத் தமிழ் பொருளுடன் வெளியிடுகிறோம். பொதுவாக அதை எல்லோரும் படித்து உணரலாம். **பாராயணம் செய்யவோ அர்ச்சனை செய்யவோ தேவீ மந்த்ரம் உபதேசம் பெற்றவருக்கே யோக்யதை உண்டு.**

## பூர்வபாகம்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் 3 அத்யாயங்களாக அமைந்துள்ளது. முதல் அத்யாயத்தில் அகஸ்த்ய முனிவர் தேவி ஸஹஸ்ரநாமம் பற்றி கோரியதும் அது உண்டான வகையும் கூறப்படுகிறது. 2-ல் ஸஹஸ்ர நாமம். 3-ல் பலஶ்ருதி. இவைகளைப் பாராயணம்செய்ய விரும்புவோர் தனியான ஸம்ஸ்க்ருத புத்தகம் வாங்கிக் கொள்ளவும். இதில் எல்லாவற்றிற்கும் தமிழுரையும் ஸம்ஸ்க்ருத நாமா மாத்திரமே உளது. அகஸ்த்யர் கூறுகிறார்: "ஸர்வ ஶாஸ்த்ரமும் உணர்ந்த ஓ ஹயக்ரீவரே! முதலில் ஸ்ரீ லலிதா தேவியின் தோற்றம், பிறகு பட்டாபிஷேகம், பண்டாஸுர வதம் முதலிய அற்புதமான தேவியின் சரிதத்தைக் கூறினீர். மஹா வைபவமுள்ள ஸ்ரீபுரம், ஸ்ரீ பஞ்ச தஶாக்ஷரீ மஹிமை, ஆறு ந்யாஸங்கள், மற்ற ந்யாஸங்கள், அந்தர்யாகம், பஹிர்யாகம், மஹாயாகம் முதலியன ந்யாஸ பூஜா கண்டங்களில் கூறப்பட்டன. புரஶ்சரண கண்டத்தில் ஜப லக்ஷணமும் ஹோம கண்டத்தில் ஹோமம் ஹோமத்ரவ்யம் விதியும் கூறப்பட்டன. ஸ்ரீ சக்ரம், ஸ்ரீ வித்யை, ஸ்ரீ தேவி குரு ஆகிய அனைத்தும் ஒன்றே என ரஹஸ்ய கண்டத்தில் வர்ணித்தீர். ஸ்தோத்ர கண்டத்தில் பலவகை ஸ்துதிகள் கூறப்பட்டன. மந்த்ரிணீ, தண்டினீ இவர்களின் ஸஹஸ்ர நாமத்தைக் கூறினீர். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் கூறவில்லை. ஓ தயாநிதியே! அதை மறந்தீரா? அறிந்தே அதை உபேக்ஷித்தீரா? என எனக்கு ஸந்தேஹம். எனக்கு அதைக் கேட்க யோக்யதை இல்லையா? ஏன் தாங்கள் கூறவில்லை? காரணம் என்ன?" என்று அகஸ்த்யர் கூறியதைக்கேட்டு ஸந்தோஷம் அடைந்து கும்பஸம்பவரைப் பார்த்து கூறுகிறார். "லோபா முத்ரையின் பதியான அகஸ்த்யரே"!

ஊக்கமாகக் கேளும். நான் ஏன் அதைச் சொல்லவில்லை என்ற காரணத்தைக் கூறுகிறேன். அதி ரஹஸ்யமான தென யான் கூறவில்லை. மறுபடி நீர் கேட்பதால் கூறு கிறேன். பக்தனுன ப்ரிய ஶிஷ்யனுக்கு ரஹஸ்யத்தையும் கூறுவர். இதைக் கேட்ட நீயும் பக்தியில்லாதவனுக்குக் கூருதே. தேவி பக்தனுக்கு, ஸ்ரீவித்யை அறிந்தவனுக்கு, சுத்தனுன உபாஸகனுக்கே இது சொல்லத்தக்கது. உடனே பலனை அளிக்கத்தக்க ஸஹஸ்ர நாமங்கள் பல கூறப்பட்டுள. அவைகளில் இது முக்கியமானது. மந்த்ரங்களில் ஸ்ரீ வித்யை போலும் அதிலும் காதி வித்யைபோலும், புரங்களில் ஸ்ரீபுரம் போலும், ஶக்திகளில் லலிதை போலும், ஸ்ரீவித்யோபாஸகர்களில் பரமஶிவன் போலும் ஸஹஸ்ர நாமங்களில் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமமே சிறந்தது. (காதி ஹாதி என ஸ்ரீ வித்யை 12 பேதமுள்ளது). இந்த ஸஹஸ்ர நாமத்தைப் பாராயணம் செய்தால் ஸந்தோஷிப்பதுபோல், தேவி மற்றவைகளால் ஸந்தோஷிப்பதில்லை. ஸ்ரீமாதாவின் ஸந்தோஷத்திற்காக இரவும் பகலும் இதையே கூறவேண்டும். இதைக் கூறி ஸ்ரீ சக்ரத்தில் பில்வத்தாலோ, தாமரையாலோ துளஸீ பத்ரத்தாலோ அர்ச்சனை செய்தால் ஸிம்ஹாஸநேஶ்வரியான தேவி உடனே அருள் புரிகிருள். ஸ்ரீ சக்ரத்தைப் பூஜித்து தினந்தோறும் பஞ்சதஶாக்ஷரீ ஜபம் செய்து பின் இதைப் பாராயணம் செய்ய வேண்டும். ஜபம், பூஜை செய்ய ஶக்தி இல்லாதவர் கூட இதைப் படித்தால் ஸாங்கமமாக ஜப பூஜை செய்த பலனைப் பெறுவர். மற்ற தேவீ ஸ்துதிகளையும் பூஜையில் கூறினுல் விஶேஷ பலன் உண்டு. ஆனுல் ஸஹஸ்ரநாமாவை நித்ய கர்மாபோல் நித்யம் கூறவேண்டும். மற்றவை பலனை அளித்தாலும் ஜபம், சக்ரபூஜை, ஸஹஸ்ர நாம பாராயணம் இவை மிக முக்கியமானவை பக்தனுக்கு. இதற்குக் காரணம் கூறுகிறேன் கேள்.

முன்னர் ஸ்ரீ லலிதா தேவி பக்தர்களது நன்மையை நாடி வஶினீ முதலிய வாக் தேவிகளை அழைத்துக்கூறினுள். பக்தர்களுக்கு வாக் செல்வம் அளிப்பதற்காக, "உங்களுக்கு என்னருளால் வாக் செல்வ முண்டானது. என்

சக்ரத்தின் ரஹஸ்யத்தை அறிந்து என் நாம பாராயணம் செய்யும் நீங்கள் என் ஆக்ஞைப்படி ஸஹஸ்ர நாமத்தைச் சொல்லுங்கள். பக்தர்கள் அதைத் துதித்தவுடனே எனக்கு ஸந்தோஷமுண்டாகவேண்டும்.'' இங்ஙனம் உத்திரவிடப்பட்ட வாக்தேவிகள் ரஹஸ்யமான நாமாக்களைக் கொண்டு லலிதா ஸஹஸ்ர நாமத்தை இயற்றினார்கள். அது ''ரஹஸ்ய நாம ஸஹஸ்ரம்'' என ப்ரஸித்தமானது. அகஸ்த்யரே! முன்னொரு ஸமயம் தேவி ஸிம்மாஸனத்திலமர்ந்து எல்லோருக்கும் ஸேவிக்க அவகாசமளித்தாள். கோடிப்ரும்மாணிகளுடன், கோடி ப்ரும்மாக்களும் அங்ஙனமே கோடி லக்ஷ்மீ நாராயணர், கோடி கௌரீ ருத்ரர், மந்த்ரிணீ தண்டினீ முதலிய அபரிமிதமான ஶக்தி கணங்களும் ஸேவிக்க வந்தனர். ஸுரரும் நரரும் ஸித்தரும் சூழ அனைவர்க்கும் அன்னை தர்ஶனமளித்தாள். தேவியைப் பணிந்து ஆக்ஞை பெற்று அவரவருக் கேற்ற ஆஸனத்தில் அமர்ந்தனர். ஸ்ரீ தேவியினது கடாக்ஷத்தால் தூண்டப்பட்ட வஶினீ முதலிய வாக் தேவிகள் எழுந்தனர். ஶிரத்தின் மீது கரத்தைக் குவித்து ஸஹஸ்ர நாமத்தால் தேவியைத் துதித்தனர். இதைக் கேட்ட பரமேஶ்வரீ அதிக ஸந்தோஷமடைந்தாள். ஸதஸ்ஸிலுள்ள அனைவரும் ஆச்சர்யமடைந்தனர். ஸபையிலுள்ள தேவ கணங்களைப் பார்த்து ''எனது ஆணையால் திவ்ய நாமாக்களைக்கொண்டு இதை இவர்கள் இயற்றினர். எனது ப்ரீதி வ்ருத்தியாக இதை ஸதா நீங்கள் படியுங்கள். பக்தரிடம் இதைப் பரவச் செய்யுங்கள். இதை யார் அடிக்கடி அல்லது ஒருமுறையாவது படிக்கிறார்களோ அவர்கள் எனக்கு மிகப்ரியமானவர்கள் ஆவர். அவர் விரும்பிய எல்லாவற்றையும் தருகிறேன். ஸ்ரீ சக்ரத்தில் என்னை பூஜித்து பஞ்ச தஶாக்ஷரீ ஜபம் செய்து எனது ஸந்தோஷத்திற்காக இந்த ஸஹஸ்ர நாம பாராயணம் செய்ய வேண்டும். பூஜை ஜபம் செய்யாவிடினும் கூட இதைப் பாராயணம் செய்யவேண்டும். என் ப்ரீதியால் ஸகல காமனைகளையும் பெறுவர். இதில் ஸந்தேகமில்லை. ஆதலின் இதை ஸதா ஆதரவுடன் படியுங்கள்.'' தேவி இப்படி கூறியது முதல் அவள் ஆணைப்படி ப்ரும்மாதி தேவரும், மந்த்ரிணீ முதலிய ஶக்திகளும் லலிதா தேவியின் த்ருப்

திக்காக பக்தியுடன் ஸதா பாராயணம் செய்கின்றனர். ஓ முனிவரே ! பக்தன் அவஸ்யம் இதைப் பாராயணம் செய்ய வேண்டிய காரணத்தைக் கூறினேன். இனி ஸஹஸ்ர நாமாவைச் சொல்கிறேன் கேளும்'' என ஹயக்ரீவர் கூறுகிறார்.

## ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸதோத்ர பாராயண முறை

ஸ்ரீ வித்யோபாஸனையுள்ள ஸத்குருவிடம் மூல மந்த்ரத்தை முதலில் உபதேசம் பெற்று பிறகு ஸஹஸ்ர நாம மாலா மந்த்ர உபதேஸம் பெற்றே பாராயணம் செய்ய வேண்டும். இதற்கு வஸின்யாதி வாக் தேவதை ரிஷி கண்டு பிடித்து இயற்றினவர். அனுஷ்டுப் சந்தஸ். ஸ்ரீ லலிதா பரமேஸ்மரீ தேவதை. ஸ்ரீமத் வாக்பவ கூடம் பீஜம். மத்ய கூடம் ஸக்தி. ஸக்தி கூடம் கீலகம். ஸ்ரீ லலிதா பரமேஸ்வரீ ப்ரஸாத ஸித்திக்காக ஜபத்தில் வினியோகம் பஞ்ச தஸாக்ஷரீ மூல மந்த்ரத்தில் ஒவ்வொரு கூடமாகக் கூறி கரன்யாஸம், அங்கன்யாஸம் செய்து த்யானஸ்லோகத்தைக் கூறி மனதால் நன்கு த்யானம் செய்து "லம்" என்ற பஞ்ச பூஜைகளைச்செய்து முடித்து ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம ஜபத்தைச் செய்யவேண்டும். ஒரே இடத்தில் ஆஸனத்திலமர்ந்து ஜபம் செய்யவும்.

———

உ

# ஸ்ரீ லலிதாம்பிகா த்யானம்.

---

सिन्दूरारुणविग्रहां त्रिणयनां माणिक्यमौलिस्फुरत्
तारानायक शेखरां स्मितमुखीमापीन वक्षोरुहां ।
पाणिभ्यामलिपूर्ण रत्नचषकं रक्तोत्पलं बिभ्रतीं
सौम्यां रत्न घटस्थ रक्तचरणां ध्यायेत्परामंबिकां ॥

*ஸிந்தூராருண விக்ரஹாம் த்ரிணயனும்
மாணிக்ய மௌளிஸ்புரத்
தாராநாயக சேகராம் ஸ்மிதமுகீம்
ஆபீன வக்ஷோரு ஹாம் ।
பாணிப்யாமலிபூர்ண ரத்ன சஷகம்
ரக்தோத் பலம் பிப்ரதீம்
ஸௌம்யாம் ரத்ன கடஸ்த ரக்தசரணும்
த்யாயேத் பராமம்பிகாம் ॥*

*(ஸிந்தூரம் போல் சிவந்த உடல் உள்ளவளும், முக்கண் உள்ளவளும், மாணிக்ய கிரீடத்தில் ப்ரகாசமான சந்த்ரனை உடையவளும், சிரித்த முகம், பெருத்த ஸ்தனமும் உள்ளவளும், இரு கரங்களிலும் வண்டு சூழ்ந்த ரத்னமயமான பானபாத்ரத்தையும் செந்தாமரையையும் ஏந்தியவளும், அழகியவளும், ரத்ன கலசத்திலுள்ள சிவந்த சரணமுள்ளவளுமான சிறந்த தாயை த்யானம் செய்யவேண்டும்).*

*1.* **ओं श्रीमात्रे नमः**– *ஸ்ரீமாத்ரே நம:–சிறந்த தாயார். **ஸ்ரீ** என்ற சொல் மரியாதையையும் பெருமையையும் காட்ட ஒவ்வொரு நாமாவிலும் சேர்க்கப்படும். ஸ்ரீமான்,*

ஸ்ரீமதி, ஸ்ரீமத் என மனிதருக்கும், சிறந்த ஊருக்கும் கூறுவோம். ஸ்ரீ சிதம்பரம், திரு அண்ணுமலை. இப்படி அல்லாமல் மாதா என்ற சொல்லுடன் இது சேர்ந்தே அமைந்துளது. ஸ்ரீ மரியாதை வாசகம் சேர்ப்பதாலுல் ஸ்ரீ ஸ்ரீமாதா எனவேண்டும். ஸ்ரீ என்ற லக்ஷ்மிக்கும், வேதத்திற்கும் தாய் என்றும் பொருள் கூறலாம்.

2. **श्रीमहाराज्ञै नमः** - ஸ்ரீ மஹாராக்ஞ்யை நம:—மிகச் சிறந்த ராணி. ஸ்ரீ, மஹா என்ற இரண்டும் 14 உலகிற்கும் அநேக கோடி ப்ருமாண்டங்களுக்கும் ராணி என எண்பிக்கின்றன.

3. **श्रीमत्सिंहासनेश्वर्यै नमः** – ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வர்யை நம: - சிறந்த ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவள். அரசருக்கும் ராணிக்கும் உட்காருமிடத்தில் ஸிம்ம ரூபத்தை அமைப்பது ஸிம்ஹாஸனம் எனப்படும். தேவிக்கு அத்தகைய ஸிம்மாஸனத்துடன் ஸிம்மமே ஆஸனமாக உளது. எல்லா தேவீ ஆலயங்களிலும் அம்பாள் எதிரில் ஸிம்மமே இருக்கும்.

4. **चिदग्निकुण्डसंभूतायै नमः** - சிதக்னிகுண்டஸம்பூதாயை நம: — (1) சைதன்ய அக்னிகுண்டத்திலிருந்து தோன்றியவள். பண்டாஸுரனைக் கொல்ல, தேவர்கள் செய்த யாககுண்டத்திலிருந்து தோன்றியவள். (2) சைதன்யம் என்ற சுத்த அறிவே அக்னிகுண்டம். அறிவிலிருந்து தோன்றிய பரப்ரும்ம ரூபிணீ.

5. **देवकार्यसमुद्यतायै नमः** – தேவகார்ய ஸமுத்யதாயை நம:-தேவகார்யத்தில் முயற்சி உள்ளவள். பண்டன், மஹிஷன், சும்பன், நிசும்பன் போன்ற அரக்கர்களைக் கொன்று தேவர்களுக்கு நன்மைபுரிய பல அவதாரம் எடுத்தவள்.

6. **उद्यद्भानु सहस्राभायै नमः** - உத்யத்பானு ஸஹஸ்ராபாயை நம:—ஏககாலத்தில் உதயமான ஆயிரம் ஸூர்யனுக்குச் சமமான காந்தி உள்ளவள். அம்பாளின் காந்திக்கு உபமை இல்லை. ஆயினும் ஒருவாறு உபமானங்கூற அபூர்வமான ஒன்று கூறப்பட்டது. "திவிஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபதுத்திதா" என்று கீதை 11—12 ச்லோகம் இதையே கூறுகிறது. இதில் சிவப்பு வர்ண

மும் ஒளியும் கூறும்போது வர்ணம் விமர்சம் எனப்படுகிறது. தேவிக்கு கரசரணதிகளுடன் வர்ணத்துடன் கூடிய ரூபம் ஸ்தூலமாம். மந்த்ரமயமானது ஸூக்ஷ்ம ரூபம். கேவல சுத்தக்ஞான வாஸனவடிவம் பரரூம்மரூபமாம். ஸ்தூல சரீர வர்ணனை மேலே கூறப்படுகிறது.

7. **चतुर्बाहु समन्वितायै नमः** - சதுர்பாஹு ஸமன்விதாயை நம:—4 கைகளுடன் கூடியவள்.

8. **रागस्वरूपपाशाढ्यायै नमः** — ராகஸ்வரூப பாசாட்யாயை நம: — ஆசைவடிவமான பாசத்தை உடையவள். இந்த பாசம் பக்தரை அன்பால் கட்டும். பகைவரைக் கயிற்போல் கட்டும். இடதுபுறம் கீழ்க்கையில் இதைத் தரித்திருக்கிருள்.

9. **क्रोधाकाराङ्कुशोज्ज्वलायै नमः**-க்ரோதாகாராங்குசோஜ்வலாயை நம:—கோபவடிவமான அங்குசத்தால் ப்ரகாசமானவள். அங்குசம் என்பது யானையைக் குத்தும் ஆயுதம்போன்றதும் மிகக் கொடியதுமானது. எல்லோரது கோபமுமே கொடியது. அன்னை கோபம் துஷ்டர்களிடத்தில் மிக உக்ரமானது, வலதுபுறங் கீழ்கரத்திலுள்ளது இது.

10. **मनोरूपेक्षुकोदण्डायै नमः**-மனோரூபேக்ஷு கோதண்டாயைநம:—மனவடிவமான கரும்புவில்லை உடையவள். கரும்புபோல் மிக ரஸமான மனமுள்ளவள், இடதுபுறம் மேற்கையிலுள்ளது கரும்பு வில்.

11. **पञ्चतन्मात्रसायकायै नमः** — பஞ்சதன்மாத்ரஸாயகாயை நம: — 5 தன்மாத்ரைகளை பாணங்களாக உடையவள். சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்பன ஐந்து இந்த்ரியங்களால் அறியத்தக்கவை. இவைகளைத் தனது வலதுபுரம் மேல்கரத்தில் வைத்திருக்கிருள். இச்சாசக்தி என்னும் பாசத்தையும், க்ஞானசக்தி எனும் அங்குசத்தையும், க்ரியாசக்தி எனும் வில் அம்புகளையும் 4 கரங்களில் தரித்தவள். பஞ்சதன்மாத்ரை என்பது தாமரை, கைரவம், கல்ஹாரம், இந்தீவரம், மாம்பூ எனப்படும். மன்மதனே புஷ்பபாணன். தேவி அதேபோல், கரும்புவில்லையும், புஷ்பஸரங்களையும் தரிப்பதால் ஸ்ருங்

காரதேவதையாவாள். அதற்கேற்க காமேச்வரீ லலிதா எனப்படுகிருள்.

12. निजारुणप्रभापूरमज्जद्ब्रह्माण्डमण्डलायै नमः — நிஜாருணப்ரபாபூரமஜ்ஜத்ப்ரம்மாண்ட மண்டலாயை நம: — தனது சிவந்த காந்திப்ரவாஹத்தில் ப்ரும்மாண்டத்தை முழுகும்படிச் செய்தவள். அன்னையின் வர்ணம் எங்கும் வியாபித்திருக்கிறது.

(சிரஸ்ஸிலிருந்து பாதம்வரை வர்ணனை வடிவமாக அமைந்த நாமாக்கள் இதற்கு மேலே கூறப்படுகின்றன.)

13. चम्पकाशोकपुन्नाग सौगन्धिक लसत्कचायै नमः — சம்பகாசோகபுன்னுக ஸௌகந்திக லஸத்கசாயை நம:- சம்பகம், அசோகம், புன்னுகம், ஸௌகந்திகம் இந்த புஷ்பங்களால் அழகிய கூந்தலுள்ளவள்.

14. कुरुविन्दमणिश्रेणीकनत्कोटीरमण्डितायै नमः —குருவிந்தமணி ச்ரேணீகநத்கோடீர மண்டிதாயை நம: — பத்மராக மணிகளின் வரிசையால் அழகிய க்ரீடத்தால் அலங்கரிக்கப்பட்டவள்.

15. अष्टमीचन्द्रविभ्राजदलिकस्थलशोभितायै नमः—அஷ்டமீ சந்த்ரவிப்ராஜ தலிகஸ்தல சோபிதாயை நம: —அஷ்டமீ சந்த்ரனைப்போல் ப்ரகாசிக்கின்ற நெற்றியால் ப்ரகாசிப்பவள்.

16. मुखचन्द्रकलङ्काभमृगनाभिविशेषकायै नमः — முக சந்த்ரகலங்காப ம்ருகநாபி விசேஷகாயை நம: சந்த்ரனைப் போன்ற முகத்தில் (சந்திரனது நடுவில் உள்ள) களங்கம் போன்ற கஸ்தூரீ திலகமுள்ளவள்.

17. वदनस्मरमाङ्गल्यगृहतोरणचिल्लिकायै नमः—வதனஸ்மர மாங்கல்ய க்ருஹதோரண சில்லிகாயை நம: — மன்மதனது மங்களகரமான வீடுபோன்ற முகத்தில் தோரணம்போன்ற புருவமுள்ளவள்.

18. वक्त्रलक्ष्मीपरीवाहचलन्मीनाभलोचनायै नमः-வக்த்ர லக்ஷ்மீ பரீவாஹ சலந் மீனுபலோசனுயை நம: — முக காந்திஎனும் ப்ரவாஹத்தில் ஓடும் மீன்போன்ற கண்கள்

உள்ளவள். தேவியை மீனாக்ஷி மீனலோசனா என்பதில் மீனைக் கண்ணுக்கு உவமை கூறியதில் ஒரு விசேஷம் உண்டு.

மீன்கள் தன் கண்பார்வையினாலேயேதான் குட்டிகளை வளர்க்குமாம். பால் கொடுப்பதில்லையாம். அங்ஙனம் தேவி தனது கடாக்ஷ வீக்ஷண்யத்தாலேயே பக்தர்களைக் காக்கின்றாள். பாலூட்டாததால் அபீதகுசாம்பாள் எனும் பெயருண்டு.

19. नवचम्पकपुष्पाभनासादण्डविराजितायै नमः — நவ சம்பக புஷ்பாபநாஸாதண்ட விராஜிதாயை நம:— புதிய சம்பக புஷ்பம்போன்ற மூக்கினால் அழகியவள்.

20. ताराकान्ति तिरस्कारिनासाभरणभासुरायै नमः — தாராகாந்தி திரஸ்காரி நாஸாபரண பாஸுராயை நம: — சுக்ர நக்ஷத்ர காந்தியைவிட அதிக காந்தியுள்ள மூக்குத்தியால் பிரகாசிப்பவள்.

21. कदम्बमञ्जरीक्लृप्तकर्णपूरमनोहरायै नमः — கதம்ப மஞ்ஜரீக்லுப்த கர்ணபூரமனோஹராயை நம: —கதம்பப் பூங்கொத்தைக் காதிலணிந்து அழகானவள்.

22. ताटङ्कयुगलीभूततपनोडुपमण्डलायै नमः – தாடங்க யுகளீபூத தபனோடுப மண்டலாயை நம: —சந்த்ரஸூர்யர்களைக் காதில் தோடாக அணிந்தவள். காதில் ஸ்வர்ணம் அணிவது நம் வழக்கம். தோடுடைய செவியன் என்று ஸம்பந்தர் சிவனைக் கூறுகிறார். ஸுமங்கலிகளுக்குப் பொன்னோலை மிக முக்கியமானதாம். சங்கரபகவத் பாதாள் "விஷமுண்டும் சிவன் சிவமானது உனது தாடங்க மஹிமையால்" என வர்ணிக்கின்றார். அதன் பெருமையை உணர்ந்து ஜம்புகேச்வரம் ஸ்ரீ அகிலாண்டேச்வரிக்கு ஸ்ரீ சக்ரவடிவமான தாடங்கம் அமைத்தார். அதை 68-வது பீடாதிபதியான நமது ஆசார்யாள் புதுப்பித்ததும் கவனிக்கத்தக்கது.

23. पद्मरागशिलादर्शपरिभाविकपोलभुवे नमः-பத்மராக சிலாதர்ச பரிபாவிகபோலபுவே நம:— பத்மராக சிலையால்செய்த கண்ணாடியைவிடச் சிறந்தகன்னமுடையவள்.

24. **नवविद्रुमबिम्बश्रीन्यक्कारिदशनच्छदायै नमः**-நவவித்ருமபிம்பச்ரீ ந்யக்காரி தசநச்சதாயை நம :— புதிய பவழம், கோவைப்பழம் இவைகளின் காந்தியைவிடச் சிறந்த (சிவந்த) உதடுகளுள்ளவள். "பவழவாய்" என தேவியின் அம்சமான திருமாலை ஆழ்வார் வர்ணிக்கிறார்.

25. **शुद्धविद्याङ्कुराकारद्विजपङ्क्तिद्वयोज्वलायै नमः**-சுத்தவித்யாங்குராகார த்விஜ பங்க்தித்வயோஜ்வலாயை நம:- சுத்தவித்யையின் முளைபோன்ற இரு பல் வரிசைகளால் அழகியவள். மோக்ஷத்தைக் கூறுவது சுத்தவித்யா. அம்பாளது மந்த்ரமானது ஷோடசாக்ஷரீ என்பது சுத்தவித்யையாம். அதில் ஒவ்வொரு எழுத்திலும் உயிர் மெய் என இரு பாகங்கள் உண்டு. அவை 32-ம் 16, 16 ஆக இரு வரிசைப் பற்களாக அமைந்துள.

26. **कर्पूरवीटिकामोदसमाकर्षद्दिगन्तरायै नम**:—கர்ப்பூர வீடிகாமோத ஸமாகர்ஷத் திகந்தராயை நம :— பச்சைக் கர்ப்பூராதிகள் கலந்த தாம்பூல வாஸனையால் இழுக்கப் பட்ட திக்குகளை உடையவள். அம்பாளது தாம்பூல உச்சிஷ்டம், ஊமையை மூககவி என்ற மஹாகவியாகச்செய்தது. தேவியின் தாம்பூல வாசனையையேனும் அனுபவிக்கலாம் என 10 திக்குகளிலுமிருந்து தேவாதிகள் வந்து தேவியைச் சூழ்ந்திருக்கின்றனர்.

27. **निजसल्लापमाधुर्य विनिर्भर्त्सित कच्छप्यै नमः**—நிஜ ஸல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸித கச்சப்யை நம :-தனது இனிய பேச்சினால் வீணையைத் தோற்கடித்தவள். கச்சபீ என்பது ஸரஸ்வதியின் கரத்திலுள்ள வீணை. அதையும் ஜயிக்கும் மதுரமான த்வனியுள்ளவள். நாரதர் வீணை மஹதி, தும்புரு வீணை கலாவதி, விச்வாஸு வீணை ப்ருஹதி, ஸரஸ்வதி வீணை கச்சபி எனப்படும். "விபஞ்ச்யா" என்ற ச்லோகத்தால் பகவத்பாதாளும் இதை வர்ணிக்கிறார்.

28. **मन्दस्मितप्रभापूरमज्जत्कामेशमानसायै नमः**-மந்தஸ்மிதப்ரபாபூர மஜ்ஜத்காமேச மானஸாயை நம :—புன் சிரிப்பின் காந்திப்ரவாஹத்தில் காமேசனது மனதை

முழுகவைத்தவள். காமேச்வரர் தேவி மந்தஹாஸத்தில் மகிழ்ந்து தன்னை மறக்கிறார். மூககவி இயற்றிய மூக பஞ்சசதியில் மந்தஸ்மிதசதகத்தையே சிகரமாக அமைத்துளார்.

29. **अनाकलितसादृश्यचुबुकश्रीविराजितायै नमः**-அநாகலித ஸாத்ருச்ய சுபுகச்ரீவிராஜிதாயை நம;—ஒப்பிட்டுக் கூறமுடியாத முகவாய்க்கட்டை அழகால் பிரகாசிப்பவள்.

30. **कामेशबद्धमाङ्गल्यसूत्रशोभितकन्धरायै नमः**-காமேச பத்தமாங்கல்ய ஸூத்ர சோபித கந்தராயை நம:—காமேசரால் கட்டப்பட்ட மாங்கல்யக் - (தாலி) - கயிற்றால் அழகிய கழுத்துள்ளவள்.

31. **कनकाङ्गदकेयूरकमनीयभुजान्वितायै नमः**-கனகாங்கத கேயூர கமநீயபுஜான்விதாயை நம:-ஸ்வர்ணமயமான தோள்வளைகளால் அழகிய புஜங்களுடன் கூடியவள்.

32. **रत्नग्रैवेयचिन्ताकलोलमुक्ताफलान्वितायै नमः**-ரத்ன க்ரைவேய சிந்தாகலோல முக்தா பலான் விதாயை நம:—தங்கச்சங்கிலியில் கோர்த்த பதக்கத்தோடும் அசைகின்ற முத்துமாலையோடும் கூடியவள். **உத்தம, மத்யம, அதமர்**களான மூவ்வகை பக்தர்களுக்கும் வரமளிப்பவள் என்று வேறொரு பொருளுமுண்டு.

33. **कामेश्वरप्रेम रत्नमणिप्रतिपणस्तन्यै नम**:— காமேச்வர ப்ரேமரத்ன மணிப்ரதி பணஸ்தன்யை நம ;—காமேசனின் அன்பெனும் ரத்னமணிகளுக்குப் பதிலாக அளித்த ரத்னமாகிற ஸ்தன முள்ளவள். தனது ஸ்தன ரத்னத்தைக்கொடுத்து காமேசரின் ப்ரீதி ரத்நத்தை விலைக்கு வாங்கியவள்.

34. **नाभ्यालवालरोमालिलताफलकुचद्वयायै नम** :—நாப்யாலவால ரோமாலி லதாபல குசத்வயாயை நம:—நாபி-தொப்புள்-எனும் பாத்தியிலிருந்து உண்டான ரோமாவளி என்கின்ற கொடியில் பழுத்த பழம்போன்ற இரு ஸ்தநமுள்ளவள்.

35. **लक्ष्यरोमलता धारता समुन्नेयमध्यमायै नमः**-லக்ஷ்ய ரோமலதா தாரதா ஸமுன்னேய மத்யமாயை நம :—கண்ணுக்குத் தெரிகின்ற ரோமலதைக்கு ஆதாரமாக ஒன்று

இருக்கவேண்டும் என்று ஊஹித்துத் தெரிந்துகொள்ள வேண்டிய இடுப்புடையவள். உத்தம ஸ்த்ரீகளுக்கு இடுப்பு மிகச் சிறியதாக இருக்கவேண்டும்.

36. स्तनभार दलन्मध्य पट्टबन्ध वलित्रयायै नम :-ஸ்தன பார தளன் மத்ய பட்ட பந்த வலித்ரயாயை நம:-ஸ்தன பாரத்தினால் இடுப்பு முறிந்துவிடுமோ என அஞ்சி, அது விழாதபடி இடுப்பில் கட்டப்பட்ட ஸ்வர்ண பட்டங்களைப் போன்ற 3 மடிப்புகளை உடையவள். நெற்றியிலும், கழுத்திலும், இடுப்பிலும் 3 மடிப்புகள் போன்ற ரேகை உத்தமருக்கு இருக்கும் என ஸாமுத்ரிகா லக்ஷணம் கூறுகிறது.

37. अरुणारुणकौसुम्भवस्त्रभास्वत्कटीतट्यै नमः- அருணாருண கௌஸும்ப வஸ்த்ர பாஸ்வத்கடீ தட்யை நம :— மிகச் சிவந்த கௌஸும்பவஸ்த்ரத்தால் பிரகாசிக்கின்ற இடை உடையவள்.

38. रत्नकिङ्किणिकारम्यरशना दामभूषितायै नमः:-ரத்ன கிங்கிணி காரம்யரசனா தாமபூஷிதாயை நம :—ரத்னமயமான சிறிய மணிகளால் அழகிய ஒட்டியாணத்தால் அலங்கரிக்கப்பட்டவள்.

39. कामेशज्ञात सौभाग्य मार्दवोरुद्वयान्वितायै नम :— காமேசக்ஞாத ஸௌபாக்ய மார்தவோருத்வயாந்விதாயை நம :—காமேசரால் மாத்திரம் அறிந்துகொள்ளப்பட்ட அழகும் மார்த்தவமும் உள்ள துடைகளுடன் கூடியவள்.

40. माणिक्यमकुटाकारजानुद्वयविराजितायै नमः-மாணிக்யமகுடாகார ஜானுத்வய விராஜிதாயை நம:-மாணிக்ய கிரீடம் போன்ற இரு முழங்கால்களால் ப்ரகாசிப்பவள்.

41. इन्द्रगोपपरिक्षिप्तस्मरतूणाभजङ्घिकायै नम :— இந்த்ரகோப பரிக்ஷிப்த ஸ்மர தூணப ஜங்கிகாயை நம :— மினுமினுப் பூச்சிகளால் அலங்கரிக்கப்பட்ட மன்மதனது பாணப்பெட்டி போன்ற முழங்கால் உள்ளவள்.

42. गूढगुल्फायै नमः :— கூட குல்பாயை நம :— உருண்ட குதிகால்களுள்ளவள்.

43. **कूर्मपृष्ठजयिष्णुप्रपदान्वितायै नमः** —கூர்மப்ருஷ்ட ஜயிஷ்ணுப்ரபதான்விதாயை நம :— ஆமையின் ஓடு போல் வளைந்திருக்கும் புறங்கால் உள்ளவள்.

44. **नखदीधिति सञ्छन्न नमज्जन तमोगुणायै नमः**—நக தீதிதி ஸஞ்சன்ன நமஜ்ஜன தமோ குணாயை நம :—பாத நகத்தின் ஒளியால் வணங்குபவரின் தமோ குணத்தை மூடுபவள்.

45. **पदद्वयप्रभाजालपराकृतसरोरुहायै नमः** —பதத்வய ப்ரபாஜால பராக்ருத ஸரோருஹாயை நம:—இரு பாதங் களின் காந்தியால் தாமரையை ஜயித்தவள்.

46. **शिञ्जानमणिमञ्जीरमण्डितश्रीपदाम्बुजायै नमः** —சிஞ் ஜானமணிமஞ்ஜீரமண்டித ச்ரீபதாம்புஜாயை நம:—சப் திக்கும் சிறு மணிகளை உடைய பாதஸரங்களால் அழகிய பாதாரவிந்த முள்ளவள்.

47. **मरालीमन्दगमनायै नमः**—மராளீ மந்தகமநாயை நம :—பெண் ஹம்ஸம் போன்ற மந்த நடை உடையாள். ஹம்ஸங்களுக்குத் தன் நடையைத் தேவி கற்பிக்கிருள் என "பதன்யாஸ" என்று சௌந்தர்ய லஹரீ கூறுகிறது

48 **महालावण्यशेवधये नमः** —மஹாலாவண்ய சேவ தயே நம :—பேரழகிற்குப் பொக்கிஷமானவள். "**த்வ தீயம் ஸௌந்தர்யம்**" என்று ஸௌந்தர்ய லஹரீ இதை வர்ணிக்கிறது.

49. **सर्वारुणायै नमः** —ஸர்வாருணாயை நம: —வஸ்த் ரம், ஆபரணம், புஷ்பம், காந்தி முதலிய எல்லாவற்றாலும் சிறந்தவள்.

50. **अनवद्याङ्ग्यै नमः** — அனவத்யாங்க்யை நம: — குற்ற மற்ற அவயவம் உள்ளவள்.

51. **सर्वाभरणभूषितायै नमः**-ஸர்வாபரணபூஷிதாயை நம :—ஸமஸ்த ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட வள்.

இதுவரை தேவியின் அவதாரமும், கேசாதி பாதம் வரை வர்ணனையும் கூறப்பட்டது.

52. **शिवकामेश्वराङ्कस्थायै नमः** —சிவகாமேச்வராங்கஸ்தாயை நம :—சிவகாமேச்வரரின் துடையிலிருப்பவள். சிவனைவிட வேருனவரும், வேறல்லாதவரும் சிவகாமேச்வரர். அம்பாளும் சிவகாமேச்வரீ எனப்படுகிருள். காமனைவிட அழகானதாலும், உலகைப் படைக்கக் காமங்கொண்டதாலும் பகவானுக்குக் காமேச்வரன் எனப்பெயர். சிவனை மங்களமான காமேச்வரன் என்றும் பொருத்தமானதாம்.

53. **शिवायै नमः** — சிவாயை நம: — ப்ரும்மத்தின் இச்சாரூபமானவள். சிவனுடன் ஒன்ருக இருப்பவள். மங்களத்தைச் செய்பவள். மோக்ஷமளிப்பவள் எனப் பல பொருளுள்ளது இது.

54. **स्वाधीनवल्लभायै नमः** —ஸ்வாதீன வல்லபாயை நம:—ஸ்வாதீனமான பர்த்தாவை உடையவள். சக்தி இல்லாவிடின் அசைவற்றவராக இருப்பர் சிவன், என "சிவச் சக்த்யா" என்று ஸௌந்தர்ய லஹரீ கூறுகிறது. (2) ஸுகன்யை, சசீதேவி, ருக்மிணீ ஆகிய அனைவரும் ஸத்பதியை அடையக் காரணமாக இருந்தவள் என்றும் பொருள்.

55. **सुमेरुमध्यशृङ्गस्थायै नमः**—ஸுமேரு மத்ய ச்ருங்கஸ்தாயை நம :— மேருமலையின் நடு சிகரத்திலிருப்பவள். கைலாசத்திற்கு மேலே உள்ளது மேரு எனும் தங்கமலை. அதில் 3 சிகரங்களில் மும்மூர்த்திகள் வஸிக்கின்றனர். இம் மூன்றிற்கும் இடையே 400 யோஜனை உயரத்தில் ஓர் சிகரமுள்ளது. அதே தேவீஸ்தானம்.

56. **श्रीमन्नगरनायिकायै नमः** — ஸ்ரீமன் நகர நாயிகாயை நம :—லக்ஷ்மீகரமான ஸ்ரீநகரத்திற்குத் தலைவி. அம்பாளது நகரம் ஸ்ரீநகரம். அது மேருமலைமீதும் ப்ரும்மாண்டத்திற்கப்பால் ஸுதா ஸமுத்ர மத்தியில் மணித்வீபத்திலும் மற்றும் சில விடங்களிலுமிருக்கிறது.

57. **चिन्तामणिगृहान्तस्थायै नमः** — *சிந்தாமணி க்ருஹாந்தஸ்தாயை நம :— சிந்தாமணிகளாலாகிய வீட்டில் இருப்பவள். சிந்தித்த பொருளைத் தருவது சிந்தாமணி. தேவேந்திரனிடம் இந்த மணி ஒன்றுதானிருக்கின்றது. தேவியின் வீடு சிந்தாமணிகளைச் செங்கல்போலமைத்துக் கட்டிய வீடாம். தேவியை மூக கவி சிந்தாமணியே என்று வர்ணிக்கிறார். "சிந்தித பல பரி போஷண சிந்தாமணி ரேவ காஞ்சி நிலயாமே."*

58. **पञ्चब्रह्मासनस्थितायै नमः**–*பஞ்சப்ரம்மாஸனஸ்திதாயை நம :— ஐந்து ப்ரும்மாஸனத்தில் இருப்பவள். ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் என்ற நால்வரும் தேவியின் ஆஸனத்திற்கு நான்கு கால்களாகவும், ஸதாசிவன் என்ற மூர்த்தி அதன்மேலுள்ள பலகையாகவும் இருக்கிறார்கள். பரமசிவனுக்குப் பற்பல உருவங்கள் உண்டு. அதில் ருத்ரன், ஈசானன், ஸதாசிவன் என்ற மூன்றும், ப்ரும்மா விஷ்ணு இவர்களோடு சேர்ந்தபோது 'பஞ்ச ப்ரும்மம்' எனப்படும். இவர்கள் சக்தியை விட்டுப் பிரிந்தபோது 'ப்ரேதம்' எனப்படுவார்கள். ஆதலின் 'பஞ்ச ப்ரேதா ஸனாஸீனா' என்று (249) வது நாமம் கூறப்படுகிறது. தேவியை அருகிலிருந்து உபாஸிப்பதற்காகக் கட்டில் கால்களாக இவர்கள் அமைந்தனர்.*

59. **महापद्माटवीसंस्थायै नमः** — *மஹா பத்மாடவீ ஸம்ஸ்தாயை நம:—பெருந் தாமரைக் காட்டிலிருப்பவள். மேரு மலையில் மஹா பத்மாடவியில் இருக்கின்றாள். நமது சிரஸிலுள்ள ஸஹஸ்ரார மென்ற தாமரை மீது இருப்பவள் என்றும் பொருள்.*

60. **कदम्बवनवासिन्यै नमः**–*கதம்பவன வாஸின்யை நம :— அம்பாள் வஸிக்கும் சிந்தாமணி க்ருஹத்தைச் சுற்றி மணி மண்டபமும் அதைச்சுற்றிக் கதம்ப வனமும் உளது.*

61. **सुधासागरमध्यस्थायै नमः**–*ஸுதாஸாகர மத்யஸ்தாயை நம :— அம்ருதக் கடலில் நடுவில் உள்ளவள். "ஸுதாஸிந்தோர் மத்யே" என்று ஸௌந்தர்ய லஹரியும் 'ஸுதா ஸமுத்ராந்த' என்று,ச்யாமளா தண்டகமும்*

இதை விளக்குகின்றன. 'அம்ருதேனு வ்ருதாம் புரீம்' என்று வேதமும் இதை வர்ணிக்கின்றது. ஸஹஸ்ரார மென்ற பத்மத்தில் இருக்கும் சந்த்ரமண்டலத்திலுள்ள பிந்து ஸ்தானமே இது என, 'பைரவ யாமளம்' கூறுகிறது.

62. **कामाक्ष्यै नमः** – காமாக்ஷ்யை நம :–இஷ்டத்தை அளிக்கும் கண் வாய்ந்தவள். அம்பாளது பீடங்களில் காஞ்சி காமாக்ஷி என்பது ப்ரஸித்தம். வாணியையும் லக்ஷ்மியையும் கண்ணுக உடையவள் என்றும் பொருள்.

63. **कामदायिन्यै नमः**–காமதாயின்யை நம:-விரும்பியதைத் தருபவள். 'சிதக்னி குண்ட ஸம்பூதா' முதல் 'காமதாயிநீ' வரை பண்டாஸுரனைச் சிக்ஷிப்பதற்காகத் தோன்றிய தேவியின் ஸ்வரூப வர்ணனை. காமேசனுடன் விவாஹம், ஸ்ரீநகரத்தில் (பட்டாபிஷேகமாகி) வஸித்தல் என்ற ஸ்ரீ லலிதோபாக்யான கதா பாகம் கூறப்பட்டது. 'ஹரநேத்ராக்னி' என்றவரை பண்டாஸுர விஜயக் கதை கூறப்படுகிறது.

64. **देवर्षिगणसंघातस्तूयमानात्मवैभवायै नमः**:-தேவர்ஷி கணஸங்காதஸ்தூயமான ஆத்ம வைபவாயை நம :— தேவகண, ரிஷிகணங்களின் கூட்டத்தால் துதிக்கப்படும் தனது வைபவத்தை உடையவள். தேவரிஷி கணங்கள் ஸச்சிதானந்த வடிவமான பராசத்தியே தம் ஆத்மா என்று உபாஸிக்கிருர்கள் என்றும் பொருள்.

65. **भण्डासुरवधोद्युक्तशक्तिसेनासमन्वितायै नमः** –பண்டாஸுர வதோத்யுக்த சக்திஸேனு ஸமன் விதாயை நம:- பண்டாஸுரனை வதம் செய்ய ஸந்நத்தமாயிருக்கும் சக்தி ஸேனைகளுடன் கூடியவள். சக்தி என்பது தேவியேயானதால் தன் மஹிமையால் அனேக சக்திஸேனைகளை உண்டுபண்ணி பண்டாஸுரனுடன் யுத்தத்திற்குச் செல்கிருள். லலிதோபாக்யானத்தில் இது ப்ரஸித்தமானது.

66. **सम्पत्करीसमारूढसिन्धुरव्रजसेवितायै नमः**:-ஸம்பத்கரீஸமாரூட ஸிந்துர வ்ரஜ ஸேவிதாயை நம :—ஸம்பத்கரீ என்னும் சக்தியால் தலைமை கொள்ளப்பட்ட யானைக் கூட்டத்தால் ஸேவிக்கப்பட்டவள். லலிதையின் ஸேனை

களிலுள்ள யானைப்படைக்கு 'ஸம்பத்கரீ' எனும் சக்தி தலைவியாவள். தேவியின் அங்குசம் எனும் ஆயுதத்தி லிருந்து படைக்கப்பட்டவள் ஸம்பத்கரீ எனும் சக்தி. அவள் ரண கோலா ஹலம் என்ற யானைமீதேறி கஜ ஸேனைத் தலைவியாக இருந்து அம்பாளை ஸேவிக்கின்றாள்.

67. **अश्वारूढाधिष्ठिताश्वकोटिकोटिभिरावृतायै नम :** — அச்வா ரூடாதிஷ்டித அச்வகோடி கோடிபிராவ்ருதாயை நம:-'அச்வாரூடா' எனும் தேவி உத்திரவுப்படி பலகோடி அச்வங்களால் சூழப்பட்டவள். ஸ்ரீ லலிதா தேவியின் பாசத்திலிருந்து உண்டானவள் அச்வாரூடா எனும் சக்தி. அவள் குதிரைப் படைத் தலைவி. அவள் 'அபராஜிதம்' எனும் அச்வத்தில் ஏறி போருக்கு வந்தாள்.

68. **चक्रराजरथारूढसर्वायुधपरिष्कृतायै नमः** — சக்ர ராஜரதாரூட ஸர்வாயுத பரிஷ்க்ருதாயை நம :— சக்ர ரதத்தில் உள்ள ஸமஸ்த ஆயுதங்களாலும் அலங்கரிக்கப் பட்டவள். ஸ்ரீ சக்ரமே சக்ர ராஜமாம். அது பத்து யோஜனை உயரமும் நான்கு யோஜனை அகலமும் நீளமும் உளது. ஒன்பது தட்டுகள் அதில் உள. (1) த்ரைலோக்ய மோஹநம் (2) ஸர்வாசாபரிபூரகம் (3) ஸர்வ ஸம்க்ஷோ பணம் (4) ஸர்வ ஸௌபாக்ய தாயகம் (5) ஸர்வார்த்த ஸாதகம் (6) ஸர்வரக்ஷாகரம் (7) ஸர்வரோக ஹரம் (8) ஸர்வ ஸித்தி ப்ரதம் (9) ஸர்வாநந்தமயம் என்பன 9 ஆவரணம் எனப்படும். அங்குள்ள சக்திகளுடன் அம்பாளைப் பூஜிப்பது நவாவரண பூஜையாம்.

69. **गेयचक्ररथारूढमन्त्रिणीपरिसेवितायै नमः** — கேய சக்ரரதாரூட மந்த்ரிணீ பரிஸேவிதாயை நம;—கேய சக்ர மெனும் ரதத்திலேறிவரும் மந்த்ரிணீ சக்தியால் ஸேவிக் கப்பட்டவள். அம்பாளுடைய இக்ஷு கோதண்டத்தி லிருந்து உண்டானவள் மந்த்ரிணீ தேவியாம். ஸங்கீதத் திற்கு அதிஷ்டான தேவதை. அவளுக்குப் பல பெயர் கள் உண்டு. அவள் ஏறிவரும் தேர் கேய சக்ரமாம். அது ஏழு தட்டுகளுள்ளது. இவை லலிதோபாக்யானத் தில் விவரிக்கப்படுகின்றன.

70. **किरिचक्ररथारूढदण्डनाथापुरस्कृतायै नमः** கிரிசக்ர ரதா ரூட தண்டநாதா புரஸ்க்ருதாயை நம :— கிரி சக்ர தேரில் உள்ள 'தண்டநாதா' தேவதையால் முன்னிடப் பட்டவள். ஸ்ரீ லலிதையின் பஞ்சபாணத்திலிருந்து உண் டானவள் 'தண்டநாதா.' அவள் வராக முகமுள்ளவள். அவள் தேரும் வராஹ வடிவமானது. ஐந்து தட்டுக ளுள்ளது.

71. **ज्वालामालिनिकाक्षिप्तवन्हिप्राकारमध्यगायै नमः** — ஜ்வாலாமாலினிகாக்ஷிப்த வன்ஹிப்ராகார மத்யகாயை நம ;—ஜ்வாலா மாலினீ எனும் அக்னி சக்தியால் அமைக் கப்பட்ட அக்னிக் கோட்டையின் நடுவில் இருப்பவள். பண்டனது ஸேனை நுழையா வண்ணம் நூறு யோஜனை அகலமும் 30 யோஜனை உயரமும் உள்ள அக்னிக் கோட்டை கட்டப்பட்டது. 'ப்ரதிபத்' (ப்ரதமை) முதலிய பதினைந்து திதி தேவதைகள் அம்பாளைப் பூஜிப்பவர்கள். அதில் பதினான்காவது 'ஜ்வாலாமாலினி' சக்தி. அவளே அன்னை ஆணைப்படி அக்னிக்கோட்டையாக அமைந்தாள்.

ஸ்ரீ சக்ரத்தில் கீழ் நோக்கிய ஐந்து சக்தி சக்ரங்களும், மேல் நோக்கிய நான்கு 'சிவ' சக்ரங்களும் உள்ளன. இவைகளுக் கிடையிலுள்ள ஸர்வாநந்த மயமான 'பிந்து' வில் இருப்பவள் என்றும் பொருள்.

72. **भण्डसैन्यवधोद्युक्तशक्तिविक्रमहर्षितायै नमः** பண்ட ஸைன்ய வதோத்யுக்த சக்தி விக்ரம ஹர்ஷிதாயை நம : பண்டாஸுரனது ஸைன்ய வதத்தில் முயற்சித்த சக்தி களது பராக்ரமத்தால் ஸந்தோஷப் படுத்தப்பட்டவள்.

73. **नित्यापराक्रमाटोपनिरीक्षणसमुत्सुकायै नमः**—நித்யா பராக்ரமாடோப நிரீக்ஷண ஸமுத்ஸுகாயை நம:—நித்யா தேவதைகளின் பராக்ரமத்தைப் பார்ப்பதில் ஆசை யுள்ளவள். ப்ரதமை முதல் பௌர்ணமி வரையிலுள்ள திதி தேவதைகள் பதினைந்தும் 'நித்யை' எனப்படும். அவைகள் (1) காமேஸ்வரீ (2) பகமாலினீ (3) நித்யக் லின்னா (4) பேருண்டா (5) வன்ஹி வாஸினீ (6) வஜ்ரே ஸ்வரீ (7) சிவதூதீ (8) த்வரிதா (9) குலஸுந்தரீ (10) நித்யா (11) நீலபதாகா (12) விஜயா (13) ஸர்வ மங்களா (14) ஜ்வாலாமாலினீ (15) சித்ரா.

74. **भण्डपुत्रवधोद्युक्तबालाविक्रमनन्दितायै नमः**- பண்ட புத்ரவதோத்யுக்த பாலாவிக்ரம நந்திதாயை நம: — பண்டனது குமாரர்களைக் கொல்ல முயற்சிக்கும் பாலா தேவியின் பராக்ரமத்தால் மகிழ்ந்தவள். பண்டாஸுர னுக்கு 'சதுர்பாஹு' முதலிய முப்பது பிள்ளைகள். அவர் களை ஒரே பாணத்தால் கொன்று வெற்றியுடன் வந்த 'பாலாபரமேச்வரி' எனும் அம்பாளுடைய குழந்தையைக் கண்டு மகிழ்ந்தாள். நவக்ரஹங்களுக்கு அதி தேவதை ப்ரத்யதி தேவதைகள் இருப்பதுபோல் ஸ்ரீதேவிக்கும் அங்க தேவதை பாலா. உபாங்க தேவதை அன்னபூர்ணா.

75. **मन्त्रिण्यम्बाविरचितविषङ्गवधतोषितायै नमः** — மந் த்ரிண்யம்பா விரசித விஷங்க வத தோஷிதாயை நம :— மந்த்ரிணீ தேவீ 'விஷங்கன்' எனும் அஸுரனைக் கொன்ற தினால் ஸந்தோஷமடைந்தவள்.

76. **विशुक्रप्राणहरणवाराहीवीर्यनन्दितायै नमः** —விசுக்ர ப்ராணஹரண வாராஹீ வீர்ய நந்திதாயை நம: —விசுக்ர னைக்கொன்ற 'வாராஹீ' எனும் தண்டநாதையின் வீர் யத்தால் ஸந்தோஷமடைந்தவள்.

பண்டாஸுரன் தனது இரு புஜங்களிலிருந்தும், விஷங்கன், விசுக்ரன் என்ற ஸகோதரர்களைப் படைத் தான். அவர்களை மந்த்ரிணீ, தண்டிநிகள் கொன்றார்கள். பாலை பண்ட புத்ரர்களைக் கொன்றாள். பண்ட புத்ரர் அஹங்காரமாம். விஷங்கன் விஷயவாஸனை, விசுக்ரன் அக்ஞான விருத்தி, இவர்களைக் கொன்றதால் தேவி ஸந் தோஷமடைந்தாள்.

**முக்கியக் குறிப்பு** :—இங்கு மந்த்ரிணீ விஷங்கனையும் தண்டிநீ விசுக்ரனையும் கொன்றதாக ஸஹஸ்ரநாமம் கூறு கிறது. லலிதோபாக்யானத்தில் மந்த்ரிணீ விசுக்ரனையும் தண்டிநீ விஷங்கனையும் கொன்றதாக உளது. எது ப்ரமாணம் என சங்கை தோன்றும். இரண்டும் ப்ரமா ணமே. ஒவ்வொரு கல்பத்திலும் இந்த சரித்ரம் நடப்ப தால், ஒரு கல்பத்தில் ஒரு விதமாயும் மற்றொரு கல்பத் தில் மற்றொரு விதமாயும் நடந்திருக்கலாம்.

77. **कामेश्वरमुखालोककल्पितश्रीगणेश्वरायै नमः**-காமேச்வர முகாலோக கல்பித ஸ்ரீ கணேச்வராயை நம :— காமேச்வரனது முகத்தைப் பார்த்ததால் ஸ்ரீ கணேசனைப் படைத்தவள்.

78. **महागणेशनिर्भिन्न विघ्नयन्त्रप्रहर्षितायै नम** :—மஹா கணேச நிர்பின்ன விக்ன யந்தர ப்ரஹர்ஷிதாயை நம :- கணேசர் விக்ன யந்தரத்தை நாசஞ் செய்ததைக்கண்டு ஸந்தோஷித்தாள். விசுக்ரன் விக்ன யந்த்ர மொன்றை சக்திசேனைகளிடையே எறிந்தான். அதனுல் ஜயத்திற்கும் யுத்தத்திற்குமே விக்னமுண்டாகி சக்தி கணங்கள் உத்ஸாஹமில்லாதிருந்ததைக் கண்டு தேவி காமேசனைக் கண்ணுல் நோக்க உடனே மஹா கணேசர் தோன்றி அந்த விக்ன யந்த்ரத்தை நாசஞ் செய்தார். (லலிதோபாக்யானம்).

79. **भण्डासुरेन्द्रनिर्मुक्तशस्त्रप्रत्यस्त्रवर्षिण्यै नमः**-பண்டாஸுரேந்த்ர நிர்முக்த சஸ்த்ர ப்ரத்யஸ்த்ர வர்ஷிண்யை நம:— பண்டாஸுரன் விட்ட பாணங்களுக்குச் சரியான ப்ரதி பாணம் வர்ஷித்தவள்.

80. **करांगुलिनखोत्पन्ननारायणदशाकृत्यै नमः** — கராங்குளிநகோத் பன்ன நாராயண தசா-க்ருத்யை நம:—கை விரல்களிலிருந்து நாராயணனது தசாவதாரத்தை ஸ்ருஷ்டித்தவள். பண்டன் ஸர்வ அஸுராஸ்த்ரம் விட, ஸோமகன், ஹிரண்யன், ராவணன், சிசுபாலன் முதலிய அஸுரர்கள் தோன்ற, மத்ஸ்யாதி, அவதாரங்களைப் படைத்து அவர்களைத் தேவி சிக்ஷித்தாள். ஜீவனது ஜாக்ரத், ஸ்வப்நம், ஸுஷுப்தி, துரீயம், துரீயாதீதம் என்ற ஐந்து தசைகளையும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் திரோதானம், அனுக்ரஹம் என்ற ஈச்வரனுடைய ஐந்து க்ருத்யங்களையும் அநாயாஸமாகப் படைத்தவள் என்றும் பொருள்.

81. **महापाशुपतास्त्राग्निनिर्दग्धासुरसैनिकायै नमः**-மஹா பாசு பதாஸ்த்ராக்னி நிர்தக்த அஸுர ஸைனிகாயை நம: மஹா பாசுபதம் என்ற அஸ்த்ரத்தின் அக்னியால் அஸுர ஸேனையைக் கொளுத்தியவள். மும்மூர்த்தி

களுக்கும் மேம்பட்டவர் பசுபதி. அவரது அஸ்த்ரம் பாசுபதாஸ்த்ரம். அர்ஜுனன் சிவனிடமிருந்து இதைப் பெற்று பாரதப்போரில் மஹா உக்ரமானதென்று அதை விடவில்லை. அதனினும் சிறந்தது மஹா பாசுபதாஸ்த்ரம் அதனுல் ஸேனைகளைக் கொன்று அதினின்றும் சிறந்த காமேஸ்வராஸத்ர்த்தால் பண்டாஸுரனைக் கொன்ருள். நாராயணஸ்த்ரத்தால் ஸேனையையும் பாசுபதாஸ்த்ரத்தால் ஸேனுதிபதிகளையும் கொன்ருள். (லலிதோபாக்யானம்.)

82. **कामेश्वरास्त्रनिर्दग्धसभण्डासुरशून्यकायै नमः**-காமேச்வராஸ்த்ரநிர்தக்த ஸபண்டாஸுரசூந்யகாயை நம :— காமேச்வராஸ்த்ரத்தால் பண்டாஸுரனுடன்கூட அவனது சூந்யகமெனும் நகரத்தையும் எரிததாள். மூல அக்ஞானத்தை (பண்டனையும் அவனைச் சேர்ந்தவர்களையும்) ஞானக்கியால் எரித்து விதேஹ கைவல்யமளிப்பவள் தேவி என்பது இதனுல் ஸ்பஷ்டம்.

83. **ब्रह्मोपेन्द्रमहेन्द्रादिदेवसंस्तुतवैभवायै नमः** —ப்ரஹ்மோபேந்த்ர மஹேந்தராதி தேவ ஸம்ஸ்துத வைபவாயை நம :—ப்ரஹ்மா, விஷ்ணு, மஹேந்த்ரர் முதலிய தேவர்களால் துதிக்கப்பட்ட வைபவ முள்ளவள்.

84. **हरनेत्राग्निसंदग्धकामसंजीवनौषध्यै नमः**-ஹர நேத்ராக்னி ஸந்தக்த காம ஸஞ்ஜீவனௌஷத்யை நம :-சிவனது நெற்றிக்கண் தியால் எரிக்கப்பட்ட மன்மதனை எழுப்பும் ஸஞ்ஜீவனி. சிவனுக்கு நம்மிட முண்டாகும் கோபத்தைக் குரு போக்குவார். குருவின் கோபத்தை எவரும் போக்கடிக்க வல்லவர்களல்லர் என்பதற்கு இது உதாரணம். சிவ கோபத்தாலழிந்தான் மன்மதன். குரு ரூபமான தேவியால் எழுப்பப்பட்டான். தேவியைக் குரு ரூபமாகத் தேவி தந்த்ரம், காளிதாஸ னியற்றிய நூல்கள், ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய மனைத்தும் கூறுகின்றது.

85. **श्रीमद्वाग्भवकूटैकस्वरूपमुखपङ्कजायै नमः** — ஸ்ரீமத் வாக்பவகூடைக ஸ்வரூப முக பங்கஜாயை நம:—வாக்பவ கூடத்தை முக்யமான முகத் தாமரையாக உடையவள்.

ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீ எனும் மந்த்ரம், காயத்ரீபோல் மூன்று பாதமாக அமைந்துளது. முதல் பாதம் ஐந்து அக்ஷரங்கள். அது ஞானத்தை யளிப்பது. தேவி மந்த்ர வடிவமானவள். முதல் பாதம் தேவியின் முகாரவிந்தமாம். இது ஞான சக்தி.

86. **कण्ठाधः कटिपर्यन्तमध्यकूटस्वरूपिण्यै नमः** — கண்டாத: கடிபர்யந்த மத்ய கூட ஸ்வரூபிண்யை நம:— கழுத்திற்குக் கீழ் இடுப்புவரையில் மத்ய கூடமாக அமையப்பெற்றவள். பஞ்சதசாக்ஷரியின் மத்ய பாகம் ஆறு அக்ஷரமுள்ளது. தேவியின் கழுத்திலிருந்து இடுப்புவரை உள்ள சரீரமாக அமைந்தது. இதைக் காமராஜகூடம் என்பர். இது இச்சா சக்தி.

87. **शक्तिकूटैकतापन्नकट्यधोभागधारिण्यै नमः** — சக்தி கூடைகதாபன்ன கட்யதோ பாகதாரிண்யை நம :—சக்தி கூடத்துடன் ஒன்றுன இடுப்பிற்குக் கீழுள்ள பாகத்தை யுடையவள். இது மூன்ருவது பாதம். நான்கு அக்ஷரமுள்ளது. க்ரியா சக்தி.

88. **मूलमन्त्रात्मिकायै नमः** — மூலமந்த்ராத்மிகாயை நம :—ஸகலத்திற்கும் காரணமான மந்த்ர வடிவமானவள். கை கால்களுடன் கூடியது ஸ்தூல சரீரம். மந்த்ர வடிவமான ஸூக்ஷ்ம ரூபத்தில் தேவியின் ஸ்தூல ரூபத்தை த்யானம் செய்யும்படி மூன்று கூடமாகக்கூறி மூலமந்த்ர வடிவமானவள் என்று வர்ணிக்கப்பட்டது. வேதத்திலிருந்து உலக முண்டானது. வேதம் காயத்ரியிலிருந்து உண்டானது. தேவி காயத்ரியே பஞ்ச தசாக்ஷரீ. அதிலிருந்தே வேதமும் உலகமும் ஸகல புருஷார்த்தமும் உண்டானதால் மூலமந்த்ர ரூபிணீ எனப்படுகிருள்.

89. **मूलकूटत्रयकलेवरायै नमः**—மூல கூட த்ரய கலேபராயை நம:—மூல மந்த்ரத்திலுள்ள மூன்று கூடங்களை உடலாக உடையவள். 88,89 நாமங்களும் தேவியின் ஸூக்ஷ்ம தரமான உருவை வர்ணிக்கின்றன.

90. **कुलामृतैकरसिकायै नमः** — குலாம்ருதைக ரஸிகாயை நம:—குலாம்ருதத்தில் அதிக ரஸமுள்ளவள்.

அண்டத்தில், வெளியிலே இதுவரை தேவியின் ஸ்வ ரூபம் கூறப்பட்டது. இனி பிண்ட மெனப்படும் ஒவ் வொரு ஜீவர்களது உடலிலும் தேவியின் ரூபம் கூறப் படுகிறது. மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், ஆக்ஞா, விசுத்தி என ஆறு சக்ரங்கள் நம் உடலில் இருக்கின்றன. இதில் மூலாதாரத்தில் பாம்புபோல் 3½ சுற்று சுற்றிக்கொண்டிருப்பது குண்ட லினி சக்தியாம். இதை ப்ராணுயாமத்தால் எழுப்பி ஸுஷும்ந நாடி வழியாக ஸஹஸ்ராரத்தில் செலுத்தி அதன் நடுவிலுள்ள சந்த்ர மண்டலத்திலிருந்து பெருகும் அம்ருதத்தை யோகிகள் அருந்துவார்கள். அந்த அம்ரு தத்தில் சுவையுள்ளவள்.

பார்ப்பவன், பார்வை, பார்க்கப்படும் பொருள், என்பது 'த்ருபுடீ' எனப்படும். இஃதற்று நிற்கும் நிலைக்குக் குலாம்ருதம் எனப்பெயர். அதில் ரஸமுள்ள வள் எனும் பொருள்.

91. **कुलसंकेतपालिन्यै नमः** — குலஸங்கேத பாலின் யை நம:—குல ஸம்பந்தமான ரஹஸ்யங்களைக் காப் பவள். வேதத்திலுள்ள ரஹஸ்யம், அம்பிகா பூஜையி லுள்ள ரஹஸ்யம், சக்ர ஸங்கேதம், மந்த்ர ஸங்கேதம், பூஜா ஸங்கேதம் முதலியவைகளை ரக்ஷிப்பவள். ஒன்றை ரக்ஷிப்ப தென்பது சத்ருக்களால் அழிக்கப்படாமல் காப்பதும், அதன் ஸ்வரூபம் அழியாமல் காப்பதுமாம். இவ்விரு வகையாலும் தேவி வேத ரஹஸ்யங்களைக் காக்கிருள்.

92. **कुलाङ्गनायै नमः** — குலாங்கனுயை நம:— நற் குலத்திலுதித்தவள். உத்தம குலத்தில் பிறந்த ஸ்த்ரீகள் கண்ட புருஷர் கண்ணில் படாமல் மறைந்திருப்பார்கள். தேவியோ தன்னை எல்லோரும் காணுதபடி அவித்யை யென்ற ஆவரணத்தால் மூடப்பட்டிருக்கிருள். மற்ற வித்யைகள் தாஸி போல் பலர் கண்ணில் பட்டு பலரிடம் இருக்கும். ஸ்ரீ வித்யையோ குலஸ்த்ரீபோல் மறைவாக உத்தமரிடம் மாத்ரம் இருக்கும் என்று குலார்ணவம் என்ற நூல் கூறுகிறது.

93. **कुलान्तस्थायै नमः** — குலாந்தஸ்தாயை நம :— குலத்தினுள்ளே இருப்பவள். (1) அறிவு அறியத் தக்கது அறிதல் என்ற குலத்தின் நடுவில் உள்ள க்ஞேயமாக (அறியத் தக்கதாக) இருப்பவள். (2) ஒவ்வொரு வீட்டினுள்ளே பூஜிக்கப்படுபவள் என்றும் பொருள்.

94. **कौलिन्यै नमः** — கௌலின்யை நம :— குலம், அகுலம் இவ்விரண்டின் சேர்க்கையாக இருப்பவள். குலமென்றால் சக்தி. அகுலம் சிவன். இவ்விரண்டும் சேர்ந்த வடிவமானவள். (2) ஸுஷும்னு நாடியின் சிகரத்தில் ஸஹஸ்ரதள தாமரை இருப்பதாகவும், அதையே 'குலம்' என்றும் அங்கிருப்பவள் கௌலினீ என்றும் கூறப்படுகிறது.

95. **कुलयोगिन्यै नमः**—குல யோகின்யை நம :-குலத்தோடு சேர்ந்தவள். முற்கூறிய குலத்துடன் ஸம்பந்தமுள்ளவள்.

96. **अकुलायै नमः** — அகுலாயை நம :— 'அகுலம்' எனும் சிவ ரூப முள்ளவள். (2) ஸுஷும்னையின் சிகரத்திலிருப்பவள். (3) உடல் என்பது குலம். இது இல்லாமலிருப்பவள்.

97. **समयान्तस्थायै नमः**—ஸமயாந்தஸ்தாயை நம :— சக்தியும், சிவனும் சேர்ந்து ஸமானமா யிருக்கும் உருவுள்ளவள். (2) ஹ்ருதய கமலத்திலுள்ள சிதாகாசத்தை ஸ்ரீ சக்ரமாக நினைத்து உபாஸிப்பது 'ஸமயமாம்.' ஆங்குள்ளவள்.

98. **समयाचारतत्परायै नमः**—சமயாசார தத்பராயை நம :—ஸமயா சாரத்தில் அன்புள்ளவள். மூலாதாரத்திலிருந்து தேவியை ஷடாதாரங்களிலும், மானஸிகமாக ஷோடசோபசார பூஜை செய்வது ஸமயாசாரமாகும்.

99. **मूलाधारैकनिलयायै नमः**-மூலாதாரைக நிலயாயை நம :—மூலாதாரத்தை முக்ய இடமாகக் கொண்டவள். மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா என்ற ஆறு சக்ரங்கள் நமது உடலில் இருக்கின்றன. அடியிலிருந்து கவனித்தால், முதலில்

மூலாதாரம் குதம், லிங்கம் (மல வழி, ஜல வழி) இரண்டிற்கும் நடுவில் உளது. அங்கு நான்கு தளமுள்ள தாமரை மலர் இருக்கிறது. அதன் கர்ணிகை எனும் நடுவில் குண்டலினீ சக்தி கீழ் முகமாகப் படுத்துத் தூங்குகிறது. (2) ஸ்வாதிஷ்டானம் லிங்கத்தின் மூலத்தில் ஆறு தள தாமரையாக இருக்கின்றது. (3) மணி பூரகமென்பது நாபியில், பத்து தள தாமரையாக இருப்பது. (4) அநாஹதம் ஹ்ருதயத்தில் பன்னிரண்டு தள தாமரை வடிவமானது. (5) விசுத்தி கழுத்தில் பதினாறு தள தாமரை. (6) ஆக்ஞா புருவங்களின் நடுவில் இரண்டு தள தாமரை. இவைகளுக்கு மேல் தலையில் ஆயிரம் தளமுள்ள தாமரை வடிவமானது 'சூன்யக' சக்ரம்.

100. **ब्रह्मग्रन्थि विभेदिन्यै नमः**—ப்ரஹ்மக்ரந்தி விபேதின்யை நம:— ப்ரும்மமுடியைப் பிளப்பவள். மூலாதார்ம், ஸ்வாதிஷ்டானம் என்ற இரண்டும் அக்னி கண்டம் எனப்படும். அதற்கு மேல் நரம்புகளாலாகிய ஒரு முடிச்சு உண்டு. அதே ப்ரும்ம க்ரந்தி. அதைப் பிளந்து கொண்டு அதன் வழியாகச் சென்று, குண்டலினீ சக்தி ஸஹஸ்ராரமெனும் சந்த்ர மண்டலத்திலுள்ள அம்ருதத்தைப் பெருக்கித் திரும்பும். ஆதலால் அம்பிகை குண்டலினீ சக்தியாயிருந்து ப்ரும்ம முடியைப் பேதிக்கிருள்.

101. **मणिपूरान्तरुदितायै नमः** —மணி பூராந்த ருதிதாயை நம:—மணி பூரக மெனும் சக்ரத்தினுள் தோன்றுபவள். மணிபூர மெனும் 3-வது சக்ரத்தில் ஸமய பூஜையில் மணிகளால் அலங்கரிக்கப்படுபவள்.

102. **विष्णुग्रन्थि विभेदिन्यै नमः**-விஷ்ணு க்ரந்திவிபேதின்யை நம:—விஷ்ணு முடியைப் பேதிப்பவள். மணிபூரகம் அனுஹதம் என்ற இரு சக்ரங்களும் ஸூர்ய மண்டலமாம், அதன் மீதிருக்கும் முடிச்சைப் பிளந்து கொண்டு போகும் குண்டலினீ சக்தியா யிருப்பவள்.

103. **आज्ञाचक्रान्तरालस्थायै नमः** — ஆக்ஞா சக்ராந்தராலஸ்தாயை நம:–ஆக்ஞாசக்ரத்தின் நடுவிலுள்ளவள் இரு புருவங்களுக்கிடையே யுள்ளது ஆக்ஞாசக்ரம். அது

குருவின் இடம். குரு ஆக்ஞை செய்பவராதலால் அந்த சக்ரத்திற்கு ஆக்ஞா சக்ரமென்று பெயர்.

104. **रुद्रग्रन्थिविभेदिन्यै नमः** — ருத்ர க்ரந்தி விபேதின்யை நம :—ருத்ர க்ரந்தியைப் பேதிப்பவள். விசுத்தி ஆக்ஞா என்ற இரு சக்ரங்களும் சந்த்ரகண்டம். அதன் மீதுள்ளது ருத்ர முடி. அதையும் பிளந்து மேலே செல்லுபவள்.

105. **सहस्राराम्बुजारूढायै नमः**–ஸஹஸ்ராராம் புஜாரூடாயை நம :—ஸஹஸ்ர தள தாமரையில் ஏறினவள். தலை மீது ஆயிரம் இதழுள்ள தாமரை பிரும்ம ரந்த்ரத்தின் கீழ் இருக்கிறது. அடியிலுள்ள குண்டலினீ சக்தி வழியாய் இங்கு ஸாதகர்களால் ஏற்றி வைக்கப்பட்டவள் தேவி.

106. **सुधासाराभिवर्षिण्यै नम** :—ஸுதா ஸாராபி வர்ஷிண்யை நம :—ஸுதா ஸாரத்தை எங்கும் வர்ஷிப்பவள். ஸஹஸ்ரார பத்மத்தின் நடுவிலுள்ள சந்த்ர மண்டலத்திலிருந்து அம்ருதத்தை எல்லா நாடிகளிலும் வர்ஷிக்கும்படி செய்பவள். இங்ஙனம் நித்யம் ஸாதநம் செய்வோர் ஜரை (மூப்பு) நோய் முதலியன இல்லாமலிருப்பர்.

107. **तटिल्लतासमरुच्यै नमः** –தடில்லதா ஸமருச்யை நம :—மின்னல் கொடிக்கு ஸமமான காந்தியை யுடையவள். புருஷ ஸூக்தத்தில் 'வித்யுல்லேகை' போல் ப்ரகாசமானவள் என வேதம் வர்ணிக்கின்றது.

108. **षड्चक्रोपरिसंस्थितायै नमः** — ஷட்சக்ரோபரி ஸம்ஸ்திதாயை நம:—ஆறு சக்ரங்களுக்கு மேல் இருப்பவள்.

109. **महासक्त्यै नमः**—மஹா ஸக்த்யை நம:–உத்ஸவத்தில் ஆசை உள்ளவள். உத்ஸவம் இருவகை. பக்தர்கள் ஸ்தூலமாக அம்பாளுக்கு ஆலயத்தில் செய்வது போல நடத்தும் உத்ஸவம் பரஹ்மோத்ஸவமாகும். குண்டலினி சக்தியை எழுப்பி முறையே ஷட்சக்கரங்களையுந் தாண்டி ஸஹஸ்ராரத்திலுள்ள பரமசிவத்துடன் சேர்த்து ஆநந்திப்பது இரண்டாவதான ஆப்யந்தர

உத்ஸவம். இரண்டிலும் ஆசையுள்ளவள் என்றாலும் அந்தர்முக உத்ஸவத்தில் அதிக விருப்பமுள்ளவள். ' மஹீம் மூலாதாரே ' என ஸௌந்தர்ய லஹரீ இதை வர்ணிக்கிறது.

110. **कुण्डलिन्यै नमः**—குண்டலின்யை நம :— குண்டலினீ ரூபமாக உள்ளவள். மூலாதாரத்தில் 3½ சுற்று சுற்றிக்கொண்டு உறங்குகின்ற பாம்பு போல் சுவாஸம் விட்டுக்கொண்டிருப்பது குண்டலினீ எனப்படும். இந்த மூச்சுதான் ப்ராணன். இதைத்தான் ஸித்தர்கள் ' ஆடு பாம்பே ' என வர்ணிக்கின்றனர்.

111. **बिसतन्तुतनीयस्यै नमः**–பிஸ தந்து தனீயஸ்யை நம :—தாமரைத்தண்டிலுள்ள நூல்போல் மெல்லியவள். இதை ' நீவார சூகவத் ' என வேதம் வர்ணிக்கிறது.

குலாம்ருதைக ரஸிகா எனும் நாமம் முதல் இது வரை குண்டலினீ சக்தி கூறப்படுகிறது. மூலாதாரத்திலுள்ளபோது குழந்தை போல் சப்திப்பதால் குமாரீ எனப்படுகிறாள். அனாஹத சக்கரத்திற்கு மேல் போகும் போது ஸூர்ய கிரணத்தால் கெட்டியாகி தருணீ எனப் படுகிறாள். ஸஹஸ்ராரத்தில் தன் பதியான பரமசிவத் துடனிருக்கும்போது பதிவ்ரதா எனப்படுகிறாள். இதை " யா குமாரி " என்று அருண ச்ருதி வர்ணிக்கிறது.

112. **भवान्यै नमः** — பவான்யை நம :— சிவனுக்கு ப்ராணனை அளிப்பவள். மன்மதனுக்கு உயிரை அளித்தவள். பவனது பத்னீ எனப் பல பொருள்கள் உண்டு. இந்த நாமாவைக்கொண்டு ' பவானி த்வம் தாஸே ' என்று ஓர் அழகான கருத்தை யமைத்து ஸௌந்தர்ய லஹரியில் ஒரு ச்லோகமிருக்கிறது. அதாவது ஒரு பக்தன் தேவியின் கடைக்கண் செல்வத்தை வேண்ட " ஓ தேவியே! பவானி தாஸனான என்னிடம் கடாக்ஷத்தை அருள்வாய் " என்று வேண்டினான். கருணைக் கடலான அன்னை இவன் அழியும் செல்வத்தை விரும்புகிறான். பாவம்! நாமிவனுக்கு அழியாத ஸாயுஜ்யத்தையளிப்போம் என்று அதைத்தந்தாள் என வர்ணிக்கிறது. இங்கு பவானி என்பது அம்பாளை அழைக்கும் சொல் 'நானாக வேண்டும்' என்றும் பொருள்.

'த்வம் பவானி' 'நீயாக நாஞக வேண்டும்' என பக்தன் விரும்பியதாக வரமளித்தாள் என்றும் பொருளாகும்.

இதுவரை தேவியினுடைய பரா, ஸூக்ஷ்ம, ஸூக்ஷ்மதர, ஸூக்ஷ்மதம, என்ற ஸ்வரூபம் கூறப்பட்டது. இனி அன்னையை அடையும் வழியும் கூறப்படுகிறது.

113. **भावनागम्यायै नमः**—பாவனு கம்யாயை நம :—பாவனையால் அடையத்தக்கவள். பாவனையால் தேவியையடைய 'பாவனேபனிஷத்' வழி கூறுகிறது. சப்த ரூபமாக மந்த்ரத்தைப் பாவனை செய்வதும் அர்த்த ரூபமாக தேவியின் ஸ்வரூபத்தைப் பாவனை செய்வதுமாக பாவனை இருவகையாகும். குளவியினுல் உணவுக்காகத் தன் கூண்டில் வைக்கப்பட்ட புழு, குளவியின் சப்தத்தைக்கேட்டு சப்த பாவனையாலும் அதன் உருவை நினைத்து அர்த்த பாவனையாலும் குளவி ரூபமாகவே அதுவும் மாறுவது போல் தேவிபாவனை த்ருடமாஞல் தேவியின் தாதாத்ம்யத்தை அடைவர்.

114. **भवारण्यकुठारिकायै नमः**— பவாரண்ய குடாரிகாயை நம :—ஸம்ஸாரக் காட்டிற்குக் கோடாலி போன்றவள். பாவனையால் தேவியை உபாஸிப்பவருக்குக் காடு போல் பல வகையாலும் துன்பத்தைத் தரும் பிறப்பெனும் ஸம்ஸாரம் அகலும் என உபாஸனையின் பலன் கூறப்படுகிறது.

115. **भद्रप्रियायै नमः**—பத்ர ப்ரியாயை நம:—மங்களத்தில் விருப்பமுள்ளவள். மங்கள ரூபமான தேவி தன் பக்தருக்கும் மங்களத்தைத் தரவேண்டுமென ஆசைப்படுகிருள்.

116. **भद्रमूर्तये नमः** –பத்ர மூர்த்தயே நம:–மங்களமான உருவமுள்ளவள். ஓங்காரமும் 'அத' என்ற சப்தமும் ப்ரும்மாவின் கண்டத்தைப் பிளந்துகொண்டு கிளம்பின. ஆகையால் இரண்டும் மங்கள வடிவமானவை. தேவிக்கு ப்ரணவம் உருவம். ஆதலால் மங்களத்திற் கெல்லாம் மங்களமானவள் தேவி.

117. **भक्तसौभाग्यदायिन्यै नमः** —பக்த ஸெளபாக்ய தாயின்யை நம :— பக்தர்களுக்கு ஸெளபாக்யத்தை அளிப்பவள். ஸு-பக-இதன் தன்மை ஸெளபாக்யம். ஸ்ரீகாமம், மாஹாத்ம்யம், வீர்யம், யத்னம், ப்ரகாசம், கீர்த்தி ஆகிய இவை 'பகம்' எனப்படும். இவைகளுக்கு இருப்பிடமானவள் தேவி.

கரும்பு, அரசமரம், முளை உள்ள ஜீரகம், கொத்த மல்லி, பசும்பால், மஞ்சள் நிறமானவஸ்துக்கள், புஷ்பங் கள், உப்பு என்ற இவை ஸெளபாக்ய வஸ்துக்கள்.

118. **भक्तिप्रियायै नमः** –பக்தி ப்ரியாயை நம:–பக்தி யில் ப்ரியமுள்ளவள். ச்ரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்மார்ப்பணம் என ஒன்பது வகையான பக்திகளும் ஸாமான்ய பக்தி எனப்படும். கடவுளிடம் பேரன்பு கொள்வது விசேஷ பக்தியாம்: இந்த விசேஷ பக்தியை ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் 'அங்கோலம்நிஜபீஜ' என்ற சிவானந்தலஹரி ச்லோகத்தால் வர்ணிக்கிறார். அதாவது அழிஞ்சி விதை தன் தாய் மரத்தையும் ஊசி அயஸ் காந்தத்தையும், ஸதி பதியையும், கொடியானது மரத் தையும், நதியானது கடலையும் இயற்கையாக வந்து அடைவதுபோல நம் மனமானது பரமசிவத்தின் திரு வடியை நாடி நிற்பது சிறந்த விசேஷ பக்தி எனப்படும். இருவகையான பக்தரிடமும் தேவி அன்புள்ளவள்.

119. **भक्तिगम्यायै नमः** — பக்தி கம்யாயை நம :— பக்தியால் அடையத்தக்கவள். தேவியை யடைய ஸுலப மான அபாயமற்ற உபாயம் பக்தி மார்க்கம். 'பக்த்யா து அனன்யயா லப்ய:' என கீதா வாக்யமும் இதை நினை வூட்டுகிறது.

120. **भक्तिवश्यायै नमः** —பக்தி வச்யாயை நம :— பக்தியால் கட்டப்படுபவள். பக்தியால் க்ருஷ்ணன் அர்ஜுனனுக்கு வசமாகி தூதனாகவும் ஸாரதியாகவும் இருந்தார். கோபிகைகளது பக்தியால் கண்ணன் அவர் களுக்கு வசனாக இருந்தார். தேவியின் அம்சமே கண்ணன்.

121. **भयापहायै नमः**–பயாபஹாயை நம:–பயத்தை அகற்றுபவள். ஸுதர்சனன் என்ற பக்தனுக்கு சத்ரு பயத்தை அகற்றினுள். சுகாசார்யாளுடைய ஸம்ஸார பயத்தை நீக்கினுள். காட்டிலோ தீயிலோ நீரிலோ சத்ரு மூலமோ பீதி உள்ளவர்கள் தேவியைச் சரணமடைந்தால் அந்த பயத்தைத் தேவி போக்கடிக்கிருள். ஸம்ஸாரமே மிக பயங்கரமானது. தேவியைப் பூஜிப்பவர்களுக்கு பயம் அகன்று அபய மெனும் மோக்ஷமுண்டாகும்.

122. **शांभव्यै नमः** —சாம்பவ்யை நம :— சம்புவின் மனேவி அல்லது சாம்பவரெனப்படும் சிவபக்தர்களுக்குத் தாயாக இருப்பவள். யோக சாஸ்த்ரம் கூறியபடி சாம்பவீ என்ற முத்ரையாக இருப்பவள். கல்பஸூத்ரத்தில் சாக்த தீக்ஷை, சாம்பவீ தீக்ஷை, மந்த்ர தீக்ஷை எனக் கூறப்படும் மூன்றுவித தீக்ஷைகளில் சாம்பவீ தீக்ஷையாக இருப்பவள். நவராத்ரி பூஜையில் ஏழாவது நாள் பூஜிக்கத்தக்க எட்டாவது கன்யகையான சாம்பவீ ரூபமானவள்.

123. **शारदाराध्यायै नमः** :–சாரதா ராத்யாயை நம:– சாரதையால் பூஜிக்கப்படுபவள். சாரதா என்ற சொல்லுக்கு ஸரஸ்வதி என்றும் வசிநீ முதலிய வாக் தேவதைகள் என்றும் பொருள். சாரதா நவராத்ரியில் பூஜிக்கத் தக்கவள். ஐப்பசி, கார்த்திகை இரண்டு மாதங்களும் சரத் ருதுவாகும். இங்ஙனம் சித்திரை வைகாசி என்ற இரு மாதங்கள் வஸந்த ருது. அச்சமயம் வாஸந்த நவராத்திரி பூஜை செய்யவேண்டும். ஸ்ரீ சங்கராசார்யாளால் ச்ருங்கேரியில் ஸ்தாபிக்கப்பட்ட மடம் ஸ்ரீ சாரதா மடம். தேவி சாரதா தேவி எனப்படுவாள்.

124. **शर्वाण्यै नमः** :— சர்வாண்யை நம :— 'சர்வ' என்ற சிவ மூர்த்தியின் பத்நியானவள். ஈச்வரன் அஷ்ட மூர்த்தி எனப்படுவார். பஞ்ச பூதங்களும், சந்த்ர ஸூர்யர்களும், யாக தீக்ஷை பெற்றவரும், பரமசிவனுக்கு எட்டு சரீரங்களாம். அவைகளுக்கு பவர், சர்வர், ஈசாநர், பசுபதி, உக்ரர், ருத்ரர், பீமர், மஹான் எனப் பெயர். அதில் சர்வ என்ற பூமி ரூபமான மூர்த்தியின் பத்னீ சர்வாணீ என்பவள்.

125. **शर्मदायिन्यै नमः** — சர்ம்தாயின்யை நம :— ஸுகத்தைக் கொடுக்கிறவள். தன்னை அடுத்தவருக்கு அன்னை யளிப்பதுபோல் மற்றவரால் ஸுகந் தர முடியா தென்பது ப்ரஸித்தம்.

126. **शांकर्यै नमः** –சாங்கர்யை நம:–சங்கருடைய பத்நீ. இதுவும் அம்பாள் ஸுகமளிப்பவள் எனக் குறிக்கிறது. தேவி எப்போதும் தேவனை விட்டுப் பிரிவதில்லை. ஸ்ருஷ்டி ஸ்திதி லயம் என்ற மூன்று தொழிலாலும் உலகிற்கு இன்பமளிப்பதால் விஷ்ணுமாயா, யோக நித்ரா, ஜகன்மயீ, சாங்கரீ, ருத்ராணீ என தேவர்கள் அன்னையைத் துதிக்கின்றார்கள்.

127. **श्रीकर्यै नमः** — ஸ்ரீகர்யை நம :— ஸ்ரீயைக் கொடுப்பவள். ஸ்ரீ என்பது செல்வம், அழகு, மங்களம், காந்தி, காம்பீர்யம் முதலியவைகளைக் குறிக்கும். அவை எல்லாவற்றையும் விரும்பிய பக்தருக்கு அன்னை அளிப்பவள். தேவி சிவஸ்வரூபிணி என்பது மாத்திரமல்ல. தேவியின் அம்சமே மஹாவிஷ்ணுவுமாவர். ஆதலால் ஸ்ரீகரர் என்ற விஷ்ணுவின் நாமாவும், நாராயணீ, முகுந்தா, கோவிந்தரூபிணீ, வைஷ்ணவீ, விஷ்ணுரூபிணீ என்ற நாமாக்களும் தேவிக்குப் பொருந்தும்.

128. **साध्व्यै नमः**–ஸாத்வ்யை நம:-பதிவ்ரதையாய் உள்ளவள். தக்ஷன் பிதாவாக உள்ளபோது தன் பதிக்குச்செய்த அபசாரத்தைப் பொறுக்காமல் அவன் காரணமாக உண்டான தன்னுடலைத் துறந்தாள். அன்றியும் லக்ஷ்மீ செல்வத்திற்கும், ஸரஸ்வதீ கல்விக்கும் தேவதைகளாதலால் தனிகனை லக்ஷ்மீபதி என்றும், வித்யாவானை வாசஸ்பதி என்றும் கவிகள் கூறுவர். அங்ஙனம் தேவியைக் கூற அவகாசமில்லாத மஹா பதிவ்ரதை தேவி. "களத்ரம்" என்ற ஸௌந்தர்ய லஹரீச்லோகம் இதை விளக்குகிறது.

129. **शरच्चन्द्रनिभाननायै नमः** — சரச்சந்த்ர நிபானனாயை நம :—சரத்கால சந்த்ரன்போன்ற முகமுள்ளவள். சரத்காலத்திய தேவி பூஜா காலத்திலுள்ள சந்த்ரனுக்கு

ஒரு தனி சோபை. அதனுல் அந்த சரத் சந்த்ரன் தேவி யின் முகத்திற்கு உவமை கூறும் பாக்கியத்தைப் பெற்ருன்.

130. **शातोदर्यै नमः** — சாதோதர்யை நம ;— நுட்ப மான வயிறு உள்ளவள். உதரம் என்ற சொல் வயிற் றையும் இடுப்பையும் கூறும். ஸாமுத்ரிகா லக்ஷணம் அமையப்பெற்ற அன்னையின் வயிறும் இடையும் மிக நுட்பமானவை. ஹிமவானிடம் நூற்றுக் கணக்கான குஹை இருப்பதால் அவருக்கு சதோதரன் என்று பெயர். அவனுடைய பெண் 'சாதோதரி' என்றும் பொருள் படும்.

131. **शान्तिमत्यै नमः** — சாந்திமத்யை நம :— பொறுமையுள்ளவள். பக்தர்கள் செய்யும் அபசாரங் களைப் பொறுத்தருள்பவள். புத்ரர் அயோக்யராஞலும் தாய் ஒருபொழுதும் கெட்டவளாக யிருப்பதில்லை என தேவி அபராதக்ஷமா ஸ்தோத்ரமும், பல் முளைத்த குழந்தை ஸ்தனத்தைக் கடித்தாலும் தாய் சேயிடம் அன்பே பாராட்டுகிருள் என தேசிகர் நன்மொழியும் கூறுகின்றன.

132. **निराधारायै नमः** —நிராதாராயை நம:—ஆதார மற்றவள். எல்லோருக்கும் ஆதாரமாக உள்ளவள் தேவி. அவளுக்கோ வேறொன்றும் ஆதாரமில்லை. ஆதா ரம் தேவையுமில்லை. 'நிராதாரா' எனப்படும் பூஜா விசேஷ வடிவமானவள்.

தேவி பூஜை 'பாஹ்யம்,' 'ஆந்தரம்' என இருவகை. அதில் பாஹ்ய பூஜையில் வைதிகம் தாந்த்ரிகம் என இரு விதமுண்டு. ஆந்தரபூஜை ஸாதாரா, நிராதாரா (ஆதரத் துடன் கூடியது, ஆதாரமற்றது) என்று இரண்டு பிரிவு கள். குரு உபதேசித்தபடி மந்த்ரமயமாக மாதாவைப் பாவனை செய்து பூஜிப்பது 'ஸாதாரா' எனப்படும். 'ஸாதாரா' பூஜாபலத்தால் மந்த்ரம் மறைந்து ஞானத் தால் தோன்றும் தேவியை ஏகாக்ரமாகப் பூஜிப்பது 'நிராதாரா' என்ற பூஜையாம். இதில் மனம் அம்பாளது திவ்ய உருவில் லயப்படுவதால் இது மிக விசேஷ சிறந்த உத்தம பூஜையாகும்.

133. **निरञ्जनायै नमः** — *நிரஞ்ஜனாயை நம;*—மாசற்றவள். அஞ்ஜநம் எனில் மை. அது கறுப்பானது. கறுப்பு அக்ஞானம் அல்லது மாயையின் லக்ஷணம். ப்ரகாசமின்றி இருள் சூழ்ந்ததால் அவித்யை கறுப்பாகும். அவித்யை, பற்று முதலியன இல்லாதவள் தேவி.

134. **निर्लेपायै नमः** — *நிர்லேபாயை நம :*— கர்ம ஸம்பந்தமில்லாதவள். லேபம் எனில் பற்று, பூச்சு என்பது பொருள். ஞான ஸ்வரூபிணியாய் இருப்பதால் யாதொரு பற்றுமில்லாதவள். கீதையும் 'ந மாம் கர்மாணி லிம்பந்தி' 'லிப்யதே ந ஸ பாபேன' என்று இதை வர்ணிக்கிறது. பகவத் ஸ்வரூபத்தை உணர்ந்தவர்க்கே கர்மலேபமில்லையெனின் பரப்ரும்ம ஸ்வரூபிணியான தேவிக்குக் கர்ம லேபம் ஏது ?

135. **निर्मलायै नमः** — *நிர்மலாயை நம :*— மலம் அல்லது அழுக்கற்றவள். தேஹமலம், மனோமலம், அவித்யாமலம் என மலம் மூவகையாம். இவைகளில் எந்த மலமுமில்லாத நிர்மலமான ஸ்வரூபம் உள்ளவள் அன்னை.

136. **नित्यायै नम** :—*நித்யாயை நம :*— எப்போதுமிருப்பவள். இறந்த காலம் நிகழ்காலம் வருங்காலம் என்ற முக்காலங்களிலும் எத்தகைய மாறுதலு மில்லாமல் ஒரே ரூபமாக இருப்பவள்.

137. **निराकारायै नमः** —*நிராகாராயை நம :*— உருவமில்லாதவள். ஸத் சித் ஆனந்தமென்ற ரூபமாய் தேவி எங்குமிருப்பதால் நம்மைப்போல் கர்மாதீனமான குணமயமான உடல் இல்லாதவள். ஆனால் பக்தானுக்ரஹத்திற்காக ஸ்வேச்சையாக அப்ராக்ருதமான சரீர மெடுப்பவள். பற்பல அவதாரம் செய்பவள்.

138. **निराकुलायै नमः** —*நிராகுலாயை நம :*— கலக்கமற்றவள். அவித்யைக்கு அன்னை காரணமாயினும் அதனால் ஏற்படும் விக்ஷேபம் ஆவரணம் முதலியவை அற்றவள். கலக்கமுடையவர்களால் நெருங்க முடியாதவள் என்றும் பொருள்.

139. **निर्गुणायै नमः** —நிர்குணாயை நம :— ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களில்லாதவள். 'எந்த குணமு மில்லாதது பரப்ரும்மம்' என்பது அத்வைத ஸித்தாந்தம். நீசமான குணங்களில்லாததென்று த்வைதிகளும் விசிஷ்டாத்வைதிகளும் கூறுவர்.

140. **निष्कलायै नमः** — நிஷ்கலாயை நம :— அவயவங்களில்லாதவள். அகண்ட ரூபிணி.

141. **शान्तायै नमः** — சாந்தாயை நம :— சாந்தியுள்ளவள், 'நிஷ்களம் நிஷ்க்ரியம் சாந்தம்' என உபநிஷத்தின் பொருள் மாத்திரமல்ல, அந்த சப்தமும் அங்ஙனமே இங்கு கூறப்பட்டிருக்கிறது.

142. **निष्कामायै नमः** —நிஷ்காமாயை நம :—விருப்பமில்லாதவள். ஸமஸ்த காமனைகளையும் பக்தருக் களிப்பவள். தேவியின் உத்தம பக்தருக்கே ஒருவித காமனையு மில்லாதிருக்கும்பொழுது அன்னைக்கு ஏது காமம்.

143. **निरुपप्लवायै नमः** —நிருபப்லவாயை நம :—அழிவில்லாதவள். துன்பம் இல்லாதவள். காமம் உள்ளவர்க்குத் துன்பம் உண்டாவது இயற்கை. தேவிக்குக் காமமுமில்லை. துன்பமுமில்லை.

144. **नित्यमुक्तायै नमः** — நித்ய முக்தாயை நம :— எப்போதும் பந்த மில்லாதவள். மோக்ஷ வடிவமாக இருப்பவள்.

145. **निर्विकारायै नमः** — நிர்விகாராயை நம :— மாறுதலில்லாதவள். பிறப்பது, இருப்பது, வளர்வது, முதுமை பெறுவது, குறைவது, அழிவது போன்ற மாறுதல் உடலுக்குண்டு. ஸாங்க்ய மதத்தினர் கூறுவது 24 விகாரங்கள். எத்தகைய விகாரமுமில்தாவள் தேவி.

146. **निष्प्रपञ्चायै नमः** —நிஷ் ப்ரபஞ்சாயை நம :— ப்ரபஞ்சத்திற்குக் கட்டுப்படாதவள். உலகம், பெருக்கம், தோற்றம் முதலிய பலபொருளுள்ளது ப்ரபஞ்சம் என்ற சப்தம். எத்தகைய ப்ரபஞ்சத்திற்கும் உட்பட்டவளல்ல.

147. **निराश्रयायै नम :** — நிராச்ரயாயை நம :— வேருென்றையும் அண்டாதவள். உலகிலுள்ள ஸமஸ்த வஸ்துக்களும் தேவியை அண்டியே இருக்கின்றன. தனக்குத்தானே ஆச்ரயமாயிருப்பவள் தேவி. இதை 'ஸ்வே மஹிம்நி ப்ரதிஷ்டிதா' என்று ச்ருதி விளக்குகிறது.

148. **नित्यशुद्धायै नमः** — நித்ய சுத்தாயை நம:— எப்போதும் சுத்தமாயிருப்பவள். சில வஸ்து, தான் சுத்தமா யிருந்தாலும் காலத்தினுலோ, மற்ருென்றின் சேர்க்கையினுலோ, அசுத்தமாவதைக் காணலாம். தேவிக்கு மாலின்ய மென்பது எதனுலும் எக்காலத்திலும் கிடையாது.

149. **नित्यबुद्धायै नमः** — நித்ய புத்தாயை நம :— எப்போதும் அறவு வடிவமானவள். ஸ்ரீ சங்கராசார்யாள் சாரீரக பாஷ்யத்தில் ஆத்மாவை நித்ய சுத்த புத்த முக்த ஸ்வரூபன் என வர்ணிக்கிருர்கள். நித்ய சுத்தர் நித்ய புத்தர் என இரு புத்தமத ஆசார்யர்கள். ஸ்ரீ தேவி உபாஸகர்கள் ஆனதால் இப்பெயர் பெற்றனர் என்றும் கூறுவர்.

150. **निरवद्यायै नमः** — நிரவத்யாயை நம :— ஒரு குற்றமும் இல்லாதவள். அவத்ய என்ற சொல்லுக்குக் குறை, குற்றம், தோஷம், பாபம் அவித்யை முதலிய பல பொருள்கள் உண்டு. எந்த வகையான தோஷமும் இல்லாதவள், தேவி.

151. **निरन्तरायै नमः** — நிரந்தராயை நம :—இடைவெளி இல்லாதவள். உபநிஷத் கூறுகிறபடி வஸ்த்ரத்தில் குறுக்கு நூல், நெடுக்கு நூல் சேர்ந்திருப்பதுபோல் அம்பாளின் ஸ்வரூபம் (ஓதப்ரோத நியாயமாக) எங்கும் நிறைந்திருப்பதால் இடைவெளி இல்லாதது.

152. **निष्कारणायै नमः** — நிஷ்காரணுயை நம :— தனக்கு வேறு காரணம் இல்லாதவள். காரணம் இன்றி காரியம் இல்லை என்றபடி ஒவ்வொன்றிற்கும் ஒரு காரணம் உண்டு. எல்லா கார்ய காரணங்களுக்கும் தேவியே காரணமானவள். தேவிக்கு வேறு எதுவும் காரணம் இல்லை.

153. **निष्कलङ्कायै नमः** — *நிஷ்களங்காயை நம :—* களங்க மில்லாதவள். சுத்தமான சந்த்ர மண்டலத்தில் கறுப்பாக இருப்பது களங்கம் எனப்படும். நல்ல கீர்த்தி வாய்ந்த ஒருவருக்கு அபக்யாதி ஏற்பட்டால் அது ஒரு களங்கம். நல்ல குடும்பத்தில் ஒரு பொல்லாதவன் தோன்றினால் அது குலத்திற்கு ஒரு களங்கமாகும். எத்தகைய களங்கமும் இல்லாதவள் தேவி.

154. **निरुपाधये नमः** — *நிருபாதயே நம :—* உபாதி இல்லாதவள். ஸ்படிகம் வெளுப்பானது. அதன் அருகில் ஒரு சிவந்த புஷ்பத்தைக் கொண்டுவந்தால் ஸ்படிகம் சிவப்பாகிறது. அப்படி சுத்த சைதன்யமானது அவித்யையில் ஸம்பந்திக்கும்போது அது ஈச்வரன் எனப்படுகிறது. அப்போது ஈச்வரன் ஸோபாதிகன். அதாவது உபாதியுடன் கூடியவன். அங்ஙனம் இல்லாததால் தேவி நிருபாதிகா. அவளைவிட அவித்யையோ வேறு கண்ணாடி போன்ற வஸ்துவோ இல்லை.

155. **निरीश्वरायै नमः** — *நிரீச்வராயை நம :—* தனக்குமேல் ஈச்வரன் இல்லாதவள். ஸர்வ வஸ்துக்களையும் அடக்கி ஆள்பவன் ஈச்வரன். தேவிக்குமேல் யாரும் இல்லாததால் தேவி நிரீச்வரா. காமேச்வரன் தேவிக்குப் பதியானாலும் தேவிக்கு அவர் ஸ்வாதீனமானவர். சிவனும் சக்தியும் ஒன்றே என்பதை ஸ்வாதீன வல்லபா, சிவசக்தி ஐக்ய ரூபிணி என்ற நாமாக்கள் கூறுகின்றன.

156. **नीरागायै नमः** — *நீராகாயை நம :—* ஆசையற்றவள். தேவியே இச்சாசக்தி ரூபமாய் இருப்பதால் அவளுக்கு வேறு இச்சையில்லை. ராகஸ்வரூப பாசாட்யா என்ற நாமம் ராகமுள்ளதாகக் கூறுகிறது. அது ஸகுண விஷயம். இது நிர்க்குண விஷயம்.

157. **रागमथन्यै नमः** —*ராகமதன்யை நம:*—ஆசையைப் போக்குபவள். ப்ரவ்ருத்தி மார்க்கத்திலுள்ளோருக்கு ஆசைப்படும் பொருளைத் தந்து ஆசையை அகற்றுகிறாள். வேதாந்திகளுக்கு வைராக்யத்தைத் தந்து மோக்ஷ ஆசையைத் தவிர மற்றவைகளை அகற்றுபவள்.

158. **निर्मदायै नमः** —நிர்மதாயை நம:—மதம் இல்லாதவள். மதாலஸா. மதத்தால் மந்தமானவள் என்பது முன்போல் ஸகுண விஷயம். இது நிர்க்குணம் ஸகுணம் இரண்டிற்கும் பொருத்தமானது. ஸகுணத்தில் கர்வம் இல்லாதவள் என்று பொருள்.

159. **मदनाशिन्यै नमः** — மத நாசின்யை நம:— மதத்தை நாசம் செய்பவள். பக்தர்களது கர்வத்தை அகற்றுபவள். இந்த்ரனுக்கு உண்டான கர்வத்தைத் தூர்வாஸர் மூலமாக அகற்றினாள். மதன—ஊமத்தையை, அசினீ — ஏற்றுக்கொள்பவள். அதாவது ஊமத்தம் பூவில் ப்ரியம் உள்ளவள் என்றும் ஒரு பொருள் உண்டு.

160. **निश्चिन्तायै नमः**—நிஸ்ச்சிந்தாயை நம: சிந்தை இல்லாதவள். ஒரு விஷயத்தைக் கவலையோடு எண்ணுவது சிந்தை எனப்படும். தேவிக்கு எந்த வகையான சிந்தையும் கிடையாது.

161. **निरहंकारायै नमः** — நிரஹங்காராயை நம :— அஹங்காரம் இல்லாதவள். பொதுவாக நான் என்ற கர்வம் அஹங்காரம் எனப்படும். ஸத்வ குணத்துடன் சேர்ந்த அஹங்காரம் வைகாரிகம், ரஜஸ்ஸுடன் சேர்ந்தால் தைஜஸம், தமஸ்ஸுடன் கலந்தால் பூதாதி எனப்படும். எந்த அஹங்காரமும் இல்லாதவள் தேவி.

162. **निर्मोहायै नमः**–நிர்மோஹாயை நம:–மோஹம் இல்லாதவள். அபூர்வமானதைக் கண்டு மயங்குவது மோஹமாகும். தேவிக்கு அபூர்வமான வஸ்துவே இல்லை.

163. **मोहनाशिन्यै नमः**—மோஹநாசின்யை நம:— மோஹத்தை அழிப்பவள். பக்தர்கள் எதையேனும் கண்டு மோஹிக்காதபடி திவ்ய ஞானத்தைத் தந்து மோஹத்தை நீக்குபவள். 'தத்ர கோ மோஹ: கச்சோக:' என்ற உபநிஷத் இதை விளக்குகிறது.

164. **निर्ममायै नमः** — நிர்மமாயை நம :—மமதை இல்லாதவள். என்னுடையது இது என்ற எண்ணமே மமதை யாகும். ஸகுணத்தில் என்னுடையவன் பக்தன் என்ற எண்ணம் இருந்தாலும் நிர்குணத்தில், நான் மற்றது என்ற பேதபுத்தி இல்லாததால் மமதையற்றவள்.

165. **ममताहन्त्र्यै नमः** — மமதாஹந்த்ர்யை நம:— மமதையை நீக்குபவள். பக்தர்களுக்கு நானே ப்ரம்மம் என்ற அகண்ட ஏக ஞானத்தைத் தந்து மமதையை அகற்றுபவள்.

166. **निष्पापायै नमः** — நிஷ்பாபாயை நம :— பாபமற்றவள். கேவல சுத்தவடிவமான தேவிக்குப் பாப ஸம்பந்தமேது?

167. **पापनाशिन्यै नमः** — பாபநாசின்யை நம :— பாபத்தைப் போக்குபவள். தேவியின் மஹா மந்த்ரத்தை ஜபித்தாலும், ஸ்ரீ சக்ரபூஜை செய்தாலும், பக்தர்களது பாபத்தைத் தேவி நாசம் செய்வாள். பக்தர்களின் பாபமெல்லாம் தேவி பூஜையால் புண்யமாய்விடும் என புராணம் கூறுகிறது. (யத் ரூப த்யான மாத்ரேண துஷ்க்ருதம் ஸுக்ருதாயதே.)

168. **निष्क्रोधायै नम** :—நிஷ்க்ரோதாயை நம :— கோபம் இல்லாதவள். இயற்கையாகக் கோபமில்லாதவள். பக்தருக்குத் தீங்கு இழைப்பவரிடம் கோபம் கொள்ளுபவள்.

169. **क्रोधशमन्यै नम** :—க்ரோத சமன்யை நம :— கோபத்தை நாசம் செய்பவள். கோபத்துடன் செய்யப்படும் தானம், யக்ஞம், ஜபம், பூஜை அனைத்தும் வீணாகும். ஆதலால் பக்தருக்குக் கோபம் வந்தால் அதை அழிப்பாள். அதாவது கோபமில்லாதபடி காப்பவள்.

170. **निर्लोभायै नमः** — நிர்லோபாயை நம :— பேராசை இல்லாதவள்.

171. **लोभनाशिन्यै नमः**:— லோபநாசின்யை நம :— பேராசையைப் போக்குபவள். காமம், கோபம், லோபம் இம் மூன்றும் நரகத்தின் வாசற்படிகள். ஆதலால் அதை விட வேண்டும் என கீதை கூறுகிறது. இவைகளில் ஒவ்வொன்றும் அநர்த்தத்தை விளைவிப்பதாம். மூன்றும் சேர்ந்தால் வேறு வினை வேண்டாம்.

172. **निस्संशयायै नम** :— நிஸ்ஸம்சயாயை நம :— ஸந்தேகம் இல்லாதவள்.

173. **संशयघ्न्यै नमः** — ஸம்சயக்ன்யை நம :—ஸந்தேகத்தைப் போக்குபவள். எதிலும் ஸதா ஸந்தேகம் கொள்வது ஒரு துர்க்குணமாகும். "அறிவில்லாதவன், நம்பிக்கை யில்லாதவன், ஸம்சயமுள்ளவன் நாசமடைவான்" என கீதை கூறுகிறது. அன்றியும், குரு, தான் ஒரு ஸந்தேகமுமில்லாமல் விஷயத்தை அறிந்து சிஷ்யனது ஸந்தேகத்தை அகற்றவேண்டும். குருவும் சிஷ்யனும், பகவதியும் பக்தனும் ஒன்றே. "தேசிக ரூபேண தர்சிதாப்யுதயாம்" என்றபடி தேவி குரு ரூபிணி என்றும் பொருள் பொருந்தும்.

174. **निर्भवायै नमः** — நிர்பவாயை நம :—பிறப்பு இறப்பு இல்லாதவள்.

175. **भवनाशिन्यै नमः**:–பவநாசின்யை நம :–பிறப்பு இறப்பு இவைகளை அகற்றுபவள். நோயாளியாயுள்ளவன் பிறர் நோயை அகற்றுவது எப்படி? தேவி தான் பிறப்பில்லாதவள். அண்டியவருடைய பிறப்பு இறப்பு இவைகளையும் அகற்றுபவள். ஜனன மரணமுள்ள தெய்வம் முக்தி அளிக்க முடியாது. "ஸம்ஸாரஸாகராத் அஸ்மாத் உத்தராமி அசிரேண து" என தேவீபாகவத்தில் கூறுகிறாள் தேவி.

176. **निर्विकल्पायै नमः**:–நிர்விகல்பாயை நம;—விகல்பம் இல்லாதவள். (1) கர்ம காண்டத்தில் வேதம் இரண்டு விஷயங்களைக் கூறினால், இதையும் செய்யலாம், அதையும் செய்யலாம் எனக்கூறுவது 'விகல்பம்' எனப்படும். அப்படிப்போல், தேவியும் ஒரு தேவதை. இதர ப்ரும்மாதிகளும் தேவர். இதில் எவரையேனும் உபாஸிக்கலாம் என்பது கிடையாது. தேவியே சர்வ சக்திவாய்ந்த ஒரே தேவதை. (2) நேர் மாறானதை விகல்பம் என்பர். தேவிக்கு மாறான வஸ்து கிடையாது. ஆதலால் தேவி நிர்விகல்பா.

177. **निराबाधायै नमः**:—நிராபாதாயை நம :—எதனாலும் பாதிக்கப்படாதவள். பொய் மெய்யால் பாதிக்கப்படும். எளியவர் வலியவரால் பாதிக்கப்படுபவர். தேவியோ ஸர்வ வல்லமை வாய்ந்த ஸத்ய வஸ்து. ஆதலால் எதனாலும் பாதிக்கப்படாதவள்.

178. **निर्भेदायै नमः—** *நிர்பேதாயை நம :—* பேதமில்லாதவள். எந்த வகையான பேதமும் இல்லாதவள்.

179. **भेदनाशिन्यै नमः —** *பேதநாசின்யை நம :—* பேதத்தை நாசம் செய்பவள். நான்வேறு தெய்வம்வேறு உலகம்வேறு என்ற பேதத்தை அகற்றி எங்கும் ஒரே அபேதமான ஆத்மா நான் என அறிவிப்பவள் தேவி.

180. **निर्नाशायै नमः —** *நிர்நாசாயை நம :—* நாசமில்லாதவள்.

181. **मृत्युमथन्यै नमः—** *ம்ருத்யு மதன்யை நம :—* யமனைச் சிக்ஷிப்பவள். யமன் என்பது மரணத்திற்கு அறிகுறி. பக்தருக்கு மரணமில்லாமல் செய்பவள் எனில், தேவிக்கு ஏது மரணம் ? சிவ வடிவையாயிருந்து மார்க்கண்டேயனுக்காக யமனைச் சிக்ஷித்தவள்.

182. **निष्क्रियायै नमः—** *நிஷ்க்ரியாயை நம :—* கர்மா இல்லாதவள். செய்யவேண்டியது, செய்யத்தகாதது என இருவகையான கர்மாக்களைச் சாஸ்த்ரம் கூறுகிறது. அவ் விரண்டும் இல்லாதவள் தேவீ. கர்மாவைச் செய்பவனே கர்த்தாவாம். தேவி கர்மாவைச் செய்யாமலே உலக ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களுக்குக் கர்த்தாவாக ஆவாள்.

183. **निष्परिग्रहायै नमः—** *நிஷ்பரி க்ரஹாயை நம :—* பரிக்ரஹம் இல்லாதவள். பரிக்ரஹம் எனில், பரிஜனம், தனம் முதலியனவாம். தேவி சுத்த அகண்ட பரிபூர்ண வஸ்து. ஆதலால் முற்கூறியவைகளில் யாதொன்றும் கிடையாது. ஸகுண ஸ்வரூபத்திலோ, இவைகள் எல்லாம் உண்டு என்பது ப்ரஸித்தமாம்.

184. **निस्तुलायै नम :—** *நிஸ்துலாயை நம:—* ஈடு இல்லாதவள். தேவிக்கு ஸமமானவர் யாருமில்லை. தேவியைத்தவிர வேறு பொருள் இருந்தாலல்லவோ உபமை கூறமுடியும் ?

185 **नीलचिकुरायै नम :—** *நீல சிகுராயை நம :—* கறுத்த கூந்தல் உள்ளவள்.

186. **निरपायायै नमः**—நிரபாயாயை நம :—அபாய மில்லாதவள்.

187. **निरत्ययायै नमः**—நிரத்யயாயை நம :—நாசமில்லாதவள். உலகத்தின் நன்மைக்காகத் தான் ஏற்படுத்திய தர்ம வரம்பைக் கடக்காதவள் என்றும் கூறலாம்.

188. **दुर्लभायै नमः** — துர்லபாயை நம :— ஸுலபமாகக் கிடைக்காதவள்.

189. **दुर्गमायै नमः** —துர்க்கமாயை நம :— நெருங்க முடியாதவள். உபாஸகர்கள் தவிர மற்றவர்களால் தேவியை அடையமுடியாது. 'அதுர்கமா' என்றும் பதம் பிரித்து, 'ஸுலபமாக அடையத்தக்கவள்' என்றும் கூறுவார் உண்டு

190. **दुर्गायै नमः** — துர்காயை நம :–துர்க்கா என்ற ரூபமுள்ளவள். துக்கத்திலிருந்து இந்த்ராதி தேவர்களை விடுவித்ததாலும், துர்க்கமன் என்ற அஸுரனைக்கொன்றதாலும், காசியில் ஸுபாஹு என்ற அரசனது ப்ரார்த்தனைக்கு இணங்கி, துர்க்கா ரூபமாக இருப்பதாலும், துர்க்கை எனக் காரணப்பெயர் ஏற்பட்டது. துர்க்கை பூஜா கல்பம், அஷ்டோத்தரம், ஸஹஸ்ரநாமம் முதலியன தனியே இருக்கின்றன. 9 வயதுள்ள கன்யகைக்கு துர்க்கா என்று பெயருண்டு.

191. **दुःखहन्त्र्यै नमः** — துக்கஹந்த்ர்யை நம:—துக்கத்தைப் போக்குபவள். தேவீ பக்தர்களுக்கு எந்த வகையான துக்கமும் இல்லை.

192. **सुखप्रदायै नमः**—ஸுகப்ரதாயை நம:—ஸுகத்தைத் தருபவள். தேவி பக்தர்களது துக்கத்தை அகற்றுவது மாத்ரம் இல்லாமல், இன்பத்தையும் தருபவள். இஹ பர இன்பத்தையும் மோக்ஷ ஆனந்தத்தையும் அளிப்பவள் தேவி.

193. **दुष्टदूरायै नमः** —துஷ்ட தூராயை நம :—துஷ்டர்களுக்குத் தூரத்திலிருப்பவள். துர்க்குணம் முதலிய தோஷம் உள்ள துஷ்டர் தேவியை அடைய முடியாது.

உடல், வாக்கு, மனம் இம் மூன்று தோஷமும் எவருக்கு இல்லாமல் இருக்கிறதோ அவர்களுக்குத் தேவி அருகிலேயே இருக்கிறாள்.

194. **दुराचार शमन्यै नमः**—துராசார சமன்யை நம: துராசாரங்களை அடக்குபவள். சாஸ்த்ரம் கூறியதும், ஸத்துக்கள் அனுஷ்டித்ததும் ஸதாசாரம் எனப்படும். அதற்கு மாறானது துராசாரம். தேவியை உபாசித்தால் நமது துராசாரங்கள் அகலும்.

195. **दोषवर्जितायै नमः**—தோஷவர்ஜிதாயை நம :—தோஷம் அற்றவள். தேவியினிடம் எந்த வகையான தோஷமும் இல்லை.

196. **सर्वज्ञायै नमः**—ஸர்வக்ஞாயை நம:—எல்லாம் அறிந்தவள். உபநிஷத்துகள் "ஸர்வக்ஞன்" என பரமாத்மாவை வர்ணிக்கின்றன. சிவனையும் **ஸர்வக்ஞ:** என்று கூறுவதால், சிவபத்னி **ஸர்வக்ஞை** ஆவள்.

197. **सान्द्र करुणायै नमः**—ஸாந்த்ர கருணாயை நம:—நிறைந்த கருணை உள்ளவள். தந்தையைவிட, தாய்க்கே சேயிடம் அதிக அன்பு உண்டு என்பது ப்ரஸித்தம்.

198. **समानाधिक वर्जितायै नमः**—ஸமானாதிக வர்ஜிதாயை நம:—தேவிக்கு ஸமமானவரும் அதிகமானவரும் இல்லை. ஸமமானவரே இல்லை என்றால் அதிகமானவர் ஏது? இந்த நாமம் நேராக வேதத்தால் வர்ணிக்கப்பட்டது. பெரும்பாலும் தேவீ நாமாக்கள் அனைத்துமே ச்ருதி, ஸ்ம்ருதி, புராண ப்ரஸித்தமானவை.

199. **सर्वशक्तिमय्यै नमः**—ஸர்வ சக்திமய்யை நம :—ஸமஸ்த சக்தி வடிவமானவள். பாலா, பகளா, வாராஹீ, முதலிய எல்லா சக்தியாகவும் இருப்பவள் லலிதா தேவி. எல்லோரிடமும் தேவியின் சக்தி பரவி இருக்கிறது என்றும் பொருள்.

200. **सर्वमङ्गलायै नमः**—ஸர்வ மங்களாயை நம:—ஸர்வமங்களமானவள். எல்லோருக்கும் எல்லா மங்களங்களையும் தருவதாலும் ஸர்வ மங்களா எனப்படுகிறாள்.

" ஸர்வமங்கள மாங்கள்யே, சிவே, ஸர்வாத்த ஸாதிகே சரண்யே த்ரயம்பிகே தேவி, நாராயணி நமோஸ்து தே" என்றும் வர்ணிக்கப்படுகிருள்.

201. **सद्गतिप्रदायै नमः**:-ஸத்கதிப்ரதாயை நம :-நல்ல கதி அளிப்பவள். ஸ்வர்க்கம், கைலாஸம், வைகுண்டம், தேவியின் இருப்பிடமான சிந்தாமணி க்ருஹம். மோக்ஷம் ஆகிய அனைத்தும் " ஸத்கதி " என்பதன் பொருளாகும். அவரவர் புண்யத்திற் கேற்றபடி அந்தந்த லோகத்தை அளிப்பவள் தேவி.

202. **सर्वेश्वर्यै नमः** — ஸர்வேச்வர்யை நம :— எல்லோருக்கும் ஈச்வரீ. ஒருவர் தனேச்வரர். ஒருவர் கிரீச்வரர். ஒருவர் கணேச்வரர். தேவியோ எல்லாவற்றிற்கும் ஈச்வரீ. தேவிக்குமேல் அடக்கி ஆளும் சக்திவாய்ந்த வேறு ஈசன் இல்லை.

203. **सर्वमय्यै नमः**— ஸர்வ மய்யை நம :— எல்லா ரூபமாயும் இருப்பவள். தேவி எங்கும் எல்லா வஸ்துக்களுடனும் மாறுதல் இன்றிக் கலந்திருப்பவள். தேவியை அடைய ஆறு மார்க்கங்கள் இருக்கின்றன. அவை " ஷடத்வா " எனப்படும். 1. பதாத்வா. 2. புவனுத்வா. 3. வர்ணுத்வா. 4. தத்வாத்வா. 5. கலாத்வா. 6. மந்த்ராத்வா என்பனவாம். (1) மந்த்ரங்களில் உள்ள பதங்களையே பகவான் அல்லது தேவி என உபாஸிப்பது " பதாத்வா " எனப்படும். (2) 224 புவனங்கள் இருக்கின்றன. அவைகள் அனைத்தையும் தேவியினுடைய ரோமம் என உபாஸிப்பது " புவனுத்வா " (3) அ முதல் க்ஷ வரை உள்ள எழுத்துக்கள் தேவியினுடைய தோல் என உபாஸிப்பது "வர்ணுத்வா" (4) மண் முதல் சிவம் வரையில் உள்ள தத்துவங்களை உபாஸிப்பது " தத்துவாத்துவா" (5) கலாவடிவமாக பகவதியை உபாஸித்தல் "கலாத்வா" (6) 7 கோடி மஹா மந்த்ரங்களாக உபாஸிப்பது "மந்த்ராத்வா" இந்த ஆறில், பூமி முதல் சிவன் வரையிலுள்ள தத்துவங்களோடு அபின்னமாக இருப்பதால் தேவி " ஸர்வமயி " எனப்படுகிருள் என்றும் அர்த்தம்.

204. **सर्वमन्त्रस्वरूपिण्यै नमः** — ஸர்வமந்த்ர ஸ்வரூபிண்யை நம :— ஸர்வ மந்த்ர ஸ்வரூபமாக இருப்பவள். எழு கோடி மஹா மந்த்ரங்கள் உலகில் இருக்கின்றன. அவை எல்லாம் நேராகவோ, மாருகவோ, தேவியைத்தான் கூறுகின்றன.

205. **सर्वयन्त्रात्मिकायै नमः**-ஸர்வ யந்த்ராத்மிகாயை நம :— ஸர்வ யந்த்ரவடிவமாக இருப்பவள். (2) கட, அர்க்கள முதலிய யந்த்ரங்களுக்கு ஆத்ம ஸ்வரூபமாக இருப்பவள். ஒவ்வொரு தேவதைக்கும், மந்த்ரம்போல், ப்ரத்யேகமான யந்த்ரமும் உண்டு. அந்த எல்லா யந்த்ர ரூபமாகவும் இருப்பவள் தேவி.

206. **सर्वतन्त्ररूपायै नमः** — ஸர்வ தந்த்ர ரூபாயை நம :- தந்த்ரம் என்பது அந்தந்த தேவதைகளது உருவம், ப்ரதிஷ்டை, பூஜை, அதனுல் உண்டாகும் பயன் முதலியவைகளை விளக்கும் க்ரந்தம். உலகில் உள்ள எல்லா தந்த்ரங்களும் அன்னையையே கூறுகின்றன. யந்த்ரத்திலேயே மந்த்ரத்தைக்கொண்டு தந்த்ரம் கூறியபடி பூஜிப்பதே ஸரியான பூஜையாகும். ஆலயங்களில் தேவதா விக்ரஹத்தின் அடியில் யந்த்ரத்தை அமைத்து வேத ஆகம மந்த்ரங்களைக்கொண்டு ஆகம தந்த்ர ரீதியில் ஆராதிப்பதைக் காண்கிருேம்.

207. **मनोन्मन्यै नमः**— மனோன்மன்யை நம :— (1) மனோன்மனீ ரூபமாக இருப்பவள். இரு புருவங்களின் இடையிலிருந்து ப்ரும்ம ரந்த்ரம் வரை உள்ள இடத்தை எட்டாகப் பிரித்துத் தனித்தனிப் பெயர் இடப்பட்டிருக்கிறது. 1. இந்து, 2. ரோதிநீ. 3. நாத 4. நாதாந்த. 5. சக்தி. 6. வ்யாபினீ. 7. ஸமனு. 8. உன்மனீ அல்லது மனோன்மனீ. இதில் தேவி எட்டாவதான மனோன்மனீ என்பவளாக இருக்கிருள். (2) சிவனுக்கு ஸத்யோ ஜாதம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், ஈசானம் என 5 முகங்கள் இருக்கின்றன. அவைகளில் ' வாமதேவம் ' என்ற முகம் 'மனோன்மனம்' எனப்படும். அத்தகைய மனோன்மன வடிவமான சிவனது பத்தினியாக இருப்பவள். (3) மனோன்மனீ என்ற முத்ரா வடிவமானவள்.

208. **माहेश्वर्यै नमः** — மாஹேச்வர்யை நம: — மஹேச்வரியாக இருப்பவள். மஹேச்வரனது பத்னி. மஹான்களுக்கு ஈச்வரீ என இரு பொருளும் பொருத்தமானது. தமோ குணத்தால் கால ருத்ரனுகவும், ஸத்வ குணத்தால் விஷ்ணுவாகவும், ரஜோ குணத்தால் ப்ரும்மாவாகவும், நிர்குணத்தால் மஹேச்வரனுகவும் ஆகிறுர் பரமாத்மா. அந்த மஹேச்வரரின் பத்னி.

209. **महादेव्यै नमः** — மஹாதேவ்யை நம: —மஹாதேவியாக இருப்பவள். மஹதி எனில் மிகப் பெரிய சரீர முள்ளவள் என்று பெயர். (2) கண்டகீ நதியின் அருகிலுள்ள சக்ர திர்த்தத்தில் இந்தப் பெயருடன் வீற்றிருப்பவள்.

210. **महालक्ष्म्यै नमः** –மஹாலக்ஷ்ம்யை நம: –மஹாலக்ஷ்மீ ஸ்வரூபமாக இருப்பவள். விஷ்ணு பத்னியான லக்ஷ்மி, தனலக்ஷ்மி, தான்யலக்ஷ்மி, ஸ்வர்க்க லக்ஷ்மி முதலிய அஷ்ட லக்ஷ்மிகளுக்கும் ல்க்ஷ்மியாயிருக்கும் சக்தியை அளித்தவள் மஹாலக்ஷ்மி. கரவீர க்ஷேத்திரம் எனப்படும் கோலாபுரத்தில் இப் பெயருடன் விளங்குகிறுள் தேவி.

211. **मृडप्रियायै नमः** — ம்ருட ப்ரியாயை நம: — சிவனுக்கு ப்ரியமானவள். சிவனுக்குப் பல பெயர்கள் இருந்தாலும், இங்கு "ம்ருட" என்ற சொல் "சிவன் ஸகல ஜகத்திற்கும் இன்பம் அளிப்பவர். ஸத்வகுணம் உள்ளவர்" என்று காட்டுகிறது. ஆதலால் அவரது பத்னியான தேவியும் உலகிற்கு இன்பம் அளிப்பவள் என்று பொருள்.

212. **महारूपायै नमः** –மஹா ரூபாயை நம;–பெரிய உருவம் உள்ளவள். பரப்ரும்மம், உலகைப் படைப்பதற்காக புருஷ, வ்யக்த, அவ்யக்த, கால என நான்கு உருவங்களை எடுக்கின்றது. இவைகளுக்கு மேலானதும், காரணமானதும் ஆகிய மஹத்தான ரூபம் ப்ரும்மரூபம். ரூபம் அதற்கு இல்லாவிடினும் நமது த்ருஷ்டியில் அதற்கு உருவிருந்தால் மிகப் பெரியது என்ற கல்பனையால் கூறப்பட்டது.

213. **महापूज्यायै नमः** — மஹாபூஜ்யாயை நம: — பெரியவளாயும் பூஜிக்கத் தக்கவளாயும் இருப்பவள். (2) பூமியிலும் வானிலும் உள்ள மஹான்களால் பூஜிக்கத்தக்கவள் தேவி.

214. **महापातकनाशिन्यै नमः**— மஹா பாதக நாசின்யை நம: — மஹா பாபங்களை நாசம் செய்பவள். ப்ராம்மணனைக் கொல்வது, ஸுராபானம், ஸ்வர்ணத்தைத் திருடுவது, குரு பத்னி கமனம் இந்த நான்கு பாபங்களைச் செய்பவருடன் சேருவது என்பன மஹா பாதகங்களாம். தேவியை உபாசித்தால் இவை அகலும். "பஞ்சாவஸானு காயத்ரீ பஞ்ச பாதக நாசினீ" ஐந்து இடங்களில் நிறுத்தி காயத்ரீ ஜபம் செய்தால் பஞ்ச மஹாபாதகமும் அகலும் என தர்ம சாஸ்த்ரம் கூறுகிறது. தேவீ பாகவதம், ஸௌபாக்ய ரத்னகரம் போன்ற நூல்கள் இன்ன இன்ன பாபம் செய்தவர் இந்த இந்த மாதிரி தேவியைப் பூஜித்தால் பாபம் அகலும் எனக் கூறுகின்றன. கன்யகைகளைத் தூக்கிச்சென்றும், குருவின் பசுவைக் கொன்றும், பஞ்சமருடன் சேர்ந்தும் மூன்று பாபங்களைச்செய்த த்ரிசங்கு. தேவி மந்த்ரத்தால் சுத்தன் ஆனன். தேவியின் ஒரு நாமாவுக்கு எவ்வளவு பாபத்தைப் போக்கடிக்க சக்தி இருக்கின்றதோ அவ்வளவு பாபம் செய்ய பதினான்கு லோகத்தில் உள்ளவராலும் முடியாது.

215. **महामायायै नमः** — மஹா மாயாயை நம: — மஹாமாயா ரூபிணீ. ப்ரும்மாதி தேவர்களது மனதையும் மயக்கும்படியான சக்தி வாய்ந்தவள். (2) மாயை என்றால் கருணை என்னும் பொருள் உண்டு, அதிகக் கருணைவாய்ந்தவள்.

216. **महासत्त्वायै नमः** — மஹா ஸத்வாயை நம :— மஹத்தான ஸத்வம் வாய்ந்தவள். ஸத்வம் என்பது ஸத்வ குணம், பலம் என்ற இருபொருள்கள் உள்ளது. அன்னையிடம் அதிக சத்வகுணமும், மஹாபலம் வாய்ந்த பண்டாஸுரன் முதலியவர்களைக் கொல்லும்படியான சிறந்த பலமும் உண்டு.

217. **महाशक्त्यै नमः** —மஹாசக்த்யை நம: – அதிக சக்தி வாய்ந்தவள். ப்ரும்மனுக்குப் படைக்கும் சக்தி போல் எல்லோருக்கும் எல்லாவகையான சக்தியையும் அளிக்கும் மூலசக்தியே தேவி. 109-வது நாம **மஹாசக்தி** இது **மஹாசக்தி.**

218. **महारत्यै नमः** — மஹாரத்யை நம: — சிறந்த ஆனந்தத்தை அளிப்பவள்.

219. **महाभोगायै नमः** — மஹா போகாயை நம:— சிறந்த போகமுள்ளவள். பக்தர்களுக்கு உயர்ந்த போகத்தைத்தருபவள். (2) மஹ—ஆபோகா எனப் பிரித்து பூமி முதலிய ரூபமாக உள்ளவள். அல்லது பூமி முதலியவைகளைத் தந்தவள் என்றும் பொருள்.

220. **महैश्वर्यायै नमः** — மஹைச்வர்யாயை நம: — சிறந்த ஐச்வர்யம் உள்ளவள். ஐச்வர்யம் என்பது ஈச்வர ஸ்வபாவம். தேவியிடம் உள்ள ஐச்வர்யம் என்றும் அழியாதது. அதைப் பக்தர்களுக்கு அளிப்பாள்.

221. **महावीर्यायै नमः** — மஹா வீர்யாயை நம: — மஹா வீர்யம் உள்ளவள். வீர்யம் எனில் ஸாமர்த்யம், தேஜஸ், மஹிமை முதலிய பல பொருள்கள் உண்டு. எல்லாவகையான வீர்யமும் உள்ளவள் தேவி.

222. **महाबलायै नमः** —மஹாபலாயை நம:—சிறந்த பலம் உள்ளவள். வாஸனை, ரூபம், ரஸம், ஆத்மா எனப் பல பொருள் கொண்டது பலம் எனும் சொல். தேவி இத்தகைய ஸகல மஹாபலமும் வாய்ந்தவள். (2) பலம் என்றால் காக்கை என்றும் ஒரு அர்த்தம் உண்டு. மஹானான புஸுண்டன் எனும் காக்கைக்கு முக்தி அளித்தவள் தேவி.

223. **महाबुद्ध्यै नमः** —மஹா புத்யை நம:—மஹந்தான புத்தி ரூபமாகவுள்ளவள். ஜீவர்களது புத்தி ஒவ்வொரு விஷயத்தைப் பின்பற்றி அந்த வஸ்து வடிவமாக இருக்கும். அது சிற்றறிவு. தேவியின் புத்தியோ அகண்டமானது. ஆனதால் மஹாபுத்தி, பேரறிவு உள்

ளவள். (2) ஒன்றை அறிந்தால் எல்லாவற்றையும் அறியலாம் என்று உபநிஷத் கூறும்படியான காரண வஸ்து தேவி. ஆனதால் மஹாபுத்தி எனப்படுகிருள்.

224. **महासिद्ध्यै नमः**—மஹாஸித்யை நம :- மஹாஸித்தி ரூபமானவள். அணிமா, மஹிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்ற அஷ்ட மஹா ஸித்தி ரூபமானவள். அல்லது இவைகளை அளிப்பவள். ஆதலால் தேவி மஹாஸித்தி.

225. **महायोगीश्वर्यै नमः** — மஹா யோகிச்வர்யை நம :— மஹா யோகேச்வரர்களுக்கும் ஈச்வரியாயிருப்பவள். மனதை அடக்குவதற்காகச் செய்வது யோகம். ஈச்வர ஸ்வரூபத்துடன் ஒன்றுபடுவதற்காகச் செய்வது மஹா யோகம். அத்தகைய மஹாயோகம் செய்வோருக்கு ஈச்வரியாக இருப்பவள்.

226. **महातन्त्रायै नमः** — மஹாதந்த்ராயை நம: — அதிகமான தந்த்ர சாஸ்த்ரம் உள்ளவள். '**மஹா**' என்ற சப்தம் பெரியது, சிறந்தது, மஹிமை உள்ளது, உயர்ந்தது, அதிகமானது என்று பல பொருள் உள்ளது. மஹ என்ற சொல்லை முன்னிட்டுப் பல நாமாக்கள் வருகின்றன, தேவியின் குணம் மிகமிகச் சிறந்தது ஆனதாலும் அதை வெளியிட மஹ என்பதற்கு மேலான பதங்கள் இல்லாததாலும் இதுவே அடிக்கடி உபயோகிக்கப்படுகிறது. தேவி தந்தரம் மிக மஹிமை வாய்ந்ததுமாகும்.

227. **महामन्त्रायै नमः** —மஹா மந்த்ராயை நம: — சிறந்த மந்த்ரங்கள் உள்ளவள். முன் கூறியபடி தேவி மந்த்ரங்கள் : பாலை, புவனேச்வரீ, பஞ்ச தசாக்ஷரீ, ஷோடசி, ப்ரத்யங்கிரா, பகளா முதலிய பற்பல இருக்கின்றன. இவ்வளவு மந்த்ரஙகள் உள்ள மற்ற தேவதைகளைக் காண்பது அரிது. சீக்கிரமாயும் உயர்ந்ததாயும் விசித்ரமாயுமுள்ள பலத்தையும் இவை அளிக்கின்றன. ஆதலின் இருவகை மஹத்வம் உள்ள மந்த்ரம் உள்ளவள்.

228. **महायन्त्रायै नमः** — மஹா யந்த்ராயை நம: — மஹத்தான யந்த்ரங்களை உடையவள். முற்கூறியபடி

பல பெருமை வாய்ந்த யந்த்ரங்கள் உள்ளவள். தனது அவதாரங்களான சக்தி யந்த்ரங்களைத் தவிர மற்ற தேவதா யந்த்ரமாகவும் தேவி இருப்பதால் மஹாயந்த்ரா என்பது மிகப் பொருத்தமானது. 204, 205, 206 நாமாக்களான ஸர்வ மந்த்ரா,யந்த்ரா,தந்த்ரா என்பனவும் இதே அர்த்தத்தை பலப்படுத்துகின்றன. அன்றியும் ஸ்ரீ வித்யைக்கு மஹாமந்த்ரம் என்றும், ஸ்ரீ சக்கரத்தை மஹாயந்த்ரம் என்றும் ஸ்வதந்த்ரம் என்ற தேவீ தந்த்ரத்தை மஹா தந்த்ரம் என்றும் அழைப்பார்கள்.

229. **महासनायै नमः** – மஹாஸனாயை நம: –மஹத்தான ஆஸனம் உடையவள். நாம் உட்காரும் இடம் ஆஸனம். அன்னை மஹான்களுடைய உள்ளத்தில் அமர்வதாலும், பூமி முதல் 36 தத்வங்களே தேவிக்கு ஆஸனமானதாலும், ஸிம்மாஸனத்தில் வீற்றிருப்பதாலும், மஹாஸனா எனப்படுகிறாள் தேவி.

230. **महायाग क्रमाराध्यायै नमः** — மஹாயாக க்ரமாராத்யாயை நம: — மஹாயாக அநுஷ்டானத்தால் ஆராதிக்கத் தக்கவள். மாத்ருகா தேவிகளான பராஹ்மீ முதலியவர்களுடைய அம்சமாயுள்ளவள், அக்ஷோப்யா முதலிய 64 யோகினிகள். இவர்களுடன் தேவியை ஆராதிப்பது மஹாயாகம். (2) சிவ யோகிகள் மாத்ரம் செய்யத்தக்கதும், மிக ரஹஸ்யமுமான பாவனோபநிஷத்தில் வர்ணிக்கும் பாவனா யாகம் மஹாயாகமாம். அதனால் ஆராதிக்கத் தக்கவள். (3) பண்டாஸுரனால் பீடிக்கப்பட்ட அமரர் அனைவரும் ஒன்றுகூடி மஹாசம்புவுடன் சிதக்னி குண்டத்தில் செய்த யாகம் மஹாயாகமாம். அதனால் ஆராதிக்கத்தக்கவள் என்றும் ஒரு பொருள் உண்டு.

231. **महाभैरव पूजितायै नमः** — மஹா பைரவ பூஜிதாயை நம: — மஹா பைரவரால் பூஜிக்கப்பட்டவள். பைரவர் என்பவர் பரமசிவனே. கால பைர்வ, கல்பாந்த பைரவ, க்ரோத பைரவ, கபால பைரவ, ஸம்ஹார பைரவ, உன்மத்த பைரவ, சண்ட பைரவ, உக்ர பைரவ என எட்டு பைரவர்களாலும் இதற்குக் காரணமான

மஹா பைரவராலும் பூஜிக்கப்பட்டவள். பரமசிவன் தேவியைப் பூஜித்த விஷயம் பாத்ம புராணத்தில் கூறப் பட்டுளது.

232. **महेश्वर महाकल्प महाताण्डव साक्षिण्यै नमः** — மஹேச்வர மஹாகல்ப மஹாதாண்டவ ஸாக்ஷிண்யைநம: மஹாகல்பத்தில் மஹேச்வரர் செய்யும் மஹா தாண்ட வத்திற்கு ஸாக்ஷியாக இருப்பவள், இப்போது ச்வேத வராஹகல்பம் நடக்கின்றது. ஒரு கல்பம் முடியும்போது உலகெலாம் இறைவனிடம் ஒடுங்குகிறது. தன் குழந்தை களான அனைவரும் கர்ம அனுபவத்தைவிட்டுத் தன்னிடம் லயித்திருப்பதால் பகவான் தாண்டவமாடுகிறார். அச் சமயம் தேவி ஒருவளே ஸாக்ஷியாக இருக்கிறாள். கருணை வடிவையான அன்னையும் பரமனும் சேர்ந்து நடனம் செய்யும்போது உலக ஸ்ருஷ்டி ஆரம்பிக்கின்றது. பெண் மக்கள் செய்யும் நடனத்திகு லாஸ்யம் என்றும், புருஷ நர்த்தனத்திற்கு தாண்டவம் என்றும் பெயர். "**தவா தாரே மூலே**" என்ற ஸௌந்தர்ய லஹரீ (41-வது ச்லோ கம்) இந்த கருத்தைக் கூறுகிறது.

233. **महाकामेश महिष्यै नमः** -மஹா காமேசமஹிஷ் யை நம: - மஹா காமேசருடைய ராணியாக இருப்பவள். சிதக்னி குண்டத்திலிருந்து ஆவிர்ப்பவித்த அன்னைக்கு மணித்வீபத்தில் பட்டாபிஷேகம் செய்யவும், அவளுக்குப் பதியில்லாமல் எப்படி அபிஷேகம் செய்வது எனவும் ப்ரும்மா யோசிக்கும்போது, பரமசிவன் அழகிய காமேச் வரனாக அவதரித்து அன்னையை மணந்தார். பகவான் காமேச்வரர். தேவீ காமேச்வரீ ஆவள்.

234. **महा त्रिपुर सुन्दर्यै नमः** — மஹா த்ரிபுர ஸுந் தர்யை நம: — மஹா த்ரிபுரசுந்தரியாக இருப்பவள். மூன்று நகரத்திலும் அழகானவள் என்பது ஸாமான்ய அர்த்தம். (2) இடை, பிங்களை, ஸுஷும்னை என்ற மூன்று நாடிகளும், பார்ப்பவர். பார்க்கப்படும் வஸ்து, பார்த்தல் ஆகிய த்ரிபுடியும் மூன்று புரங்களாகும். ஆங்கு அழகாக இருப்பவள். "த்ரிபுரா" என்ற 626-வது நாமாவும் இந்த பொருளை விளக்குகின்றது.

235. **चतुःषष्टि उपचाराढ्यायै नमः** – சதுஷ்ஷஷ்டி உபசாராட்யாயை நம: — 64 உபசாரம் நிறைந்தவள். அதாவது தேவீ பூஜையில் 64 உபசாரங்கள் கூறப்படுகின்றன. நித்ய பூஜையில் 16 உபசாரங்களே செய்யப்படுகின்றன. தேவி 64 கலை வடிவமாக இருப்பதால், 64 உபசாரங்களைச் செய்யவேண்டும். (72 உபசாரம் உண்டு என்பர் சிலர்) த்யானம் செய்து அம்பாளை ஆவாஹனம் செய்த பின் முறையே 64 உபசாரங்களைச் செய்ய வேண்டும்.

1. **பாத்யம்** - கால் அலம்ப ஜலம் அளிப்பது. 2. **ஆபரண அவரோபணம்** - நகைகளைக் கழற்றுவது. 3. **ஸுகந்த தைல அப்யங்கம்** - வாஸனைத் தைலம் தேய்ப்பது (அபிஷேகம்). 4. **மஜ்ஜன சாலா ப்ரவேசம்** - ஸ்நானம் செய்யுமிடத்தில் அழைத்துச் செல்வது. 5. **மஜ்ஜன மண்டப மணீபீட உபவேசனம்** - ஸ்நான மண்டபத்தில் உள்ள மணிமயமான ஆஸனத்தில் உட்காரவைப்பது. 6. **திவ்ய ஸ்நானீய உத்வர்த்தனம்** - வாஸனைப் பொடி பூசுவது. 7. **உஷ்ணோதக ஸ்நானம்** - வென்னீரில் ஸ்நானம் செய்துவைப்பது. 8. **கனககலசச்யுத ஸகல தீர்த்த அபிஷேகம்** - தங்கக் குடத்தால் ஸகல தீர்த்தங்களாலும் அபிஷேகம் செய்வது. 9. **தௌத வஸ்த்ர பரிமார்ஜனம்** - தோய்த்து உலர்ந்த வஸ்த்ரத்தால் துடைப்பது. 10. **அருண துகூல பரிதானம்** - சிவப்புப்பட்டு உடுத்தல். 11. **அருண துகூல குச உத்தரீயம்**-சிவப்புப்பட்டால் ரவிக்கை அணிதல். 12. **ஆலேப மண்டப ப்ரவேசனம்** - சந்தன கஸ்தூரி முதலியவை பூசும் மண்டபத்திற்கு அழைத்துச்செல்லல். 13. **ஆலேப மண்டப மணிபீட உபவேசனம்** ஷ மண்டபத்தில் மணி பீடத்தில் அமர்த்தல் 14 **சந்தன, அகரு, குங்கும, ஸங்கு, ம்ருகமத, கர்பூர, கஸ்தூரீ, - கோரோசனாதி திவ்ய கந்த ஸர்வாங்கீன விலேபனம்**—சந்தனம், அகில், குங்குமம், ஸங்கு எனும் வாஸனாத்ரவ்யம் (தமிழ் பெயர் தெரியவில்லை) புனுகு, பச்ச கற்பூரம், கஸ்தூரீ, கோரோசனம் முதலிய திவ்ய கந்தங்களால் ஸர்வ அங்கங்களையும் பூசுவது. 15. **கேசபரஸ்ய, கால அகரு தூபம்** — தலை மயிரை அகில் கட்டை தூபத்தால் வாஸனையுள்ளதாகச் செய்வது.

16. மல்லிகா, மாலதீ, ஜாதீ, சம்பக, அசோக, சதபத்ர, பூக, குட்மனீ, புன்னுக, கல்ஹார, முக்ய ஸர்வருது குஸும மாலா ;— இந்த புஷ்பங்களாலும, ஸர்வ ருதுக்களிலும் பூக்கும் புஷ்பங்களாலும், தொடுத்த மாலே யளித்தல். 17. பூஷண மண்டப ப்ரவேசனம்—ஆபரண மண்டபத்திற்கு அழைத்துச் செல்லுதல். 18. பூஷண மண்டப மணிபீட உபவேசனம்-ஷை மண்டபத்தில் உள்ள மணி பீடத்தில் உட்காரவைத்தல். 19. நவமணி மகுடம்-நவமணி கிரீடமளித்தல். 20. சந்த்ர சகலம்—சநத்ர கலே அளித்தல். 21. ஸீமந்த ஸிந்தூரம் — வகுட்டில் ஸிந்தூரமணிதல். 22. திலகரத்னம்-ரத்னத்திலகம் அணிவித்தல். 23. காலாஞ்சனம்-கறுப்புமை தீட்டல். 24. பாளீயுகளம்-மூக்கின் இரு பக்கங்களிலும் வாளியை அளித்தல். 25. மணிகுண்டல யுகளம்-காதில் ரத்ன குண்டலம் இரண்டையும் அணிவித்தல். 26. நாஸாபரணம்—மூக்குத்தி அளித்தல். 27. அதர யாவகம்—உதட்டுக்கு லாக்ஷாரஸம் தடவுதல். 28. ப்ரதமபூஷணம்—மங்கள ஸூத்ரம் அல்லது தாலிகயிறு அளித்தல். 29. கனக சிந்தாகம்—தங்கச் சங்கிலி அளித்தல். 30. பதக்கம் அளித்தல். 31. மஹாபதக்கம் அளித்தல். 32. முக்தாஹாரம் அளித்தல். 33. ஏகாவளி — 27 முத்துக்கள் கோர்த்த மாலே அளித்தல. 34. சன்னவீரம்-இப்பெயருள்ள ஒருவகை ஆபரணமளித்தல். 35. கேயூர சதுஷ்டயம்—ஒரு கையில் இரண்டு கேயூரமாக, நான்கு கரங்களிலும் அளித்தல். 36. வளேயாவளி—வளேகளே அளித்தல். 37. ஊர்மிகாவளி-மோதிரங்களே அளித்தல். 38. காஞ்சீ தாம-ஒட்யாணமளித்தல். 39. கடிஸூத்ரம்-அரை ஞாண் அளித்தல். 40. ஸௌபாக்ய ஆபரணம்-(இது ஸூக்ஷ்மமானது). மங்களகரமான ஆபரணமளித்தல். 41. பாதகடகம்-கால் காப்பு அளித்தல். 42. ரத்ன நூபுரம்—ரத்னமயமான கால் சிலம்பு அளித்தல். 43. பாதாங்குளீயுகம் — கால் விரல்களில் மட்டி, காலாழி, பீலாழி அளித்தல். 44. ஏக கரே பாசம்—ஒரு கரத்தில் பாசமளித்தல். 45. அன்ய கரே அங்குசம்-மற்ரெரு கரத்தில் அங்குசம் அளித்தல். 46. இதர கரே புண்ட்ரேக்ஷு சாபம்—மற்ரெரு கரத்தில் செங்கரும்பு வில் அளித்தல்.

47. அபரகரே புஷ்பபாணு: - மற்றொரு கையில் புஷ்ப பாணங்கள் அளித்தல். 48. **ஸ்ரீமன் மாணிக்ய பாதுகே**- மாணிக்யமயமான பாதுகைகளை அளித்தல். 49. **ஸ்வ ஸமான வேஷாபி : ஆவரண தேவதாபிஸ்ஸஹ** - மஹா சக்ராதி ரோஹணம். தேவிக்கு ஸமமான வேஷம் உள்ள ஆவரண தேவதைகளுடன் தேவியை ஸ்ரீ சக்ரத்தில் ஏற்று தல். 50. **காமேச்வராங்க பர்யங்க உபவேசனம்** - காமே ச்வரரின் மடியில் உட்காரவைத்தல். 51. **அம்ருதாஸவ சஷகம்** - அம்ருதமயமான மதுபாத்திர மளித்தல். 52. **ஆசமனீயம்** அளித்தல். 53. **கற்பூர வீடிகா** - வாஸனை கலந்த தாம்பூல வடயமளித்தல். 54. **ஆனந்தோல்லாஸ விலாஸ ஸஹாஸ்யம்** - ஆனந்தத்தால் தேவி சிறிப்பதாக பாவனை செய்தல். 55. **மங்கள ஆரார்த்திகம்** - மங்கள ஆர்த்தி எடுத்தல். 56. **சத்ரம்** - குடை அளித்தல். 57. **சாமர யுகளம்** - இரு சாமரம் வீசல். 58. **தர்பணம்** - கண்ணாடி காட்டுதல். 59. **தாளவ்ருந்தம்**—விசிறி விசுதல். 60. **கந்தம்** - கந்தமளித்தல். 61. **புஷ்பம்** அளித்தல். 62. **தூபம்** அளித்தல். 63. **தீபம்** அளித்தல். 64. **நைவேத் யம்** அளித்தல்.

(**முக்ய கவனிப்பு** :—தூப தீபங்களுக்குப் பிறகு நை வேத்யம், பானீயம், உத்தர ஆபோசனம், கை அலம்பு தல், ஆசமனம், தாம்பூலம், மந்தர புஷ்பம், ப்ரதக்ஷிண நமஸ்காரம், சத்ர சமார உபசாரம் என்பது ஒரு முறை உபசாரம். 2. பாசம், அங்குசம், வில், அம்பு இவைகளை எந்தெந்த கைகளில் வைத்திருக்கிருள் என்பதில் ஸ்ரீ பாஸ் கரராயர் ஒருவகையாகவும், மற்ற ஸம்ப்ரதாயம் வேறு வகையாகவும் இருக்கிறது. குரு உபதேசமே நமக்கு ப்ரமாணம். 3. பாசம் பவழ வர்ணம். அங்குசம் வெள்ளி நிறம். புஷ்ப பாணங்கள் அந்தந்த புஷ்ப வர்ணம். கோதண்டம் செங்கரும்பு வர்ணம் என பாவிக்கவேண்டும். 4. ஆபரணம் முதலிய உபசார வஸ்துக்கள் இல்லாத போது **ஆபரணார்த்தம் புஷ்பாணி** அல்லது **அக்ஷதான் ஸமர்ப்பயாமி** என அவைகளால் உபசரிக்கலாம்.

236. **चतुःषष्टिकलामय्यै नमः** — சதுஷ்ஷஷ்டி கலா மய்யை நம: — அறுபத்துநான்கு கலை வடிவமானவள்.

64 கலைகளைப்பற்றி பழைய நூல் ஒவ்வொரு வகையாகக் கூறுகிறது. ஸ்ரீ பாஸ்கரராயர் கதாகோசம், லக்ஷ்மீ பீடம் முதலிய நூல்களை ஆராய்ந்து ஒருவகை முடிவு கட்டிக் கூறுகிறார். அதை முதலில் எழுதுகிறோம்.

1. 18 விதமான பாஷைகளின் எழுத்துக்களை அறிவது. 2. அவைகளை எழுதுவது. 3. அவைகளை நன்கு வேகமாய்ப் படிப்பது. 4. சித்ரம் எழுதுவது. 5. மற்றும் பல பாஷைகளை அறிவது. 6. அந்த பாஷைகளில் கவனம் செய்வது. 7. அவைகளில் உபன்யாஸம் செய்வது. 8. சூதாட்டம் ஆடுவது. 9. ரிக்வேதம். 10. யஜுர்வேதம். 11. ஸாமவேதம். 12. அதர்வ வேதம். 13. தனுர்வேதம். 14. ஆயுர் வேதம். 15. கந்தர்வ வேதம். 16. அர்த்த வேதம். 17. நீதி சாஸ்த்ரம். 18. ஜோதிடம். 19. தர்ம சாஸ்த்ரம். 20. யோகம். 21. மந்த்ரம். 22. சகுனம். 23. ரூப சாஸ்த்ரம். 24. ஸாங்க்ய சாஸ்த்ரம். 25. நியாயம். 26. மீமாம்ஸா. 27. தத்வ. 28. பூதத்துவ சாஸ்த்ரம். 29. தந்த்ர புராண ஸம்ருதி. 30. காவ்ய அலங்கார நாடகம். 31. சாந்தி கர்மா. 32. வச்ய கர்மா, 33. ஆகர்ஷண. 34. வித்வேஷண. 35, உச்சாடன. 36. மாரண. 37. கதிஸ்தம்பம் (நடப்பவரை நிறுத்துவது). 38. ஜலஸ்தம்பம். 39. திருஷ்டி ஸ்தம்பம். 40. அக்னி ஸ்தம்பம். 41. ஆயுத ஸ்தம்பம். 42. வாக் ஸ்தம்பம். 43. ரேத ஸ்தம்பம். 44. சில்பம். 45. கஜாரோஹம். கஜ சிக்ஷை. 46. அச்வ சிக்ஷை. 47. ரத ஆரோஹம். 48. மனிதரை நன்மைப்படுத்தல். 49. ஸாமுத்ரிகா லக்ஷணம். 50. மல்ல யுத்தம். 51. பாக சாஸ்த்ரம். 52. விஷத்தை நீக்குதல். 53. தந்தி வாத்யம். 54. வேணு. 55. ம்ருதங்காதி. 56. வெண்கல தாளம். 57. இந்த்ர ஜாலம். 58. ந்ருத்யம். 59. கீதம். 60. ரஸவாதம். 61. ரத்ன பரீக்ஷை. 62. திருடும் சாஸ்த்ரம். 63. நாடி பரீக்ஷை. 64. திரோதானம் (அதாவது மறைந்திருத்தல்.)

1. ஆபரணம் செய்தல், 2. புஷ்ப மாலை கட்டுதல், 3. வாஸனைப்பொடி தயாரித்தல், 4. கிழவர்களை யுவர் ஆகச்செய்தல், 5. பொம்மலாட்டம், 6. புதிர்போடுவது, 7. பாட்டின் அந்தாதி கூறுவது, 8. ஸமஸ்யை பூர்த்தி

செய்வது, 9. தச்சுவேலை, 10. வீடு கட்டுதல், 11. தலை வாரிப் பின்னல், 12. எண்ணெ தேய்ப்பது. 13. பூவைத்து ஆரூடம் சொல்வது. 14. பிறர் மனதில் இருப்பதை அறிவது, 15. மாறுவேடந் தரித்தல், 16. பட்டம் பறக்க விடுவது, 17. குழந்தை பொம்மை யந்த்ரம் செய்வது. 18. படுக்கை தலையணை முதலியன செய்வது, 19. படுக்கை அலங்கரிப்பது, 20. மரங்களுக்கு வைத்யம், 21. கிளி முதலியவைகளைப் பேசப்பழக்குவது, 22. கைகால்களைப் பிடிப்பது. இவைகளை முன் கூறிய 22க்குப் பதிலாகச் சிலர் கூறுவர்.

2. கலைகள் என்றால் தந்த்ர சாஸ்த்ரங்கள் என்றும் பொருள். 64 தந்த்ரங்களையுடையவள் என்றும் பொருள்.

**237. महाचतुःषष्टिकोटि योगिनीगण सेवितायै नमः —** மஹா சது: ஷஷ்டி கோடி யோகினீ கணஸேவிதாயை நம: மஹா சதுஷ் ஷஷ்டி யோகினீ கணங்களால் ஸேவிக்கப் பட்டவள். ஸ்ரீ சக்ரத்தின் முதல் ஆவரணமான த்ரைலோக்ய மோஹன சக்ரத்தில் ப்ராம்மீ முதலிய 8 மாத்ருகா சக்திகள் இருக்கின்றனர். அவை ஒவ்வொன்றுக்கும் அதன் அதன் அம்சமாக அக்ஷோப்யா முதலிய 8 யோகினிகளும் இருக்கின்றனர். $8 \times 8 = 64$. 64 யோகினிகளுக்கும் தனித்தனி கோடி சக்திகளாகி, 64 கோடிகள் இருக்கின்றனர். இவர்களால் ஸேவிக்கப்படுகிறவள் தேவீ. தேவியின் ஸ்ரீ சக்ரம் 9 (நவ) ஆவரணம் உள்ளதல்லவா? ஒரு பர்வாவில் 64 யோகினிகள் இருக்கின்றனர். $9 \times 64 = 576$. முன்போல், 576 கோடி ஆகின்றதல்லவா? இதை **மஹா** என்ற சொல் கூறுவதால், 576 கோடி யோகினிகளால் சூழப்பட்டவள் என்று தந்த்ர ராஜத்தைத் தழுவி பொருள் கூறப்படும்.

காசியிலுள்ள பண்டிதர்கள் ஷை யோகினீ கணங்களின் பெயர், வர்ணம், சரித்ரம் இவைகளைக் கூறும்படி பாஸ்கரராயரைப் பரீக்ஷித்தனர். தேவியின் அருளால் அவர் தங்கு தடையின்றி கங்கா ப்ரவாஹம்போல் கூற, அதை எழுதவும் அறியவும் முடியாமல் திகைத்தனர்.

238. **मनुविद्यायै नमः**—மநுவித்யாயை நம:—மநுவிஞல் உபாஸிக்கப்பட்ட வித்யா ரூபிணீ.

239. **चन्द्रविद्यायै नमः** — சந்த்ர வித்யாயை நம :— சந்த்ரஞல் உபாஸிக்கப்பட்ட வித்யா வடிவமானவள். மநு, சந்த்ரன், குபேரன், லோபாமுத்ரா, மன்மதன், அகஸ்த்யர், அக்நி, ஸூர்யன், இந்த்ரன், ஸ்கந்தன், சிவன், தூர்வாஸர் ஆகிய 12 பேராலும் 12 வித்யையாக தேவி உபாஸிக்கப்படுகிருள். இதில் அகஸ்த்ய பத்னியான லோபா முத்ரையால் உபாஸிக்கப்பட்ட பஞ்ச தசாக்ஷரீ ஹாதிவித்யா எனப்படும். க்ரோதபட்டாரகர் என்று சக்தி தந்த்ரத்தில் கூறப்படும் தூர்வாஸர் சிவனது அம்சமாக அத்ரி முனிவருக்கும் அநஸூயைக்கும் புத்ரராக அவதரித்தவர். இவரும் மற்றவர்களும் தேவி விஷயமாகப் பற்பல க்ரந்தங்களை இயற்றினர். தூர்வாஸர் இயற்றிய த்ரிபுரா மஹிம்ந ஸ்தோத்ரம், ஆர்யா த்விசதி என்பவை மிக முக்யமானவை.

240. **चन्द्रमण्डल मध्यगायै नमः** — சந்த்ரமண்டல மத்யகாயை நம :—சந்த்ரமண்டலத்தின் நடுவிலுள்ளவள். நமது ஸிரஸ்ஸிலுள்ள ஸஹஸ்ரார சக்ரத்தின் நடுவிலே எப்போதும் பூர்ணகலையுடன் சந்த்ரமண்டலம் இருக்கின்றது. அதன் நடுவிலிருப்பவள் தேவி. (2) குண்டலினீ சக்தியாயிருந்து 6 சக்கரங்களை த்தாண்டி, ஸஹஸ்ர கமல மத்தியில் இருக்கும் சிவனேடு சேர்ந்திருப்பவள். (3) சந்த்ர மண்டலத்தின் நடுவில் இருப்பதாக நினைத்து அம்பாளை அங்கு த்யானம் செய்வோர் விரும்பிய பயனைப் பெறுவர். (4) சிவன் அக்னியின் நடுவிலும் தேவி சந்த்ரன் நடுவிலும் இருக்கின்றனர்.

(சிவ புராணம்)

241. **चारु रूपायै नमः** — சாரு ரூபாயை நம:—அழகிய ரூபமுள்ளவள்.

242. **चारुहासायै नमः** – சாரு ஹாஸாயை நம: – அழகான புன்சிறிப்புள்ளவள். அன்னையின் கண்ணின் ஒரு சிறிய அம்சம் ஸூர்யன். புன்னகையின் ஒரு சிறிய அம்சம் சந்த்ரன்.

243. **चारुचन्द्रकलाधरायै नमः** — சாரு சந்த்ர கலாத ராயை நம: — அழகிய சந்த்ர கலையைத் தரித்தவள். (1) சிவன் சந்த்ர சேகரரல்லவா ? அவரைப்போல் தேவியும் சந்த்ரனைத் தரித்திருக்கிறாள். (2) 25 தத்துவமாயுள்ள ஸதா சிவத்துடன் தேவியும் சேர்ந்திருக்கிறாள். அதில் ஆறுவதான ஸாதாக்யமெனும் தத்துவத்திற்குத் தேவி ஆதாரமாக இருப்பவள். அதாவது சித்ரூபமான ஸாதாக்ய தத்வம் சந்த்ரகலை எனப்படும். (3) காசி ராஜன் பெண்ணான சசிகலைக்கு ஆதாரமானவள். தேவீ பாகவதத்தில் சசிகலையின் சரிதம் வர்ணிக்கப்படுகிறது.

244. **चराचर जगन्नाथायै नमः** —சராசர ஜகன்நாதாயை நம: — அசை பொருள், அசையாப் பொருள் வடிவமான உலகிற்கு ஈச்வரீ.

245 **चक्रराज निकेतनायै नमः** — சக்ர ராஜ நிகேதனாயை நம: — சக்ர ராஜம் எனப்படும் ஸ்ரீ சக்ரத்தை வீடாக உடையவள். (1) த்ரைலோக்ய மோஹன சக்ரம். (2) ஸர்வாசா பரிபூரக சக்ரம். (3) ஸர்வ ஸம்க்ஷோபண சக்ரம். (4) ஸர்வ ஸௌபாக்ய தாயக சக்ரம். (5) ஸர்வார்த்த ஸாதக சக்ரம். (6) ஸர்வ ரக்ஷாகர சக்ரம். (7) ஸர்வ ரோகஹர சக்ரம். (8) ஸர்வ ஸித்திப்ரத சக்ரம். (9) ஸர்வ ஆனந்தமய சக்ரம் என்ற ஒன்பது சக்ரங்களை உள்ளடக்கி அவைகட்கு மேலாய் விளக்குவதால், ஸ்ரீ சக்ரம் சக்ர ராஜன் எனப்படுகிறது.

246. **पार्वत्यै नमः** — பார்வத்யை நம: — பர்வத ராஜன் பெண். தக்ஷபுத்ரியான தாக்ஷாயணி உடலை விட்ட பின் பர்வத ராஜனான ஹிமவானுக்குப் பெண்ணாகத் தோன்றினாள்.

247. **पद्मनयनायै नमः** — பத்ம நயனாயை நம: — தாமரை போன்ற கண்ணுள்ளவள்.

248. **पद्मराग समप्रभायै नमः** — பத்மராக ஸமப்ரபாயை நம: — தாமரைபோல் சிவந்த காந்தியுள்ளவள். (2) பத்ம ராகம் எனும் ரத்னம் போன்ற காந்தியுள்ளவள். (3) குங்கும வர்ணையான குண்டலினீ சத்தியாக இருப்பவள்.

249. पञ्च प्रेतासनासीनायै नमः— பஞ்ச ப்ரேதா ஸஞ ஸீனையை நம:— 5 ப்ரேதங்களாலாகிய ஆஸனத்தில் அமர்ந்திருப்பவள். ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈஸா னன் என்ற நால்வரும் தேவி உட்காரும் ஆஸனத்திற்கு 4 கால்களாகவும் ஸதாசிவன் பலகையாகவும் அமர்ந்து தன் தன் சக்தியுடன் பரா சக்தியை உபாஸிக்கும்போது **பஞ்ச ப்ரும்மாஸநர்** என்றும், இந்த சக்திகள் அவர்களை விட்டுப் பிரிந்தபோது **பஞ்ச ப்ரேதாஸனமாகவும்** இருக் கின்றனர்.

(கடைசி ஜன்மாவாக இருந்தால்தான் தேவியினிடம் ஆழ்ந்த பக்தி உண்டாகும். அத்தகைய பக்தி இல்லாத வர்க்கும், அத்வைத க்ஞானமில்லாதவர்க்கும் இங்கு ஸந் தேஹம் தோன்றும். அதாவது, தேவி ஒரு ஸ்த்ரீ அல்லவா ? புருஷர்களை ஆஸனமாக அமர்த்தி அதன்மீது அமர்வது அழகா? லலிதை, ராஜேஸ்வரீ என்பதெல்லாம் ஸ்ரீ பார்வதி தானே ? ருத்ரர், ஈசானன், ஸதாசிவன் என் பது பரமசிவன் தானே ? புருஷர்மீது ஸ்த்ரீ அமர்வது உசிதமா ?—என்பர்.

தேவியின் தத்துவம் ஆத்ம தத்துவமாகும். அதுவே பரமாத்மா, பரப்ரும்மம், பராசக்தி எனப்படும். உலக ஸ்ருஷ்டி க்ரமத்தில், நாம் நற்கதிபெற நிர்குணமான ப்ரும்மம் ஸகுணமாய், நாமரூபத்துடன் தோன்றுகிறது. இதைச் சைவர் **சிவன்** என்றும், வைஷ்ணவர் **விஷ்ணு** என்றும், சாக்தர் **சக்தி** என்றும் கூறுவர். அது மும் மூர்த்திகளைப் படைக்கின்றது. அந்த ஸகுண ப்ரும்மமே லலிதா, ராஜேஸ்வரி எனப்படுகிறது. அந்த சக்தியை விட வேறல்லாதவரே காமேச்வரர் எனப்படுகிறார். இரு வருமாகவே பஞ்ச ப்ரும்மாஸனம் அல்லது பஞ்சப்ரேதா ஸனத்தில் அமர்ந்திருப்பவர். இவர்களுக்கு உட்பட்டவ ரான 5 மூர்த்திகள் மீது அமர்வது உசிதமே. சிவதத்து வம் பலவாக வர்ணிக்கப்படுகிறது. ஆதலின் ருத்ரன், ஈசானன், ஸதாசிவன் என்பவர் வெவ்வேறாகவே கூறப் படுவது சாஸ்த்ர ஸம்மதமானதே. பரப்ரும்மம், பர ப்ரும்ம மஹிஷீ, காமேச்வரர், காமேச்வரீ என்ற ஆதி தம்பதிகள் வேறு பார்வதி பரமேச்வரர் வேறு ஆவர்.

ப்ரக்ருதி, புருஷன் என இவர்களை வேதாந்தம் கூறும். ப்ரக்ருதி, இல்லாவிடில் புருஷன் அசைவற்ற கட்டை போலாவர். சக்தி இல்லாவிடில், புருஷன் அசைவற்று நிற்கும்போது ப்ரேதம் எனப்படுவது ஸஹஜமேயாம்.)

250. **पञ्चब्रह्म स्वरूपिण्यै नमः**—பஞ்ச ப்ரஹ்ம ஸ்வரூபிண்யை நம: — ஐந்து ப்ரும்ம ஸ்வரூபமாயிருப்பவள். (1) ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன், சதாசிவன் என்ற 5 ப்ரம்மம். (2) ஈசான, தத்புருஷ, அகோர, வாமதேவ, ஸத்யோஜாதம். (3) க்ஷேத்ரக்ஞ், ப்ரக்ருதி, புத்தி, அஹங்கார, மனஸ். (4) சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தம். (5) ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், திரோதானம், அனுக்ரஹம். (6) நாராயண, வாஸுதேவ, ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன, அநிருத்த—என்ற இந்த எல்லா வகையான பஞ்ச (5) ப்ரும்ம ஸ்வரூபமாயிருப்பவள் தேவி.

251. **चिन्मय्यै नमः** — சின்மய்யை நம: —சைதன்ய ரூபிணி. சித் எனில் அறிவு, சிதக்னி குண்டத்தில் தோன்றியவள். சைதன்ய அர்க்யத்தால் ஆராதிக்கத் தக்கவள், என்ற நாமாக்களும் தேவி க்ஞான வடிவமானவள் எனக் கூறுகின்றன.

252. **परमानन्दायै नमः** — பரமானந்தாயை நம: — உயர்ந்த ஆனந்தத்தையே ரூபமாக உடையவள்.

253. **विज्ञान घन रूपिण्यै नमः**—விக்ஞான கனரூபிண்யை நம: — கனமான க்ஞான ரூபமுள்ளவள், தனித்தனி ஜீவர்களிடமுள்ள க்ஞானம் விக்ஞானமாம். எல்லா ஜீவர்களுடைய க்ஞானமும் சேர்ந்து அம்பாளிடம் உள்ளதால் " விக்ஞான கன " எனப்படுகிறாள் தேவி.

254. **ध्यान ध्यातृ ध्येय रूपायै नमः** - த்யான த்யாத்ரு த்யேய ரூபாயை நம: —த்யானம், த்யானம் செய்பவர், த்யானம் செய்யப்படுவது என்ற மூன்று வடிவமானவள். ஒவ்வொரு கார்யத்திலும் இங்ஙனம் மூன்று உளது. அதே த்ரிபுடி எனப்படும்.

**255. धर्माधर्म विवर्जितायै नमः**— தர்மாதர்ம விவர்ஜிதாயை நம: —தர்மம் அதர்மம் இல்லாதவள். நாம் நற்கதி பெற எதைச் செய் என வேதங்கூறிற்ருே அது தர்மம். எதைச் செய்யாதே எனத்தடுத்ததோ அது அதர்மம். ஸுக காரணம். தர்மம். துக்க காரணம் அதர்மம். இதை விதி நிஷேதம் என்பர். நித்யானந்த வஸ்துவான தேவிக்குத் தர்மாதர்மம் எதற்காக? ஸுக துக்கங்களைக் கடந்த மனிதருக்கே விதி நிஷேதமில்லை.

**256: विश्वरूपायै नमः**—விச்வரூபாயை நம: —விச்வரூபமானவள். **விச்வ** எனில் **எல்லாம்** என்று பொருள். தேவி விச்வரூபமெடுத்தாள் என தேவீ பாகவதம் கூறுகிறது. (2) **ச்வரூப** எனில் நாய் போல் மிகத் தாழ்ந்ததான பசுத்தன்மை. அதை அகற்றுவதால் **விச்வரூபா.** (3) விச்வன் என்ற ஸ்வரூபமுள்ளவள். ஜீவனுக்கு விழிப்பு, கனவு, தூக்கம் என்று மூன்று நிலை உண்டு. விழித்துக் கொண்டிருக்கும்போது விச்வன் என்றும், கனவு காணும்போது தைஜஸன் என்றும், உறங்கும் போது ப்ராக்ஞன் என்றும் அழைக்கப்படுவான். இந்த விச்வன் ரூபமாகவும் இருக்கிருள் தேவி. இவைகளை அடுத்த நாமாக்கள் விளக்குகின்றன.

**257. जागरिण्यै नमः**:-ஜாகரிண்யை நம:-ஜாகர நிலையிலுள்ள ஜீவனுகவும் இருப்பவள். விழித்திருக்கும் நிலையே ஜாக்ரத் அவஸ்தை எனப்படும். அச்சமயம் ஸ்தூல சரீர அபிமானியாக இருக்கும் ஜீவன் விச்வன். தனித்தனி ஜீவன் வ்யஷ்டி என்றும், எல்லாம் சேர்ந்தது ஸமஷ்டி என்றும் கூறப்படும். ஜாகர நிலையில் வ்யஷ்டிக்கு விச்வன் என்பது போல் ஸமஷ்டிக்கு வைச்வானரன் என்று பெயர்.

**258. स्वपन्त्यै नमः** — ஸ்வபந்த்யை நம: — ஸ்வப்ன நிலையிலுள்ள ஜீவனுக இருப்பவள்.

**259. तैजसात्मिकायै नमः**:—தைஜஸாத்மிகாயை நம;—தைஜஸன் என்ற வடிவமாக இருப்பவள். வ்யஷ்டியாய்,

ஸ்வப்னுவஸ்தையில் ஸூக்ஷ்ம சரீர அபிமானியாக இருக்கும் ஜீவனுக்கு தைஜஸன் என்று பெயர். ஸமஷ்டி ஜீவனுக்கு ஹிரண்ய கர்ப்பன் என்று பெயர்.

260. **सुप्तायै नमः**—ஸுப்தாயை நம :—ஸுஷுப்தி என்ற தூக்க நிலையிலுள்ள ஜீவனாக இருப்பவள்.

261. **प्राज्ञात्मिकायै नमः**– ப்ராக்ஞாத்மிகாயை நம: – ப்ராக்ஞ வடிவமானவள். ஜீவன் நித்ராவஸ்தையில் காரண சரீர அபிமானியாக இருக்கும்போது ப்ராக்ஞன் எனப் படுகிறான். ஜீவ ஸமஷ்டிக்கு ஈச்வரன் என்று பெயர். ஸுஷுப்தியில் அக்ஞானம், அஹந்தை, ஸுகம் என்ற மூன்று மாத்ரம் இருக்கும்.

262. **तुर्यायै नमः** – துர்யாயை நம: –துரீயம் எனும் நான்காவது நிலையுள்ளவள். ஜாக்ரத்,ஸ்வப்ன,ஸுஷுப்தி என்ற 3 நிலைக்கு மேல்பட்ட நிலை துரீயம் எனப்படும். அது ஸமாதி யோகத்தால் ஏற்படும் நிலை. ஜீவன் ப்ரும்மத்துடன் பாதி சேருவதால் இதை அர்த்த ஸாம்யம், சிவ துல்யம் என்பர். இதற்கு மேல் உள்ள நிலை துரீயாதிதம் எனப்படும். அது ப்ரும்மத்துடன் இரண்டற ஒன்றாகக் கலந்து நிற்பதாம். (2) ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்களுக்கு மேலான நான்காவது மூர்த்தியானவள். (3) துர்க்கா, லக்ஷ்மீ, ஸரஸ்வதிகளுக்கு மேலானவள்.

263. **सर्वावस्थाविवर्जितायै नमः**– ஸர்வாவஸ்தா விவர்ஜிதாயை நம: — எல்லா அவஸ்தைகளும் இல்லாதவள். முற்கூறிய 4 அவஸ்தைகள் இல்லாதவள். இதைத் துரீயாதீத நிலை என்றும் கூறுவர். நிலைகடந்தஇடத்தைத் துரீயாதீதநிலை என்பது, நாம ரூபமற்றவருக்கு ப்ரும்மம் என்று பெயரிடுவது போலாம். இது ஜீவன் முக்த நிலை. இவர் உடல் தரிப்பது, உண்பது, உடுப்பது முதலிய செயல் பெயரளவிலேயே இருக்குமே அல்லாது உண்மையல்ல. அஃதும் ஆத்மார்ப்பண வடிவமாகவே இருக்கும். இதை''ஜபோஜல்ப''என்ற ஸௌந்தர்ய லஹரீ ச்லோகம் கூறுகிறது.

264. **सृष्टिकर्त्र्यै नमः** — ஸ்ருஷ்டி கர்த்ர்யை நம: — ஸ்ருஷ்டியைச் செய்கின்றவள். ரஜோகுண ப்ரதானமான ஈச்வரன் ப்ரும்மா என்ற பெயருடன் உலகைப் படைக்கிறார். தமோகுண ப்ரதானமாகி விஷ்ணு என்ற பெயரால் ரக்ஷிக்கிறார். ஸத்வகுண ப்ரதானமாகி ருத்ரனாய் உபஸம்ஹாரம் செய்கிறார். தேவி ஈச்வரன் வடிவமானவள்.

265. **ब्रह्मरूपायै नमः**—ப்ரஹ்மரூபாயை நம: -ப்ரும்ம ரூபமுள்ளவள்.

266. **गोप्त्र्यै नमः** — கோப்த்ர்யைநம: - காப்பாற்றுகிறவள்.

267. **गोविन्दरूपिण्यै नमः** — கோவிந்த ரூபிண்யை நம: —கோவிந்த வடிவமானவள். ஸகல வஸ்துக்களும் தேவியே. ஆயினும் உமையும் விஷ்ணுவும் ப்ரக்ருதியின் ரூபமாம்.

268. **संहारिण्यै नमः** -ஸம்ஹாரிண்யை நம:—உலகை ஒடுக்குபவள். ஸ்தூல வஸ்துக்களை அழித்து, பரமாணுக்களாக்கி, அதையும் ப்ரக்ருதியில் லயிக்கும்படி செய்வதே லயம் அல்லது ஒடுக்கமாகும்.

269. **रुद्ररूपायै नमः**— ருத்ர ரூபாயை நம: -ருத்ரரூபமானவள். ஸம்ஹாரம் செய்யும் போது ருத்ரவடிவமானவள். ருத்ரன் என்ற சொல்லிற்குப் பல பொருள் உள. (1) ருக்-துன்பத்தை, த்ராவயதி-அகற்றுபவர். (2) துஷ்டர்களை அழும்படி செய்பவர். (3) ப்ரளய காலத்தில் தன் கண்ணிலிருந்து நீரைப் பெருக்குபவர்.

270. **तिरोधानकर्यै नमः** — திரோதான கர்யை நம:— மறைப்பவள். உலகை ஒடுக்கிக் கண்ணில் காணாதபடி மறைப்பவள்.

271. **ईश्वर्यै नमः** — ஈச்வர்யை நம: —ஈச்வரரூபமாக இருப்பவள். (2) பரா, அஹந்தா ரூபமாக இருப்பவள்.

272 **सदाशिवायै नमः** — ஸதாசிவாயை நம: —ஸதாசிவ ரூபமாக இருப்பவள்.

273. **अनुग्रहदायै नमः** — அனுக்ரஹதாயை நம: — அனுக்ரஹம் செய்பவள். ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், திரோதானம் என்ற கார்யம் முடிந்தவுடன், அனுக்ரஹம் என்ற ஸ்ருஷ்டிக்க வேண்டிய அருளைப் புரிவது ஸதாசிவனது வேலை. ஸதாசிவனாக இருந்து அனுக்ரஹம் புரிபவள். (2) திரோதானம் என்பது பந்தம். அனுக்ரஹம் என்பது மோக்ஷமாம். ஆதலின், மோக்ஷமளிப்பவள் என்றும் பொருள் உண்டு.

274. **पञ्चकृत्यपरायणायै नमः** — பஞ்ச க்ருத்ய பராயணாயை நம: — ஐந்து கார்யங்களில் மிகுந்த முயற்சி செய்பவள். ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், திரோதானம், அனுக்ரஹம் என்ற ஐந்து கார்யங்களைச் செய்வதில் ஊக்கமுள்ளவள்.

275. **भानुमण्डल मध्यस्थायै नमः** — பானு மண்டல மத்யஸ்தாயை நம: — ஸௌர்ய மண்டலத்தின் நடுவில் இருப்பவள். தேவியை ஸௌர்ய மண்டலத்தின் நடுவில் இருப்பவளாக உபாஸிக்க வேண்டுமென தந்த்ர சாஸ்த்ரம் கூறுகிறது. ஸந்த்யா காலத்தில் ஸௌர்ய மண்டலத்திலுள்ள தேவியைக் காயத்ரீ ரூபமாக உபாஸிக்கும்படி தர்ம சாஸ்த்ரமும் கூறுகிறது. (2) அநாஹத சக்ரம் பானுமண்டலம் எனப்படும். அங்கு இருப்பவள்.

276. **भैरव्यै नमः** – பைரவ்யை நம: – பைரவரதுபத்னீ. எட்டு பைரவர் தனியாக இருந்தாலும், பரமசிவனே முக்ய பைரவராவர். (2) பீரு எனில் பயந்த குணமுள்ள ஸ்த்ரீ என்று பொருள். பெண் மக்களின் ஸமஷ்டி ரூபமாக இருப்பதால் தேவி பைரவியாவாள் (3) 12 வயதுள்ள கன்யகைக்குப் பைரவி என்று பெயர்.

277. **भगमालिन्यै नमः** — பகமாலின்யை நம: — பகம் எனும் மாலை உடையவள். **भग** என்ற சொல்லிற்குப் பூர்ணமான ஐச்வர்யம், தர்மம், கீர்த்தி, ஸ்ரீ, க்ஞானம், விக்ஞானம், மாஹாத்ம்யம், வைராக்யம், வீர்யம், ப்ரயத்தனம், இச்சை, முக்தி முதலிய பல பொருள்கள் உண்டு. இவைகள் எல்லாம் தேவியிடம் இருப்பதால்

பகமாலினீ எனப்படுவாள். (2) உலகிலுள்ள சகல ஸ்த்ரீ வடிவமானவள். (3) பகமாலினீ என்ற நித்யா தேவதையாக இருப்பவள்.

278. **पद्मासनायै नमः** — பத்மாஸனாயை நம: — தாமரையை ஆஸனமாக உடையவள். (1) ப்ரும்மாவாயிருப்பவள். (2) பக்தர்களுக்கு லக்ஷ்மியைப் பங்கிடுபவள். (3) பிந்துவில் இருப்பவள்.

279. **भगवत्यै नमः** — பகவத்யை நம: — ஐச்வர்யத்துடன் கூடியவள். (1) உத்பத்தி, லயம், பூதங்களது வரவு, போகுதல், வித்யை, அவித்யை இவைகளை அறிந்தவள்.

280. **पद्मनाभ सहोदर्यै नमः** — பத்மநாப ஸஹோதர்யை நம: — பத்மநாபனது ஸஹோதரியானவள். பரப்ரும்மத்தைத் **தர்மீ** என்றும், அதன் இச்சையைத் **தர்மம்** என்றும் கூறுவர். தர்மம் என்ற இச்சா சக்தியே விஷ்ணு என்ற ஆணாகவும், சக்தி அல்லது தேவி என்ற பெண்ணாகவும் மாறிற்று. அதனால் தேவீ பத்மநாபனது ஸஹோதரியாவாள். (2) ஜகன்னாத க்ஷேத்ர மாஹாத்ம்யம், பர்வதராஜகுமாரியே மறுமுறை க்ருஷ்ண ஸஹோதரியான ஸுபத்ரையாக அவதரித்தாள் என்கிறது. (3) பத்மாஸனா, பகவதி, பத்மநாப ஸஹோதரீ என்ற நாமாக்களில் காதி வித்யையின் முதல் கூடம் அமைந்துளது.

281. **उन्मेष निमिषोत्पन्न विपन्न भुवनावल्यै नमः** – உன்மேஷ நிமிஷோத்பன்ன விபன்ன புவனாவள்யை நம: — கண்ணைத் திறப்பதால் ஜகத் ஸ்ருஷ்டியையும், கண்ணை மூடுவதால் உலக ஸம்ஹாரமும் செய்பவள். நிமேஷம், உன்மேஷம் என்பது கண் கொட்டுவதாம். தேவர்களே கண் கொட்டாதவர். தேவி எப்படிக் கண் கொட்டுவாள் ? உலகம் கர்ம அதீனமாக லயிக்கவேண்டிய காலத்தில் தேவி சிறிது கண்ணை மூடுகிறாள். தேவி விழித்திருந்தால் உலகம் அழியாது. (2) தேவி கண்கொட்டித் (மூடி) திறப்பதற்குள் உலகம் அழிந்து உண்டாகிறது. (3) கண் கொட்டுவது எப்படி ஆயாஸ மில்லாமலிருக்கிறதோ

அங்ஙனமே உலக லயமும் ஸ்ருஷ்டியும் தேவிக்கு அநா யாஸமான வேலை.

282. **सहस्रशीर्ष वदनायै नमः** — ஸஹஸ்ர சிர்ஷ வத னாயை நம: — ஆயிரக்கணக்கான தலை, முகம் உள்ளவள். ஆயிரம் என்பது அநேகம் என்ற பொருள் உள்ளது. தேவீ விச்வரூபம் எடுத்தபோது பல முகம், கை கால் உள்ளவளாக இருந்தாள். (2) உலகிலுள்ள ஸகல ப்ராணிகளின் அவயவங்களும் தேவியின் அவயவமே யாம்.

283. **सहस्राक्ष्यै नमः** — ஸஹஸ்ராக்ஷ்யை நம: — பல கண்கள் உள்ளவள்.

284. **सहस्रपदे नमः** — ஸஹஸ்ரபதே நம: — பல பாதம் உள்ளவள். (1) உன்மேஷ முதல் ஸஹஸ்ரபாத வரையிலுள்ள நாமாக்களில் காதி வித்யையின் இரண் டாவது மூன்றாவது கூடங்கள் ரஹஸ்யமாகக் கூறப்படு கின்றன. (2) புருஷ ஸூக்தம் முதல் மந்த்ரத்தில் கூறப் பட்ட சப்தம், அர்த்தம் (ஸஹஸ்ர சீர்ஷா முதல் ஸஹஸ்ர பாத்வரை) அப்படியே கூறப்பட்டது. ஸஹஸ்ரபாத் என்றிருந்தாலும் ஸஹஸ்ரபதே என்றே அர்ச்சனையில் கூறவேண்டும்.

285. **आब्रह्मकीट जनन्यै नमः** – ஆப்ரும்மகீட ஜனன் யை நம: –ப்ரும்மா முதல் புழுவரை அனைவருக்கும் தாய். ஜீவ ஸமஷ்டியான ப்ரும்மா முதல் புழுவரையிலுள்ள ஸகல ப்ராணிகளையும் படைத்தவள் தேவி. "ஆப்ரம்ம ஸ்தம்ப பர்யந்தம் ஜகத் த்ருப்யது" என ப்ரும்ம யக் ஞத்தில் கூறுகிறோம்.

286. **वर्णाश्रम विधायिन्यै नमः** — வர்ணாச்ரம விதா யின்யை நம: —வர்ணங்களையும் ஆச்ரமங்களையும் ஸ்தா பித்தவள். ப்ராம்மண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ர என்ற 4 வர்ணங்களையும், ப்ரும்மசர்யம், க்ருஹஸ்தனாயிருத் தல், வானப்ரஸ்தம், ஸன்யாஸம் என்ற 4 ஆச்ரமங்களை

யும், தனது ஆக்ஞா ரூபமான வேதத்தால் ஏற்படுத்திய வள். தனது கர்மவசமாகித் துன்பத்தை அனுபவிக்கும் மானிடர் நன்மைபெற, வர்ணாச்ரமங்களைத் தேவி ஏற்படுத்தினாள். (கூர்ம புராணம்)

287. **निजाज्ञारूप निगमायै नमः** — நிஜாக்ஞாரூப நிகமாயை நம: — தனது ஆக்ஞை வடிவமான வேதங்களை உடையவள். "புண்ய கர்மாவைச் செய். பாபத்தைச் செய்யாதே" எனத்தேவி தன் மக்களுக்கு உத்திரவு இடுகிறாள். அதே, வேதம் செய், செய்யாதே என்று கூறும் ஆக்ஞை விதி நிஷேதமாகும். இது கர்ம காண்டமான முதல் பாகமாம். உத்தரபாகம் ப்ரும்ம ஸ்வரூபத்தைக் கூறும் வேதாந்தமாகும். (2) பரமசிவன் ஸத்யோ ஜாதம் முதலிய முகங்களிலிருந்து தந்த்ரங்களை உண்டு பண்ணி, அவைகளை (தனது ரூபத்தையே) அன்னையாக்கி அவளுக்கு உபதேசித்தார். அதே நிகமமாம். அது தேவியின் ஆக்ஞையுமாம்.

288. **पुण्यापुण्य फलप्रदायै नमः** — புண்ய அபுண்ய பல ப்ரதாயை நம: — புண்ய பாபங்களுக்குப் பலனைத் தருபவள். தனது ஆக்ஞை ரூபமான ஸத்கர்மங்களைச் செய்பவர்க்கு இன்பத்தையும், நிஷேதித்த பாப கர்மாவைச் செய்வோருக்குத் துன்பத்தையும் தருகிறாள்.

289. **श्रुतिसीमन्त सिन्दूरीकृत पादाब्ज धूलिकायै नमः** — ச்ருதி ஸீமந்த ஸிந்தூரீக்ருத பாதாப்ஜ தூலிகாயை நம:— வேதத்தின் வகுட்டில் குங்குமம் போலிருக்கும் தனது பாதாரவிந்த தூளி உள்ளவள். ச்ருதி என்ற ஸ்த்ரீ அம்பாளுடைய பாதாரவிந்தத்தில் பணியும்போது, ஜகன் மாதாவினுடைய பாத கமலங்களிலிருந்து சிந்தும் தூளிகள் ஸிந்தூரம்போல் இருக்கின்றன.

[288 நாமாவரையில் வேதத்தின் பூர்வ காண்டம் கூறப்பட்டது. 289-ல் உத்தர காண்டமான உபநிஷத் கூறப்படுகிறது. ச்ருதி ஸீமந்தம் எனில் வேதத்தின் அந்தம் என்று பொருள். உபநிஷத்துகள் அன்னையின் திருவடி ஸேவையையே கூறுகின்றன. தூளி என்ற

சொல் அம்பாளின் பூர்ண ஸ்வரூபத்தை வர்ணிக்க சக்தி இல்லாத உபநிஷத் தூளிபோன்ற ஒரு சிறு பாகத்தையே கூறுகிறது என்ற பொருளை எண்பிக்கிறது.]

290. **सकलागम संदोह शुक्तिसंपुट मौक्तिकायै नमः** — ஸகலாகம ஸந்தோஹ சுக்தி ஸம்புட மௌக்திகாயை நம: — ஸமஸ்த வேதக் கூட்டமாகிற முத்துச் சிப்பியின் முத்தாக இருப்பவள். முத்துச் சிப்பிகள் இரண்டு ஓடுகள் ஒன்ருகச் சேர்ந்து இருக்க, இடையில் முத்து இருக்கும். அங்ஙனம், கர்ம காண்டம், க்ஞான காண்டம் என்ற இரு முத்துச் சிப்பிகளுக்குள் இருக்கும் முத்து தேவி. (2) மௌக்திகா என்ற சொல் மூக்கிலணியும் புல்லாக்கு, முத்து என்ற பொருளையுந் தரும். வேதக் கூட்டங்களால் அம்பிகையின் நாஸிகாபரணம் மாத்ரம் அறியப்பட்டது. 289-வது நாமா மூன்று வர்ணத்திற்கும் அன்னை பூஜையில் அதிகாரமளித்தது. 290-வது நான்காவது வர்ணத்திற்கும் அதிகாரம் அளிக்கிறது.

291. **पुरुषार्थप्रदायै नमः** — புருஷார்த்த ப்ரதாயை நம: —புருஷார்த்தங்களைத் தருபவள். தர்மம், பொருள், இன்பம், மோக்ஷம் என்பன 4 புருஷார்த்தங்கள். புருஷர்களால் வேண்டப்படுவதால் புருஷார்த்தம் எனப்படும். (2) புருஷனை ருத்ரனுக்கு, பக்தருக்குப் பொருள்தரும் சக்தி அளிப்பவள்.

292. **पूर्णायै नमः** — பூர்ணயை நம: — நிறைந்திருப்பவள். " பூர்ணமத: பூர்ணமிதம் " என்ற ச்ருதி இதைக் கூறுகின்றது. (2) பஞ்சமீ, தசமீ, பஞ்சதசி, சுக்லபக்ஷ சதுர்த்தசி ராத்ரி இவைகளுக்குப் பூர்ணஎன்று பெயர். அந்த திதிகளாக இருப்பவள். (3) பூர்ண எனும் நதி வடிவமாக இருப்பவள்.

293. **भोगिन्यै नमः** — போகின்யை நம: — போகம் உடையவள். ஸுக அநுபவமுள்ளவள். (2) போகினீ என்ற நாக கன்யகை வடிவமாயிருப்பவள்.

294. भुवनेश्वर्यै नमः — புவனேச்வர்யை நம: — புவனங்களுக்கு ஈச்வரீ. (2) புவனேச்வரீ பீஜம் என்ற ஹ்ரீங்காரத்திற்குத் தேவதையாக இருப்பவள். (3) புவனேச்வரீ மந்த்ரமாக இருப்பவள். ஹ்ருல் லேகா பீஜம், மாயாபீஜம், சிந்தாமணி பீஜம், லஜ்ஜா பீஜம் எனப்பல பெயர்களால் அழைக்கப்படும் சிறந்த மந்த்ரம் இது. (4) புவனேச்வரீ பீஜத்திலிருந்து ஸகல புவனங்களும் தோன்றியதால் தேவி புவனேச்வரீ ஆவாள். (தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதை.) (5) திவ்ய ஓகம், ஸித்த ஓகம், மானவ ஓகம் என்று மூன்று குரு பரம்பரைகள் உண்டு. இவைகளில் மானவ ஓகத்தில் புவனானந்தர் என்னும் குருவுக்கு ஈச்வரீ ஆனதால், புவனேச்வரீ. (த்ரிபுரா ஸித்தாந்தம்)

295. अंबिकायै नमः — அம்பிகாயை நம: —தாயாக இருப்பவள். அம்பிகா என்ற சொல்லிற்கு ஜகன்மாதா, பாரதீ, பூமி, நித்ரை என்றும், இச்சா, க்ரியா, க்ஞானம் எனும் மூன்று சக்திகளின் ஸமஷ்டி ரூபமான ருத்ராணி என்றும் பொருள். தேவி எல்லா வடிவமாகவும் இருப்பவள்.

296. अनादि निधनायै नमः — அனாதி நிதனாயை நம: — ஆதி, அந்தம் இல்லாதவள். (2) 80 விதமான மரண காரணத்தை அகற்றுபவள். அனாதி என்பது "கடபயாதி" கணக்குப்படி 80 ஆகும். நிதனா—மரண காரணம். பக்தர்களுக்குத் தோன்றக்கூடிய 80 வகையான மரண காரணங்களை அகற்றுபவள். மரண ஸாதனங்களில் பாசம் என்பது 52 வகை. வதம் என்பது 28 வகை. ஆக 80 வகை மரண காரணங்கள்.

297. हरिब्रह्मेन्द्र सेवितायै नमः — ஹரிப்ரஹ்மேந்த்ர ஸேவிதாயை நம: — விஷ்ணு, ப்ரும்மா, இந்த்ரன் இவர்களால் ஸேவிக்கப்பட்டவள். ஸ்ரீ சக்ர நகரத்தில் அம்பாள் வஸிக்கும் சிந்தாமணி க்ருஹத்தைச் சுற்றி இருக்கும் ப்ரகாரங்களில் 18–17 ப்ரகாரங்களுக்கு இடையில் விஷ்ணுவும், 17–16 ப்ரகாரங்களுக்கு இடையில் ப்ரும்மாவும், 15–14 ப்ரகாரங்களுக்கு இடையே இந்த்ரன் முத

லிய திக்பாலர்களும், இருந்துகொண்டு தேவியை த்யானம் செய்கிருர்கள். தேவீ பக்தர்கள் தேவியையே பூஜித்தால் போதும். இந்த்ராதிகளைப் பூஜிக்க வேண்டிய அவச்யமில்லை.

298. **नारायण्यै नमः** — நாராயண்யை நம: — நாராயணீ என்ற பெயருள்ளவள். நாராயணன் ஸஹோதரி ஆனதாலும், நாராயணன் என்ற சிவன் மனைவி ஆனதாலும் நாராயணீ என்று பெயர். (2) நரன் என்ற ஜீவர்க்கு அடையும் இடமான அயனமாக இருப்பதால் நாராயணீ. (3) நாராயண வடிவமாக இருப்பவள். (4) ஸுபார்ச்வ க்ஷேத்ரத்தில் நாராயணீ என்ற பெயருடன் இருப்பவள்.

299. **नादरूपायै नमः** — நாதரூபாயை நம: — நாத வடிவமானவள். (2) நாதத்தில் ரூபம் உடையவள். ஹ்ரீம் முதலியவைகளில், பிந்துவுக்குமேல் 8 வர்ணங்கள் இருக்கின்றன. அவை ஒன்றைவிட ஒன்று ஸூக்ஷ்மமானவை. அங்கு மூன்ருவதான நாதத்தை ரூபமாக உடையவள். பிந்துவுக்கு மேல் உள்ள 8 அக்ஷரங்களாவன — அர்த்த சந்த்ர, ரோதினீ, நாத, நாதாந்த, சக்தி, வ்யாபினீ, ஸமனு, உன்மனீ.

300. **नाम रूपविवर्जितायै नमः** — நாமரூப விவர்ஜிதாயை நம: —நாம ரூபம் இல்லாதவள். உலகம், ஸத் சித் ஆனந்தர் (அல்லது அஸ்தி, பாதி, ப்ரியம்) நாம, ரூபம் என ஐந்து பேதமுள்ளது. இவைகளில், முதல் மூன்றும் ப்ரும்மஸ்வரூபம். பின் இரண்டும் உலகஸ்வரூபம். நாமரூபமில்லாத அகண்ட ஸச்சிதானந்த ஸ்வரூபமான தேவி, நம் நன்மைக்காக நாமரூபங்களை ஏற்கிருள். இல்லாவிடில், ஸஹஸ்ரநாமம் ஏது ?

301. **ह्रींकार्यै नमः** — ஹ்ரீம்கார்யை நம: — ஹ்ரீம் என்ற பீஜாக்ஷர ரூபமானவள். (2) லஜ்ஜா வடிவமானவள். (3) பஞ்ச தசாக்ஷரீ மந்த்ரத்தில் சில அக்ஷரங்கள் சிவ வடிவம். சக்தி வடிவமான அக்ஷரம் சில. சிவ சக்தி ஐக்யவடிவமானது ஹ்ரீம் என்ற அக்ஷரம்.

302. **ह्रींमत्यै नमः**-ஹ்ரீம் மத்யை நம:-லஜ்ஜையோடு கூடியவள். "லஜ்ஜாமதீ, துஷ்டி, ரிஷ்டாச" என வேதம் கூறுகிறது.

303. **हृद्यायै नमः**-ஹ்ருத்யாயை நம:-ஹ்ருதயத்தில் உள்ளவள். (2) அழகானவள்.

304. **हेयोपादेय वर्जितायैनमः** – ஹேயோபாதேய வர்ஜிதாயை நம: — தள்ளத்தக்கதும், கொள்ளத்தக்கதும் இல்லாதவள். நாம் விடத்தக்க கார்யங்களும் பொருள்களும் சில உள. ஏற்றுக்கொள்ள வேண்டிய கார்யங்களும் பொருள்களும் உள. கேவல க்ஞான வடிவையான தேவிக்கு இவைகள் இல்லை.

305. **राजराजार्चितायै नमः** –ராஜ ராஜார்ச்சிதாயை நம: —ராஜ ராஜரால் பூஜிக்கப்பட்டவள் தேவி. குபேரனால் பூஜிக்கப்பட்டவள் தேவி. தேவியின் சிந்தாமணி க்ருஹத்தைச் சுற்றியிருக்கும் ப்ராகாரங்களில், 14-15 இவைகளுக்கிடையே அமர்ந்து குபேரன் தன் பரிவாரத்துடன் அம்பாளை உபாஸிக்கிறான்.

306. **राज्ञ्यै नमः** –ராக்ஞ்யை நம: –ராணியாக இருப்பவள். ராஜ ராஜேச்வரன் அல்லது காமேச்வரன் என்பவரின் பட்ட மஹிஷியாக இருப்பவள்.

307. **रम्यायै नमः**–ரம்யாயை நம:-அழகுடையவள். (2) ஸந்தோஷப்படுத்துபவள்.

308. **राजीवलोचनायै नमः**–ராஜீவ லோசனாயை நம: தாமரை போன்ற கண் உள்ளவள். (2) ராஜீவ என்ற பதத்திற்கு மீன், மான் என்ற பொருள் உண்டு. ஆதலால், மீன் போன்ற, மான்கண் போன்ற, கண் உள்ளவள் என்றும் கூறலாம். (3) தன் பதியான ராஜேச்வரனை அடுத்த பக்தரிடம் கடாக்ஷம் செலுத்துபவள்.

309. **रञ्जन्यै नमः** – ரஞ்ஜன்யை நம: — சந்தோஷப் படுத்துபவள். (2) தனது சிவப்பு வர்ணத்தால் தன் கணவனையும் சிவப்பாகச் செய்பவள்.

310. **रमण्यै नमः** –ரமண்யை நம: -பக்தருடன் விளையாட்டாகப் பழகுகிறவள். சாந்தோக்ய உபநிஷத் " ஐக்ஷன், க்ரீடன், ரமமாண: " என்று வர்ணிக்கிறது.

311. **रस्यायै नमः** –ரஸ்யாயை நம: –ரஸிக்கத் தக்கவள். ரஸவடிவமானது ஆத்மா என வேதம் வர்ணிப்பதால், ஆத்ம ஸ்வரூபிணியான தேவி ரஸத்தைத் தருபவள்.

312. **रणत्किङ्किणि मेखलायै नमः** — ரணத் கிங்கிணி மேகலாயை நம: —சப்தம் செய்கின்ற சலங்கைகளுடன் கூடிய ஒட்டியாணம் உடையவள். " க்வணத் காஞ்சி தாமா " என்ற ஸௌந்தர்ய லஹரீ ச்லோகம் இதையே வர்ணிக்கிறது.

313. **रमायै नमः** –ரமாயை நம: –லக்ஷ்மியாக இருப்பவள்.

314. **राकेन्दु वदनायै नमः** -ராகேந்து வதனாயை நம: - பௌர்ணமி சந்த்ரனைப் போன்ற முகம் உள்ளவள்.

315. **रतिरूपायै नमः** –ரதி ரூபாயை நம: - ரதி வடிவமாக இருப்பவள். காமனது மனைவி ரதி. காமேச்வரனுடைய பத்னியாக உள்ளதால் தேவி ரதி எனப்படுகிறாள். "ரமா, ராகேந்து வதனா" என்பவைகளிலிருந்து ரதி ரூபா என்ற காம கலாக்ஷரம் ஏற்படுகிறது என்பர்.

316. **रतिप्रियायै नमः** — ரதி ப்ரியாயை நம: –ரதியினிடம் ப்ரியமுள்ளவள். ரதி தேவியினிடமும் போகத்திலும் ஆசை உள்ளவள்.

317. **रक्षाकर्यै नमः** –ரக்ஷாகர்யை நம: –காப்பாற்றுபவள். (2) ரக்ஷா எனும் விபூதியைச் செய்பவள். உல

கைப்படைத்து, பரிபாலித்து, ஸம்ஹாரம் செய்தபின் அது வெண்மை விபூதியாகின்றது. அதைச் செய்பவள்.

318. **राक्षसघ्न्यै नमः** – ராக்ஷஸக்ன்யை நம: –ராக்ஷஸர்களைக் கொல்லுபவள். உலகைக்காக்கும் தேவி, உலகை ஹிம்ஸிப்பவர்களைச் சிக்ஷிக்கவே துஷ்டரைக் கொல்கிறாள்.

319. **रामायै नमः** – ராமாயை நம: – ஸகல ஸ்த்ரீகளின் வடிவமானவள். உலகிலுள்ள ஸமஸ்த ஸ்த்ரீகளும் தேவி, புருஷர்கள் சிவன் என சிவபுராணம் கூறுகிறது. அங்ஙனமே ஸ்த்ரீகள் லக்ஷ்மி, புருஷர் விஷ்ணு என விஷ்ணு புராணம் கூறுகிறது. ஆதலால், எந்த ஸ்த்ரீ புருஷர்களையும் ஹிம்ஸிக்காமல் இருக்க வேண்டும். விசேஷமாகப் பெண்களை ஹிம்ஸிக்காததுடன், அன்பாகவும் நடத்தவேண்டும். (2) ஸகல யோகிகளையும் ஸந்தோஷப்படுத்துபவள்.

320. **रमणलंपटायै नमः** –ரமண லம்படாயை நம:– தன் பதியுடன் ரமிப்பதில் ஆசை உள்ளவள். தேவி அப்படி இருப்பதால்தான் ஸமஸ்த ஸ்த்ரீகளும் தம் தம் பதியினிடம் ரமிக்கின்றனர்.

321 **काम्यायै नमः** –காம்யாயை நம: – ஞானிகளால் விரும்பப்படுகிறவள். (2) க்ருஷ்ண பக்ஷ த்வாதசியான காம்யா என்ற ரூபமுள்ளவள்.

322. **कामकलारूपायै नमः** –காமகலா ரூபாயை நம:– காமகலை வடிவமானவள். பஞ்ச தசாக்ஷரியின் மூன்று கண்டங்களும் அம்பாளின் சிரஸ், மார்பு அதோ பாகம் என்ற 3 அவயவமாகும். ஆங்குள்ள 3 பிந்துக்களுடன் ஹார்த்த கலா என்பதும் சேர்ந்தால் 4 பிந்துக்கள் ஆகின்றன. காம என்ற கடைசி பிந்துவும், கலா என்ற இரண்டும் சேர்ந்தே **காம கலை** என்று கூறப்படுகிறது. இது காம கலா விலாஸத்தில் விஸ்தரிக்கப்படுகிறது.

323. **कदंबकुसुमप्रियायै नमः** கதம்பகுஸும ப்ரி யாயை நம: —கதம்ப புஷ்பத்தில் ஆசை உள்ளவள்.

324. **कल्याण्यै नमः**-கல்யாண்யை நம:-மங்கள ஸ்வ ரூபமானவள். (2) மங்களமான சொல் கல்யா எனப் படும். அதை உண்டுபண்ணுவதால் தேவி கல்யாணி. (3) மலய மலையில் கல்யாணி என்ற பெயருடன் இருப் பவள்.

325. **जगतीकन्दायै नमः** — ஜகதீ கந்தாயை நம: — ஜகத்திற்கு வேராக இருப்பவள்.

326. **करुणारस सागरायै नमः** — கருணா ரஸ ஸாக ராயை நம: — கருணை ஜலத்திற்குக் கடலானவள். அம் பாளது கருணைப் பெருக்கு கடல் போல் விசாலமானது. வற்றாதது.

327. **कलावत्यै नमः** — கலாவத்யை நம: —கலைகளை உடையவள். 64 கலைகளும் அன்னையினிடமிருந்தே உண்டாயின. சதுஷ்ஷஷ்டி கலாமயீ என்ற 236-வது நாமாவும் இதைக் கூறுகிறது.

328. **कलालापायै नमः** — கலாலாபாயை நம: —கலை களையே பேச்சாக உடையவள். அன்னையின் சொற்கள் அனைத்தும் கலைவடிவமானவை. " ஸமுன் மீலத் " என்ற ஸௌந்தர்ய லஹரீ ச்லோகமும் இதைக் கூறுகிறது. (2) அழகாகப் பேசுபவள். "நிஜஸல்லாப" என்ற 27-வது நாமாவும் இதைக் கூறுகிறது. ப்ரும்ம ஸ்வரூபத்தை எளிதில தரத்தக்கவள். க-ப்ரும்மம், லாலா-எச்சில் நீர். வாயில் எச்சில் நீர் ஊறுவது போல் ப்ரும்ம ஸ்வரூப ப்ரவாஹம் தேவியின் கருணையால் அனாயாஸமாக உண்டாகும்.

329. **कान्तायै नमः** —காந்தாயை நம: — அழகுள்ள வள். (2) ப்ரும்ம ஸ்வரூபத்தில் முடியும்படி செய்பவள். (3) க்ருஷ்ணபக்ஷ ஏகாதசியின் ராத்ரியான காந்தா என்பவளது ரூபமாக இருப்பவள்.

330. **कादंवरी प्रियायै नमः** — காதம்பரீ ப்ரியாயை நம: —உயர்ந்த மத்யத்தில் ப்ரியமுள்ளவள். பழக்கமாக மதுபானம் செய்யும் க்ஷத்ரியர் முதலிய ஜாதிகள்தான் தேவிக்கு மதுவை நிவேதனம் செய்து சாப்பிடலாம்.

331. **वरदायै नमः** — வரதாயை நம: — வரமளிப்பவள். (1) ப்ரும்மாதி மும்மூர்த்திகளுக்கும் மற்றவர்க்கும் வேண்டிய வரத்தைத் தந்தவள். (2) எல்லா விருப்பங்களையும் அளிப்பதாக இடது கரத்தில் காட்டும் வர முத்ரை உள்ளவள். வலது கையால் காட்டப்படுவது அபய முத்ரை. இதை ஸகல தேவதா விக்ரஹங்களினிடமும் காணலாம். தேவி தன் பாதத்தினுலேயே ஸகல வரங்களையும் தருகிருள். அதனுல்தான் தேவீ த்யானத்தில் 4 கரங்களிலும் பாசம், அங்குசம், வில், பாணம் இவை இருப்பதாகவே த்யானம் கூறப்படுகிறது. அபய வரத ஹஸ்தத்துடனல்ல. " த்வதன்ய: பாணிப்யாம் " என்ற ஸௌந்தர்ய லஹரீ ஸ்தோத்ரம் இதை விவரிக்கின்றது.

332. **वामनयनायै नमः** — வாம நயனுயை நம: — அழகான கண்களுள்ளவள். (2) வாம மார்க்கம் எனப்படும் தேவி உபாஸனையில் பக்தர்களை அழைத்துச் செல்பவள். (3) கர்ம பலனை அளிப்பவள். வாம எனில் கர்ம பலன். அதை அடைவிப்பவள்.

333. **वारुणीमद विह्वलायै नमः** — வாருணீ மத விஹ்வலாயை நம: — வாருணீ எனும் மதுபானத்தால் உண்டான ஆனந்தத்தினுல் மெய்ம் மறந்தவள். வருணனுக்கு ப்ரியமானதால் அதற்கு வாருணீ என்று பெயர் உண்டானது. அது பேரீச்சம் பழத்தினுல் உண்டாகும் மது. (2) வாருணீ மத், அவிஹ்வலா எனப் பிரித்து, வாருணியைக்கொண்டு, தன்னைப் பூஜித்த ஆதிசேஷன், களைப்பின்றி உலகைச் சுமக்கும்படி செய்கின்றவள் என்றும் பொருள். (3) நம் உடலிலுள்ள வாருணீ என்ற நாடியின் மூலம் உபாஸிப்பவரைக் களைப்பின்றிக் காப்பவள்.

334. **विश्वाधिकायै नमः** — விச்வாதி காயை நம: — உலகில் மிகச் சிறந்தவள். (2) ஸகல தத்துவங்களுக்கும் மேலானவள். பூமி முதல் சிவனோடு முடியும் ஸகல தத்துவங்களுக்கும் விச்வம் என்று பெயர். இவைகளைக் கடந்து சிவபக்தி ஸாமரஸ்யமான ஸாதாக்யம் எனும் தத்வ ரூபிணியாக இருப்பவள் தேவி.

335. **वेदवेद्यायै नमः** — வேத வேத்யாயை நம: — வேதங்களால் அறியத்தக்கவள். அறிவை விளக்கும் வேதத்தாலன்றி வேறு வகையால் தேவியை அடைய முடியாது. அன்னையின் சிந்தாமணி க்ருஹத்தின் நான்கு வாயிற்படிகளிலும் நான்கு வேதங்கள் வஸிக்கின்றன. அந்த வழியாகப் புகுந்துதான் தேவியைத் தர்சிக்க வேண்டும். (2) நான்கு வேதங்களுக்குத் தேவதைகளான சுத்த வித்யா, ஸௌபாக்ய: வித்யா, லோபாமுத்ரா வித்யா, துரீயாம்பா வித்யா முதலிய வித்யைகளால் அறியத்தக்கவள்.

336. **विन्ध्याचल निवासिन्यै नमः** —விந்த்யாசல நிவாஸின்யை நம: — விந்த்ய மலையில் இருப்பவள். விந்த்ய மலைமீது அமர்ந்து அஸுரர்களைக் கொல்வதாக தேவீ மாஹாத்ம்யம் கூறுகிறது.

337. **विधात्र्यै नमः** — விதாத்ர்யை நம: — உலகைத் தாங்குபவள். (2) உலகைப் போஷிப்பவள். (3) நெல்லிக் கனியில் விசேஷ விருப்பமுள்ளவள்.

338. **वेदजनन्यै नमः** — வேத ஜனன்யை நம: — வேதங்களைப் படைத்தவள். பரமாத்ம ஸ்வரூபமான தேவியினிடமிருந்தே ஸகல வேத சாஸ்த்ர, புராண, ஆகமங்கள் தோன்றின. அன்றியும் அம்பாளது ரூபமான குண்டலினீ சக்தியினிடமிருந்தே ஸகல சப்தங்களும் சப்த வடிவமான வேதமும் உண்டாயின.

339. **विष्णुमायायै नमः** —விஷ்ணு மாயாயை நம:— விஷ்ணுவின் மாயையாக இருப்பவள். எல்லாப் பொருள்

களிலும் நிறைந்து நிற்பவர் விஷ்ணு, அவரையும் வ்யாபித்து நிற்பவள் விஷ்ணு மாயா. பகவான் கீதையில் "மம மாயா" எனக் கூறுகிறார்.

340. **विलासिन्यै नमः** — விலாஸின்யை நம:— விலாஸ முள்ளவள். விலாஸம் எனில் கேளி, விளையாட்டு, சிற்றின்பத்தை வளர்க்கும் செயல் எனப் பொருள். அவ்வெல்லா விலாஸமும் தேவியிடமுண்டு, (2) பீட சக்தி ஒன்றிற்கு விலாஸினீ என்று பெயர். ஆதலால் அந்தப் பீட சக்தியாக இருப்பவள் என்றும் ஒரு பொருள் உண்டு. (3) வ, ப இவ்விரண்டிற்கும் பேதமில்லை. வங்காளம், பங்காளம் எனப்படுவதுபோல், விலாஸினீ என்பது பிலாஸினீ என்றும் கூறப்படும். மோக்ஷ த்வாரமான ப்ரும்மரந்த்ரத்திற்குப் பிலம் என்று பெயர். அதை அடைத்துக் கொண்டிருக்கும் சக்தியான பிலாஸினீ ரூபமானவள் என்றும் மற்றொரு பொருள் உண்டு.

341. **क्षेत्रस्वरूपायै नमः**:—க்ஷேத்ர ஸ்வரூபாயை நம:— க்ஷேத்ர வடிவமானவள். தேவி வஸிக்கும்படியான இடம் க்ஷேத்ரம் எனப்படும். நமது உடல் ஒரு க்ஷேத்ரம் எனக் கீதை கூறுகிறது. பிண்ட வடிவமான நமது உடலிலும், அண்டத்திலே பல விடங்களிலும் தேவி வஸிக்கிறாள். அவ்விடமெல்லாம் தேவியே.

தக்ஷயாகத்தில் தாக்ஷாயணி தனது உடலை விட்டாள். சிவன் அதைத் தூக்கித் தன் தோளில் வைத்துக்கொண்டு துக்கத்தால் திரிந்தபோது மஹாவிஷ்ணு உலகம் படும் துன்பத்தைக் கண்டார். அதை அகற்ற, தன் சக்ரத்தால் தாக்ஷாயணியின் அவயவங்களை அறுத்துத் தள்ளினார். அவை விழுந்த இடமெல்லாம் தேவி பீடமானது. அந்த க்ஷேத்ர வடிவமாக இருப்பவள் தேவி.

342. **क्षेत्रेश्यै नमः** — க்ஷேத்ரேச்யை நம:— க்ஷேத்ரங்களுக்குத் தலைவி. (2) க்ஷேத்ரேசனான சிவனது மனைவி.

343. **क्षेत्र क्षेत्रज्ञपालिन्यै नमः** — க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ பாலின்யை நம: — க்ஷேத்ரத்தையும், க்ஷேத்ரக்ஞனையும் பரிபாலிப்பவள். முன் கூறிய க்ஷேத்ரமெனும், க்ஷேத்ரக்ஞனெனும் ஈச்வரனையும் ப்ரக்ருதியாக இருந்து ரக்ஷிப்பவள்.

344. **क्षयवृद्धि विनिर्मुक्तायै नमः** — க்ஷய வ்ருத்தி விநிர் முக்தாயை நம: —குறைதல் வளர்தல் இல்லாதவள். உடலின் கார்யமே குறைவதும் வளர்வதும். உடல் ஸம்பந்த மில்லாத ஜீவ ஸ்வரூபமான தேவிக்கு இவை ஏது ?

345. **क्षेत्रपाल समर्चितायै नमः** — க்ஷேத்ர பால ஸமர்ச்சிதாயை நம: — க்ஷேத்திர பாலர்களால் நன்கு பூஜிக்கப்பட்டவள். (2) க்ஷேத்ர பாலகரான பைரவரால் பூஜிக்கப் பட்டவள். க்ஷேத்ரத்தையும் ஆலயத்தையும் ரக்ஷிப்பவர் பைரவர். காசி க்ஷேத்ர ரக்ஷகர் காலபைரவர். ப்ரதி ஆலயங்களையும் காப்பவர் பைரவர். ஆதலால், ஆலயத்தைப் பூட்டி அவரிடம் சாவியைக் (வைக்கும்) கொடுக்கும் பழக்கம் இன்றும் சில ஆலயங்களில் நடக்கிறது.

தாருகன் எனும் கொடிய அரக்கனைக் கொல்லப் பரமசிவன் காளியை ஏவினர். அவனைக் கொன்ற பின்பும் தேவிக்குக் கோபம் அடங்காததால் சிவன் குழந்தை வடிவமெடுத்துக் காளியினருகே சென்று அழுதுகொண்டிருந்தார். அழகிய அந்தச் சிசுவை எடுத்துத் தேவி பாலூட்டினள். ஸ்வாமி பாலுடன் அவள் கோபத்தையும் அருந்தி உலகைக் காப்பாற்றினர். அந்த அவதாரமே க்ஷேத்ர பாலர் எனப்படும்.

346. **विजयायै नमः** — விஜயாயை நம: — எப்போதும் ஜயமுள்ளவள். (2) பத்மன் என்ற அஸுரனை ஜயித்ததால் விஜயா என ப்ரஸித்தமானள். (3) காச்மீர தேசத்தில் வஸிக்கும் சிவனுக்கு விஜயர் என்று பெயர். அவரது சக்தியாயிருப்பதால் தேவி விஜயா எனப்படுகிருள். (4) விஜயா என்ற சுப முஹூர்த்த

மாக இருப்பவள். புரட்டாசிமீ சுக்லபக்ஷ தசமி திதி ஸாயங்காலம் நக்ஷத்திரம் உதயமாகும் முஹூர்த்தம் விஜய முஹூர்த்தமாம். அந்த ஸமயத்திலேயே அரசர் அம்பு போடுவர். அன்றைய தினத்திற்கு விஜய தசமி என்று பெயர். அன்று ஆரம்பித்த கார்யங்கள் எல்லாம் ஜயமாகவே முடியும். (ரத்ன கோசம்).

347. **विमलायै नमः** — விமலாயை நம: — மல ஸம்பந்த மற்றவள். அவித்யை முதலிய மலமில்லாதவள். (2) புருஷோத்தம க்ஷேத்திரத்தில் விமலா என்ற பெயருடன் இருப்பவள்.

348. **वन्द्यायै नमः** — வந்த்யாயை நம: — எல்லோராலும் நமஸ்காரம் செய்யத்தக்கவள்.

349. **वन्दारुजन वत्सलायै नमः** —வந்தாருஜன வத்ஸலாயை நம: — நமஸ்கரிக்கும் பக்த ஜனங்களிடம் அன்புள்ளவள்.

350. **वाग्वादिन्यै नमः** – வாக்வாதின்யை நம: —வாக்கைக் கூறுபவள். நாம் பேசும்படி செய்கிறவள் தேவி. (2) வாக்வாதினீ என்ற சக்தியாக இருப்பவள்.

351. **वामकेश्यै नमः** — வாமகேச்யை நம: — அழகான கூந்தலுள்ளவள். (2) பரமசிவனுக்கு வாமகேச்வரன், வாமேச்வரன் என்று பெயர். அவரது பத்னியாக இருப்பதால் வாமகேசி. (3) வாமகேச்வரரால் கூறப்பட்ட, வாமகேச்வர தந்த்ரத்தால் வர்ணிக்கப்படுபவள்.

352. **वह्निमण्डल वासिन्यै नमः** — வன்ஹிமண்டல வாஸின்யை நம: — அக்னி மண்டலத்தில் வஸிப்பவள். அக்னி மண்டலம் மூலாதாரத்திலும், பரமாகாசத்திலும் இருக்கின்றது. ப்ரும்மம் எனில் ஒன்று. அச்வினீ எனில் இரண்டு. அக்னி எனில் (கார்ஹபத்ய, ஆஹவனீய, தக்ஷிணாக்னி என்றவைகளைக் கணக்கிட்டு) மூன்று

என்று சாஸ்த்ர பரிபாஷை கூறும். அதன்படி (2) அக்னி, ஸூர்ய, சந்த்ர மண்டலங்களில் இருப்பவள். இது ஸ்ரீ சக்ரத்திலுள்ள ஷட் சக்ரங்களில் உள்ளது. (3) பஞ்ச தசாக்ஷரியிலுள்ள 3 கண்டமான 3 மண்டலத்தில் உள்ளவள்.

353. **भक्तिमत्कल्प लतिकायै नमः** –பக்திமத்கல்ப லதிகாயை நம: — பக்தர்களுக்குக் கல்பகக்கொடி போன்றவள். கல்பகக்கொடி பக்தர்களது ஸங்கல்பத்தைப் பூர்த்திசெய்வது போல், தேவி பக்தர் இஷ்டத்தைப் பூர்த்திசெய்பவள். "பயாத்ராதும்" என்ற ஸௌந்தர்யலஹரீ, கல்பகக்கொடியைவிட தேவி பக்தர்களுக்கு அதிகம் தருபவள் எனக் கூறுகிறது. (2) கொஞ்சம் குறைவாக இருக்கும் பக்தியை வ்ருத்தி செய்து பூர்ணமாகச் செய்பவள். (3) குறைவானதாக இருந்தாலும் பக்தர்களது பக்தியைக் கஸ்தூரிபோல் மணக்கும்படி செய்பவள்.

354. **पशुपाश विमोचन्यै नमः** — பசுபாச விமோசன்யை நம: — பசுக்களைப் பாசத்திலிருந்து விடுவிப்பவள். பசுவான ஜீவர்களை, பாசம் எனும் அவித்யையிலிருந்து தேவி விடுவிக்கிருள். பாச என்ற பதத்தை பா + அச என இரண்டாகப் பிரித்தால் பானம் செய்வது உண்பது என்ற அர்த்தம் தோன்றும். இந்த இரண்டிற்கும் அடிமையாகும் வரை ஜீவன் பசு எனப்படுவான். பசு பதி பாசம் என்பதை நன்கு விளக்குவது சைவமத நூல்கள்.

355. **संहृताशेष पाषण्डायै नमः** - ஸம்ஹ்ருதாசேஷ பாஷண்டாயை நம: — எல்லா பாஷண்டர்களையும் ஸம்ஹாரம் செய்தவள். பாஷண்ட, பாகண்ட என்ற இரு சொற்களும் ஒரே பொருள் உள்ளவை. வேத சாஸ்த்ர விரோதமான ஆசாரத்தைக் கைக்கொண்டவர்களும் ஸ்வதர்மத்தை விட்டவர்களும் பாஷண்டராவர். ரிக், யஜுஸ், ஸாம, அதர்வ என்ற 4 வேதங்கள். சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்ற

வேதாங்கங்கள் 6. புராணம், ந்யாயம், மீமாம்ஸா, தர்ம சாஸ்த்ரம் என்ற 4 உப அங்கங்கள். ஆக 14 வித்யைகள் நமது வைதிக தர்மத்தைக் கூறுகின்றன. இதைத் தழுவாத மற்றவைகள் பாஷண்ட சாஸ்த்ரங்கள்.

356. **सदाचार प्रवर्तिकायै नमः** — ஸதாசார ப்ரவர்த்திகாயை நம : — ஸதாசாரத்தை அனுஷ்டிக்கும்படி ஆரம்பித்தவள். வேத விரோதமானவர்களையும் அவர்கள் ஆசாரத்தையும் கண்டித்து, ஸதாசாரத்தை நிலை நாட்டி அதை அனுஷ்டிக்கும்படி செய்கிறாள் தேவி. வேத, வேதாங்காதிகளையும் 18 புராணங்களையும் ஒவ்வொரு த்வாபர யுகத்திலும் வேதவ்யாஸர் எப்படி வ்ருத்தி செய்கிறார் எனக் கூர்ம புராணம் கூறுகிறது.

357. **तापत्रयाग्नि सन्तप्त समाह्लादन चन्द्रिकायै नमः** — தாபத்ரயாக்னி ஸந்தப்த ஸமாஹ்லாதன சந்த்ரிகாயை நம :— மூன்று தாபங்களால் தாபமடைந்தவர்களை ஸந்தோஷப்படுத்தும் நிலாவாக உள்ளவள். மூன்று வகையான தாபங்கள் ஒவ்வொரு மனிதரையும் வாட்டுகின்றன. அவை ஆத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தைவிகம் என்பனவாம். நோயால், உண்டாவது ஆத்யாத்மிகதுக்கம். ஸர்ப்பம், புலி முதலியவைகளால் உண்டாவது ஆதி பௌதிகம். இடி, மழை, பூகம்பம் முதலியவைகளால் உண்டாவது ஆதி தைவிகம்,

358. **तरुण्यै नमः** —தருண்யை நம: —நித்யம் யுவதியாக இருப்பவள். கிழத்தனம், மரணம் முதலியவைகளின்றி எப்போதும் தருணியாகவே இருப்பவள்.

359. **तापसाराध्यायै नमः** -தாபஸாராத்யாயை நம :- தபஸ்விகளால் பூஜிக்கத்தக்கவள்.

360. **तनुमध्यायै नमः** — தனுமத்யாயை நம: — சிறியதான இடுப்புள்ளவள். ஸாமுத்ரிகா லக்ஷணத்தில் கூறியபடி குறுகிய இடை உள்ளவள் மிக உத்தமி. மஹாராணியாக இருப்பவள். தேவீ மஹாராக்ஞீ அல்லவா ? 37-வது நாம " லக்ஷ்ய ரோம " என்பது இதையே

விவரிக்கின்றது. (2) காஞ்சி க்ஷேத்ரத்தில் தனுமத்யா என்ற பெயருடன் இருப்பவள். (3) தனுமத்யா என்ற சந்தஸ்ஸாக இருப்பவள்.

361. **तमोपहायै नमः** —தமோபஹாயை நம: —இருளைப்போக்குபவள். அன்னையின் தேஹ காந்தியால் வெளி இருள் அகலுவது மாத்ரமல்ல. அவித்யை என்ற இருளும் அன்னையின் அருளால் நீங்கும். அம்பிகையை உபாஸிக்காதவர்கள் இருளால் சூழப்பட்டவராவர்.

362. **चित्यै नमः** — சித்யை நம; —ஞானஸ்வரூபிணியாக இருப்பவள். சித் என்பது இருளை அகற்றும் ஞான ஒளியாம். (2) ஸ்வதந்த்ரையாகவும் உலக ஸ்திதிக்குக் காரணமாயும் இருப்பவள். (3) சிர காலம் ஜீவித்திருக்க ஆசை கொண்டவர்களுக்கு ஜீவனைத்தருபவள்.

363. **तत्पद लक्ष्यार्थायै नमः** — தத்பத லக்ஷ்யார்த்தாயை நம: —தத் என்ற பதத்திற்கு லக்ஷ்ய அர்த்தமாக இருப்பவள். உபநிஷத்தின் ஸாரமான உபதேசம் "**தத்வமஸி**" என்ற மஹாவாக்யமாம். "நீ அந்த பரமாத்மாவாக இருக்கிறாய்" என்பது அதன் பொருள். அதில் "**தத்**" என்பது பரமாத்மா. "**த்வம்**" என்பது ஜீவாத்மா. "தத்" என்ற சொல்லுக்குத் தேவி லக்ஷ்ய அர்த்தமாக இருக்கிறாள். ஒரு சொல்லுக்கு உள்ள பொருள் நேராகப் பொருந்தாத விடத்தில், வாச்யம் என்ற அந்தப் பொருளைவிட்டு, லக்ஷ்யார்த்தம் என்ற குறிப்பான பொருளைக் கைக்கொள்ளவேண்டும். சுத்தனை ஒருவனைப் பார்த்து "இவன் நெருப்பு" என்றால், வாச்யார்த்தமான கொளுத்தும் தீ அங்கு இல்லாததால், லக்ஷ்யார்த்தமான "அக்னி போல் சுத்தன். ப்ரகாசமுள்ளவன்" என்ற பொருள் கொள்ளவேண்டும். அங்ஙனம், வாக்கிற்கும், மனதிற்கும் எட்டாத ஸ்ருஷ்டி ஸ்திதி லய கர்த்தாவான அந்த பரமாத்ம ஸ்வரூபத்தை இங்கு வாச்யார்த்தமாகக் கூற முடியாது. ஆதலால், அதற்குத் தேவி லக்ஷ்யார்த்தம் எனப்படும்.

364. **चिदेक रसरूपिण्यै नमः** — சிதேக ரஸ ரூபிண்யை நம: — சித் என்ற ஒரே ரஸவடிவமானவள். (2) சித் என்பதுடன் ஒன்ருகக் கலந்த ரஸரூபிணீ. ஸத் சித் ஆனந்தம் என்பது ப்ரும்மத்தின் ஸ்வரூபம். சித் முதலியவைகளைவிட வேருக இல்லாதவள் என்பது கருத்து.

365. **स्वात्मानन्द लवीभूत ब्रह्माद्यानन्द सन्तत्यै नमः** — ஸ்வாத்மானந்த லவீபூத ப்ரஹ்மாத்யானந்த ஸந்தத்யை நம: — தனது ஆனந்தத்தால் ப்ரும்மானந்தம் முதலியதை ஸ்வல்பமாகச் செய்பவள். உலகில் ப்ரும்மானந்தமே உயர்ந்தது என ப்ரஸித்தம். தைத்திரீய உபநிஷத் மனுஷ்ய ஆனந்தத்திலிருந்து நூறு நூறு மடங்காக அதிகமெனக் கூறி, ப்ரும்மானந்தமே கடைசியான்து என வர்ணிக்கிறது. சதுர்முக ப்ரும்மானந்தத்தைவிட விஷ்ணு லோக சிவலோக ஆனந்தம் சிறந்தது. அத் தகைய ஆனந்த பரம்பரைகள் எல்லாம் தேவியின் ஆனந் தத்தால் மிக ஸ்வல்பமாகச் செய்யப்படுகின்றன. அதாவது ஸமஸ்த ஆனந்தங்களையும் விட மிக மிகச் சிறந்தது தேவி ஆனந்தம். " சிதி முதல் இந்த நாமா வரையுள்ள நான்கும் மோக்ஷ ஸ்வரூபத்தைக் கூறி, தேவி உபாஸகர் மோக்ஷானந்தம் பெறுவர் " என எண்பிக்கின்றன.

366. **परायै नमः** — பராயை நம: — பரா என்ற சப்த ஸ்வரூபிணீ. சப்தமும் அர்த்தமும் எப்போதும் சேர்ந்திருக்கும். உபநிஷத்தின் அர்த்த வடிவம் தேவீ எனக் கூறப்படுகிறது. சப்த ஸ்வரூபமாகவும் இருக் கிருள் என இந்த நாமா முதல் சில நாமாக்கள் வர்ணிக் கின்றன.

ப்ரளய காலத்தில் உலகெலாம் தன் தன் காரண வஸ்துவில் லயமாகி, முடிவில் பரமாத்மாவினிடம் ஒடுங்கு கின்றது. ஸ்ருஷ்டிக்கு ஏற்றகாலம் வந்தபோது ஜகத் தைப் படைக்கும் இச்சை உண்டாகிறது. அச்சமயம் ப்ரும்மம் மாயையுடன் கூடி அவ்யக்தமாக ஆகிறது.

இந்த நிலையில் தந்த்ர சாஸ்த்ரம் ப்ரும்மத்தைக் காரண பிந்து என அழைக்கிறது. அதிலிருந்து கார்ய பிந்து, நாதம், பீஜம் இவை ஒன்றினிடமிருந்து ஒன்ருக உண்டாகின்றன. கார்ய பிந்து பரா என்றும், நாதபிந்து ஸூக்ஷ்மம் என்றும், பீஜம் ஸ்தூல மென்றும் கூறப்படு கின்றன. அன்றியும், காரண பிந்துவை அவ்யக்த ப்ரும் மம் என்றும், கார்ய பிந்துவை ஈச்வரன் என்றும், நாதத்தை ஹிரண்யகர்ப்பன் என்றும், பீஜத்தை விராட் என்றும் அழைப்பர். நமது உடலில் உள்ள மூலாதாரத் தில் குண்டலினீ சக்தியாக இருப்பதும் இந்தக் காரண பிந்துவேயாகும். இது மற்ற மூன்றையும் படைக்கும் போது சப்த ப்ரும்ம என ஒருவித சப்தமுண்டாகின்றது. இந்த சப்தமும் ப்ராண வாயுவும் மூலாதாரத்திலே இருக் கின்றன. இந்த சப்தமே **பரா** எனப்படுகிறது. அந்த பரா வடிவமானவள் தேவி.

இந்த சப்தமானது வாயுவினுல் தூண்டப்பட்டு மேலே நாபிக்கு அருகே வந்தவுடன் மனதுடன் சேர்ந்து கார்ய பிந்துவாக ஆகின்றது. அதே **பச்யந்தீ** (368) எனப்படுகிறது. அதேபோல் அந்த சப்தமானது ஹ்ரு தயத்தின் அருகே சென்று புத்தியுடன் சேர்ந்தபோது நாதஸ்வரூபமாக ஆகின்றது. அது அச்சமயம் **மத்யமா** (370) என்று அழைக்கப்படுகிறது. அதேபோல் அந்த சப்தமானது கழுத்தின் அருகே வந்து வாய்வழியாக வெளியில் அக்ஷர வடிவமாக வரும்போது பீஜமாக மாறு கிறது. அதே **வைகரீ** (371) எனப்படுகிறது. (2) பரா-மிகச் சிறந்தவள். பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்ற மூன்றிற்கும் காரணமாகயிருப்பதால் பரா எனப்படு கிருள் தேவி. (3) பரானந்த நாதருக்கு ப்ரத்யக்ஷமான தாலும் பரா.

367. **प्रत्यक्चिती रूपायै नमः**–ப்ரத்யக் சிதீ ரூபாயை நம: — உள் நோக்கியிருக்கும்படி செய்யும் சித்ரூபமாக இருப்பவள். **பராக்** எனில் வெளிமுகமானது. **ப்ரத்யக்** எனில் உள்முகமானது. உள்நோக்கும் சித் ஸ்வரூப மானது பராசத்தியின் ஸ்வரூபம். " இந்த்ரியங்கள் வெளிமுகமாகவே படைக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால்

உள்நோக்கி ஆத்மாவை அவை பார்ப்பதில்லை '' என்று உபநிஷத் கூறுகிறது. அன்னையின் அருளால் கோடியில் ஒருவர் இந்த்ரியங்களை உள்முகமாகச் செய்து பரமாத்ம தர்சனம் செய்கிறார்.

368. पश्यन्त्यै नमः — பச்யந்த்யை நம: — பச்யந்தீ என்ற வாக்காக இருப்பவள். மூலாதாரத்திலிருக்கும் சப்தம் பரா. நாபியில் வரும்போது பச்யந்தீ எனப்படுகிறது. (2) எல்லா வஸ்துக்களையும் தன்னிடம் பார்ப்பவள்.

369. परदेवतायै नमः — பரதேவதாயை நம: — உத்தம தேவதையாக இருப்பவள். தாய்போல் எல்லோரிடமும் அன்புகொண்டிருப்பதாலும் ஸகல தேவதைகளுக்கும் சக்தி அளிப்பதாலும் தேவி பரதேவதை ஆவாள்.

370. मध्यमायै नमः — மத்யமாயை நம: — மத்யமா என்ற வாக் ரூபமானவள். மூலாதாரத்திலிருந்து கிளம்பி நாபியைத் தாண்டி ஹ்ருதயத்திற்கு வந்தபோது அந்த வாக்கானது **மத்யமா** எனப்படுகிறது. பின்னர் கூறப்படும் வைகரீ சப்தம் மிக ஸ்பஷ்டமானது. முன் கூறிய பச்யந்தி எனும் சப்தம் மிக அஸ்பஷ்டமானது. இவ்விரண்டிற்கும் நடுவில் இருப்பதால் இது மத்யமா என்று அழைக்கப்படுவது மிக உசிதமானது.

371. वैखरी रूपायै नमः — வைகரீ ரூபாயை நம: — 'வைகரீ' என்ற வாக்கு வடிவமானவள். மூலாதாரத்திலிருந்து கிளம்பி நாபி, ஹ்ருதயங்களைத் தாண்டி கழுத்தின் வழியாக வாய் முதலிய இடங்களில் உச்சரிக்கப்படும் சப்தமே வைகரீ எனப்படுகிறது. மற்ற 3 இடங்களில் ம்ருதுவாக இருந்து முகத்திலிருந்து வரும்போது மிகக் கடினமாக ஆகிறது என்று பதத்தினால் விளங்கும் பொருள்.

372. भक्तमानस हंसिकायै नमः — பக்தமானஸ ஹம்ஸிகாயை நம: — பக்தர்களின் மனதில் ஹம்ஸம் போல் இருப்பவள். மானஸ என்ற சொல் மானஸ ஸரஸ்ஸைக்

கூறும். மனமாகின்ற மானஸ ஸரஸ்ஸில் ஹம்ஸம்போல் ப்ரகாசிப்பவள். ப்ரும்மாவின் மனதால் கைலாஸத்தில் படைக்கப்பட்ட குளம் மானஸ ஸரஸ் எனப்படும். ஹம்ஸங்கள் எங்கு சென்ருலும் கடைசியில் மானஸ ஸரஸில் வந்து தங்கும். அதே போல், தேவி பக்தரைக் காக்க, துஷ்டரைக் கொல்ல, வேறெங்கு சென்ருலும், நிர்மலமான பக்தர் மனதிலே வந்து களிப்பாள்.

373. **कामेश्वर प्राणनाड्यै नमः** — காமேச்வர ப்ராண நாட்யை நம: — காமேச்வரருடைய ஜீவநாடியாக இருப்பவள். அம்ருதத்தை அருந்திய அமரர் அனைவரும் ப்ரளய காலத்தில் இறக்கின்றனர். காமேச்வரனே, அம்ருதம் உண்ணுததுடன் ஹாலா ஹல விஷத்தை உட்கொண்டும் எப்போதும் இறக்காமல் இருக்கிருர். அதற்குக் காரணம் தேவி அவர் உள்ளே ப்ராண நாடியாய் இருப்பதே யாம். இந்தக் கருத்தை " ஸுதாமப்யாஸ்வாத்ய" என்ற ஸௌந்தர்ய லஹரீ கூறுகிறது. பார்வதியுடன் ஒன்ருகத் தேவி இங்கு உபசாரமாக வர்ணிக்கப்படுகிருள்.

374. **कृतज्ञायै नमः** – க்ருதக்ஞாயை நம: —செய்த கார்யங்களை அறிகிறவள். நாம் ரஹஸ்யமாகவோ, ப்ரகாசமாகவோ செய்யும் ஸகல கர்மங்களையும் சந்த்ர ஸூர்யர், யமன், காலம், மண், நீர், கனல், காற்று, ஆகாயம் ஆகிய 9 பேரும் ஸாக்ஷியாக இருந்து பார்த்துக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் ரூபமாக இருந்து எல்லா கர்மாக்களையும் அறிகிருள் தேவி. (2) நன்றி மறவாதவள். (3) ஸ்வதஸ் ஸித்தமான க்ஞானம் உள்ளவள். (4) க்ருதயுகம் போல் களங்கமற்ற க்ஞானம் உள்ளவள். (5) க்ருதம் என்ற சொக்கட்டான் ஆட்டத்தை அறிந்தவள்.

375. **कामपूजितायै नमः** — காமபூஜிதாயை நம: — காமனுல் பூஜிக்கப்பட்டவள். மன்மதன் ஸ்ரீ வித்யோபாஸகன்.

376. **शृङ्गाररससंपूर्णायै नमः** –ச்ருங்காரரஸ ஸம்பூர்ணையை நம: —ச்ருங்கார ரஸம் நிறைந்தவள். தேவியின் பலவித ரூபங்களில் ஸ்ரீ லலிதா தேவி ச்ருங்கார ரஸ ப்ரதானமானவள். (2) பூர்ண கிரி பீடமானவள். இதற்கு முன் நாமாவில் காமகிரி பீடம், கூறப்பட்டது. பின்னர். ஜாலந்தர பீடம் ஒட்யாண பீடம் முதலியன வர்ணிக்கப் படுகின்றன. சப்த ப்ரஹ்மத்தின் ரூபங்களான காரண பிந்து, கார்ய பிந்து, நாதம், பீஜம் ஆகிய இவை நமது உடலிலே காமகிரி பீடம், பூர்ண கிரிபீடம், ஜாலந்தர பீடம், ஒட்யாண பீடம் எனப்படும். இந்த நான்கும் மூலாதாரம், அனாஹதம், விசுத்தி, ஆக்ஞா என்ற ஸ்தானங்களில் அமைந்திருக்கின்றன.

377. **जयायै नमः** — ஜயாயை நம: — ஜயரூபமாக இருப்பவள். (2) வராஹமலையில் ஜயா என்ற பெயருடன் இருப்பவள்.

378. **जालन्धर स्थितायै नमः** – ஜாலந்தர ஸ்திதாயை நம: —ஜாலந்தரம் எனும் பீடத்தில் இருப்பவள். ஜாலந்தரம் எனும் க்ஷேத்ரத்தில் தேவி விஷ்ணுமுகீ என்ற பெயருடன் இருப்பவள்.

379. **ओड्याण पीठ निलयायै नमः** — ஒட்யாண பீட நிலயாயை நம: — ஒட்யாணம் எனும் பீடத்தில் இருப்பவள். ஜாலந்தரம், ஒட்யாணம் என்பவை வெளியில் க்ஷேத்ரங்களாக இருந்தாலும் நம் உடலிலே உள்ள ஷட் (6) சக்ரங்களிலும் இருக்கின்றன. சிறந்த உபாஸகர்கள் உள்ளே பாவனையால் அர்ச்சிப்பர்,

380. **विन्दुमण्डल वासिन्यै नमः** — பிந்து மண்டல வாஸின்யை நம:— பிந்துவாகிய மண்டலத்தில் வஸிப்பவள். ஒன்பது சக்ர வடிவமான ஸ்ரீ சக்ரத்தில் ஸர்வானந்த மய சக்ரம் என்பது பிந்து எனப்படும். அங்கு வஸிப்பவள் தேவி. (2) ப்ரும்ம ரந்த்ரத்தில் வஸிப்பவள்.

381. **रहोयाग क्रमाराध्यायै नमः** – ரஹோயாக க்ரமா ராத்யாயை நம: – ரஹஸ்யமான யாகத்தால் ஆராதிக்கத் தக்கவள். கனக குண்டிலினீ அதிஷ்டானமாக இருக்கும் சிதக்னியில் செய்யும் ரஹஸ்ய யாகத்தால் ஆராதிக்கத் தக்கவள். (2) குண்டிலினீ சக்தி, முறையே ஆறு சக்ரங்களைத் தாண்டி ஸஹஸ்ரதள பத்மத்திற்கு வந்து ஆங்குள்ள பரமசிவனுடன் சேர்ந்து ரஹஸ்யமாக விளையாடுவது ரஹோயாகமாம். (3) மிக ரஹஸ்யமான ஸ்ரீ வித்யையால் உபாஸிக்கத் தக்கவள்.

382. **रहस्तर्पण तर्पितायै नमः** –ரஹஸ்தர்ப்பண தர்ப்பிதாயை நம: — ரஹஸ்யமான தர்ப்பணத்தால் ஸந்தோஷப்படுத்தப் பட்டவள். மந்த்ரத்தின் அர்த்தத்தை நன்கு உணர்வதே ரஹஸ்ய தர்ப்பணமாம். அதனால் தேவி ஸந்தோஷிக்கிருள். " நமது உள்ளே எப்பொழுதும் (ஜீவவடிவமாய்) விளக்கில்லாமல் ஜ்வலித்துக் கொண்டிருப்பதும், மோஹமெனும் இருளை அகற்றுவதும், அத்புதமான ஜ்வாலை உள்ளதுமான ஸம்வித் அக்னியில் பூமி முதல் சிவன் வரையிலுள்ள தத்துவத்தை ஹோமம் செய்கிறேன். ப்ரகாச விமர்சம் எனும் கரங்களில் இருக்கும் உன்மனீ எனும் ஸ்ருக்கினுல் (ஹோமம் செய்ய ஸாதனமான மரக் கரண்டி) தர்ம அதர்ம கலைகளாகிற நெய்யைப் பூர்ணுக்னியில் ஆஹுதி செய்கிறேன் " என நினைப்பது ரஹோயாகம் எனப்படும்.

383. **सद्यः प्रसादिन्यै नमः** –ஸத்ய: ப்ரஸாதின்யை நம: —சீக்கிரமாக அனுக்ரஹம் செய்பவள். முன் கூறிய படி ரஹோயாகம் செய்பவருக்கே சீக்ரத்தில் அருள் புரிகிருள் தேவீ. அவள் பதியான தேவனும் அங்ஙனமே " ஆசு தோஷர் " — அதாவது விரைவில் ஸந்தோஷப் படுகிறவர் என அழைக்கப்படுகிருர்.

384. **विश्वसाक्षिण्यै नमः** — விச்வ ஸாக்ஷிண்யை நம: — ஸமஸ்த வஸ்துக்களுக்கும் ஸாக்ஷியாக இருப்பவள். ஸாக்ஷி எப்படி அந்தந்த கார்யத்தில் தான் ஈடுபடா

மல் பார்த்துக் கொண்டு மாத்ரம் இருப்பானே, அங்ஙனம் நாம் செய்தவற் கெல்லாம் உள்ளேயுள்ள தேவி பொறுப்பில்லாமல் பார்த்துக்கொண்டிருப்பவள்.

385. **साक्षिवर्जितायै नमः** — ஸாக்ஷி வர்ஜி தாயை நம: — தனக்கு யாதொரு ஸாக்ஷியும் இல்லாதவள். உலகம் செய்யும் கார்யத்தைத் தேவி பார்த்த வண்ணம் இருக்கிறாள். அவள் செய்யும் வேலையைக் காண யாருமில்லை.

386. **षडङ्ग देवतायुक्तायै नमः** — ஷடங்க தேவதா யுக்தாயை நம: — ஆறு அங்க தேவதைகளுடன் கூடியவள். ஹ்ருதயம், சிரஸ், சிகை, கண், கவசம், அஸ்த்ரம் என்ற 6 ந்யாஸங்களில் உள்ள தேவதைகளால் சூழப் பட்டவள். (2) ஸர்வக்ஞ சக்தி, த்ருப்தி, க்ஞானம், ஸ்வதந்த்ரம், குறைவற்ற சக்தி, அனந்தமாகஇருத்தல் ஆகிய ஆறு அங்கங்களுடன் கூடிய பரம சிவத்துடன் கூடியிருப்பவள். (3) சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம். கல்பம் என்ற வேதாங்கமான ஆறு தேவதைகளால் சூழப்பட்டவள்.

387. **षाड्गुण्यपरिपूरितायै नमः** — ஷாட்குண்ய பரிபூரிதாயை நம: — ஆறு குணம் நிறைந்தவள். செல்வம், தர்மம், யசஸ், ஸ்ரீ, க்ஞானம், வைராக்யம் என்ற ஆறு குணம் நிறைந்தவள். (2) ஸந்தி, சண்டை, ஸேனை, ஸேனையுடன் பாசறையில் இருத்தல், அணி வகுத்தல், பிறரை ஆச்ரயித்தல், முதலிய ராஜ குணங்கள் நிறைந்தவள்.

388. **नित्य क्लिन्नायै नमः** —நித்ய க்லின்னையை நம:— எப்பொழுதும் தயையால் நனைந்தவள். (2) நித்ய க்லின்ன என்ற திதி தேவதையாக இருப்பவள்.

389. **निरुपमायै नमः** —நிருபமாயை நம: —தனக்கு உபமை இல்லாதவள். "ந தஸ்ய ப்ரதிமா அஸ்தி"

என்ற உபநிஷத் இந்த உண்மையைக் கூறுகிறது. " தனக்கு உவமை இல்லாதவள் " என்று குறள் கூறுகிறது.

390. **निर्वाण सुखदायिन्यै नमः** — *நிர்வாண ஸுகதாயின்யை நம: — மோக்ஷ ஸுகத்தைத் தருபவள். வ, ப, இரண்டும் ஒன்றே. " நிர்வாண " என்பது " நிர்பாண" எனப்படும். "பாணம்" எனில் சரீரம் என்று பொருள். மோக்ஷ ஆனந்தம் இந்த உருவுள்ளது எனக் கூற முடியாதது.*

391. **नित्याषोडशिका रूपायै नमः** — *நித்யா ஷோடசிகா ரூபாயை நம: — 16 திதி நித்யா தேவதா ரூபிணீ. ப்ரதமை முதல் பௌர்ணமி வரையிலுள்ள 15 திதிகளுக்கும் அதிஷ்டான தேவதை 15 நித்யைகள். தேவி 16வது ஆவள். (2) ஷோடசீ என்ற யாகத்தால் ஆராதிக்கத் தக்கவள். கோடிக் கணக்கான ஷோடசி யாகத்தால் ஸந்தோஷப் படுவதைவிட ஷோடசாக்ஷரீ ஜபத்தால் அதிக ஸந்தோஷ மடைபவள்.*

392. **श्रीकण्ठार्ध शरीरिण्यै नमः** — *ஸ்ரீ கண்டார்த்த சரீரிண்யை நம: — பரமசிவனது பாதி சரீரத்தைப் பெற்றவள். தேவியும் தேவனும் சேர்ந்து அர்த்தநாரீஸ்வர ஸ்வரூபம் என்பது ப்ரசித்தம். (2) ' அ ' எனும் எழுத்தாக இருந்து மற்ற எழுத்துக்களின் பாதியைக் கொண்டு உச்சரிக்கப்படுபவள். அதாவது, ஸ்ரீ கண்ட எனில் ' அ ' என்று பொருள். ' க ' என்ற போது ' க் ' பாதியும் ' அ ' பாதியும் சேர்த்து பூர்ணமாகிறது.*

393. **प्रभावत्यै नमः** — *ப்ரபாவத்யை நம: — காந்தி உள்ளவள். (2) அணிமா முதலிய ப்ரபைகளால் சூழப்பட்டிருப்பவள்.*

394 **प्रभारूपायै नमः** — *ப்ரபா ரூபாயை நம : — ப்ரபையையே உருவமாக உடையவள். " மனோ மயாபா ரூபா " என வேதம் வர்ணிக்கிறது.*

395. **प्रसिद्धायै नमः** — ப்ரஸித்தாயை நம: — ப்ர ஸித்தமானவள். எல்லோருக்கும் "நான்," "நான்" என்று ப்ரஸித்தமாகத் தெரிந்தவள். தன்னை அனைவரும் "நான்" என அறிவர். ஆனால் "அந்த நான் என்பது எது" என்பதை அறியார்.

396. **परमेश्वर्यै नमः** – பரமேச்வர்யை நம: –சிறந்த ஈச்வரியாக இருப்பவள். தேவிக்குமேல் ஈச்வரி இல்லாத தாலும் ஈச்வரியைப்போல் உயர்ந்த குணம் ஒருவருக்கும் இல்லாததாலும், தேவி சிறந்த ஈச்வரி எனப்படுகிறாள்.

397. **मूलप्रकृत्यै नमः** — மூல ப்ரக்ருத்யை நம: — ஆதி காரணமான ப்ரக்ருதியாய் இருப்பவள். (2) ஸ்ரீ வித்யை என்ற மூலத்திற்கு ப்ரகாசம், விமர்சம் என்ற அக்ஷர ரூபமான ப்ரக்ருதியாயிருப்பவள். (3) குண்ட லினீ சக்தியான ப்ரக்ருதியாய் இருப்பவள். (4) மண் தனது ப்ரக்ருதியான நீரில் லயிக்கும். இப்படி எல்லா வற்றிற்கும் லய ஸ்தானமாய், தனக்கு லய ஸ்தானம் இல்லாமல் மூல ப்ரக்ருதியாய் இருப்பவள். (5) இறை வன் உலகைப் படைப்பதற்கு ஸாதனமான ப்ரக்ருதி யாய் இருப்பவள். இது மாயை, ஈக்ஷணம், தபஸ், காமம், விசிகிர்ஷை எனப் பல பெயர்களால் அழைக்கப் படுகிறது.

398. **अव्यक्तायै नमः** – அவ்யக்தாயை நம: –வ்யக்த மாய்த் தெரியாதவள். உலகைப் படைக்கக் கருதும் ஈச் வரனது காம ரூபமான ப்ரக்ருதியே அவ்யக்தம் எனப் படும். ஸாங்க்ய மதம் இந்த ப்ரக்ருதி அல்லது ப்ர தானமே உலகைப் படைத்து ஒடுக்குவது. ஈச்வரன் தாமரை இலையிலுள்ள ஜலம்போல் இருக்கிறார். ப்ரக்ருதி தத்வம் 25. ஈச்வரன் ஒரு தத்வம். ஆக 26 தத்வ விசா ரணை செய்து, ப்ரக்ருதி தத்வத்திலிருந்து புருஷனை விடு விப்பதே மோக்ஷம். (2) அவ்யக்தம் எனும் விஷ்ணு ரூப மானவள்.

399. **व्यक्ताव्यक्त स्वरूपिण्यै नमः** — வ்யக்த அவ்யக்த ஸ்வரூபிண்யை நம: — வ்யக்தமும் அவ்யக்தமுமான ரூப

முள்ளவள். எல்லாவற்றிற்கும் முதலாவதாக வ்யக்தமாக ஏற்பட்டது. மஹத். அது வ்யக்தம் எனப்படும். அந்த மஹத்திலிருந்து உண்டானது. எல்லோராலும் நான் என அறியப்படுவது அவ்யக்தமாம். மஹத், அஹங்காரம் எனும் இரண்டு ரூபமாயிருப்பதால் தேவி வ்யக்தா வ்யக்த ரூபிணி யாவாள். (2) உடலெடுக்கும் போது வ்யக்தம் இல்லாத போது அவ்யக்த மானவள். (3) க்ஷர அக்ஷர மானவள். (4) வ்யஷ்டி, ஸமஷ்டி யானவள். (5) அவித்யா மலமற்றவருக்கு வ்யக்தமாயும், மலமுள்ள வருக்கு அவ்யக்தமாயும் உள்ளவள்.

400. **व्यापिन्यै नमः** — வ்யாபின்யை நம: — எங்கும் வ்யாபித்திருப்பவள். உலகைப் படைத்து அதனுள் நுழைந்து அங்கிங் கெனுதபடி எங்கும் நிறைந்தவள்.

401. **विविधाकारायै नमः** — விவிதாகாராயை நம: — பலவகையான உருவம் உள்ளவள். ப்ராக்ருத, கௌமார, வைக்ருத, ஸ்ருஷ்டிகளில் கூறப்படும் பற்பல உருவங்களை உடையவள். (2) ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் என்ற ப்ராணிகள் உருவமாக உள்ளவள்.

1. மனிதர், மிருகம் முதலியன கருப்பையில் உண்டாகின்றவை. 2. முட்டையிலிருந்து உண்டாகின்றவை. 3. உஷ்ணத்தால் உண்டாகும் தேள் போன்றவை. 4. பூமியிலிருந்து வெடித்துவரும் செடி கொடிகள்.

402. **विद्या अविद्या स्वरूपिण्यै नमः** — வித்யா அவித்யா ஸ்வரூபிண்யை நம: — வித்யை, அவித்யை என்ற இரண்டு ஸ்வரூபமாகவும் உள்ளவள். வித்யை என்பது ஜீவ ஆத்ம ஐக்யத்தைக் கற்பிப்பது. மற்றதெல்லாம் அவித்யையாம். "அவித்யையால் ம்ருத்யுவை ஜயித்து வித்யையால் அம்ருதத்தை அடைகிருள்" என உபநிஷத் கூறுகிறது. இதைச் சுருக்கி விளக்கிக் கூறுவதாஞல் வேதாந்தமாயும் இருப்பவள் எனலாம்.

403. **महाकामेशनयन कुमुद आह्लाद कौमुद्यै नमः** –
மஹாகாமேச நயன குமுத ஆஹ்லாத கௌமுத்யை நம:- மஹாகாமேச்வரருடைய கண்களெனும் குமுத புஷ்பத்தை மலர்த்தும் நிலா. தேவிக்கு மஹாகாமேச்வரீ என்று ஒரு பெயர். தேவியின் பதிக்கு மஹாகாமேச்வரர் என்று பெயர். தேவியைக் காணும்போது, பகவானது கண்கள் ஸந்தோஷமடைகின்றன. நிலாபோல் இன்பத்தைத்தரும் முகக் காந்தி உள்ளவள் தேவி என்பது கருத்து.

404. **भक्त हार्द तमो भेद भानुमद्भानुसंतत्यै नमः** —
பக்த ஹார்த தமோ பேத பானுமத் பானு ஸந்தத்யை நம:— பக்தர்களுடைய ஹ்ருதயத்திலிருந்து இருளை நீக்க ஸூர்ய கிரணக்கூட்டமானவள். அக்ஞானமே இருட்டு எனப்படுகிறது. தேவியின் அருள் கிடைத்தமாத்திரத்தில், ஸூர்யன் எதிரில் இருள் நிற்காததுபோல், அக்ஞானம் பறந்துவிடும். '' அக்ஞானத்வாந்த பாஸ்கரா '' என்ற நாமாவும் இப்பொருளை விளக்குகிறது.

405. **शिवदूत्यै नमः** — சிவதூத்யை நம: —சிவனைத் தூதனாக உடையவள். சும்பன், நிசும்பன் எனும் அரக்கர்களுடன் போர் புரியும்போது கருணா மூர்த்தியான தேவி ஸாக்ஷாத் சிவனையே தூதராக அனுப்பினாள். அவரே தூதராக வந்ததால் தேவியின் பராக்ரமமும் சக்தியும் எத்தகையது என அறிந்து அவ்வஸுரன் தேவ ராஜ்யத்தை விட்டு விட்டுத் தப்பித்துக் கொள்ளலாகாதா என்பது தேவியின் திருவுள்ளம்.

406. **शिवाराध्यायै नमः** —' சிவாராத்யாயை நம: — சிவனால் ஆராதிக்கத்தக்கவள். தேவி பகவானை உபாஸித்துப் பாதி சரீரம் பெற்றதுபோல், பரமசிவனும் தேவியை உபாசித்து அர்த்த நாரீஸ்வரர் ஆனார். (ப்ருமாண்ட புராணம்.) சக்தியினால் தான் சிவனாக ஆகிறார். ஆனதால், சிவனால் ஆராதிக்கத் தக்கவள். அன்றியும், சிவமும் சக்தியும் ஒன்றேயானதால், பரஸ்பரம் பூஜிப்

பதும் உசிதமேயாம். சிவனைத் தேவி எப்படி தூதனுக அனுப்பலாம் என ஸந்தேஹம் தோன்றக் கூடாது என்றே அடுத்த நாமா அமைந்தது போலும்.

407. **शिवमूर्त्यै नमः** — சிவமூர்த்யை நம: — சிவன் வடிவமானவள். சிவனும் தேவியும் வேறல்ல என்பதைக் காட்ட இந்த நாமா இங்கு நன்கு அமைக்கப்பட்டது. (2) மங்களமான மூர்த்தியுடையவள்.

408. **शिवंकर्यै नमः** — சிவம் கர்யை நம: — மங்களத்தைச் செய்பவள். பக்தனது விருப்பத்திற்கேற்க, போகம், மோக்ஷம் என்ற மங்களத்தைத் தருபவள்.

409. **शिवप्रियायै नमः** — சிவப்ரியாயை நம: — சிவனுக்கு ப்ரியமானவள், சிவனிடம் ப்ரியமுள்ளவள் என இருவகையாகவும் பொருள் உண்டு.

410. **शिवपरायै नमः** — சிவபராயை நம: — சிவனையே சிறந்தவராக எண்ணுபவள். (2) சிவனைவிடச் சிறந்தவள். குழந்தைகளிடம், தந்தையைவிடத் தாயே அதிக அன்பு கொண்டதால் பக்தர்களுக்குச் சிவனைவிடச் சிறந்தவள். இக் கருத்தைக் கொண்டேதான் " சத்தியில்லையேல் சிவனே என்றுகிட " என்ற பழமொழி தோன்றிற்று போலும்.

411. **शिष्टेष्टायै नमः** — சிஷ்டேஷ்டாயை நம: —சிஷ்டர்களுக்கு இஷ்டமானவள். (2) சிஷ்டரிடம் இஷ்டமுள்ளவள். ச்ருதி ஸ்ம்ருதி கூறும் ஸதாசாரத்தைப் பின்பற்றுபவர் சிஷ்டர். அவரிடம் தேவிக்கு அன்பும், தேவியிடம் அவர்களுக்கு அன்பும் இருப்பது ஸஹஜமேயாம்.

412. **शिष्टपूजितायै नमः** — சிஷ்டபூஜிதாயை நம: — சிஷ்டர்களால் பூஜிக்கப்பட்டவள்.

413. **अप्रमेयायै नमः** — அப்ரமேயாயை நம: — அளவிட முடியாதவள். (2) மும்மூர்த்திகளால் நன்கு அறியப்பட்டவள். ' அ ' எனில் ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரர் என்றும் பொருள் உண்டு.

414. **स्वप्रकाशायै नमः** — ஸ்வப்ரகாசாயை நம: — தானே ப்ரகாசமாக இருப்பவள். சந்த்ரன், ஸூர்யன், அக்னி இவர்களின் ப்ரகாசத்தினால்தான் நமக்கு வஸ்துக்கள் ப்ரகாசமாகின்றன. அவர்களுக்குப் பரப்ரும்ம வடிவமான தேவியே ப்ரகாசத்தைத் தந்தவள். அவள் ஸ்வயம் ப்ரகாசமாக உள்ளவளாதலால், அவளை ப்ரகாசப்படுத்த வேறுவஸ்து தேவையில்லை. வேறு வஸ்துவுமில்லை அல்லவா ?

415. **मनोवाचाम गोचरायै नमः** — மனோவாசாம கோசராயை நம: — மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதவள். தேவியின் ஸ்வரூபம் " வாக்கிற்கும் எட்டாதது " என்பதைப் பல உபநிஷத்துகள் வர்ணிக்கின்றன. ஆனால், எப்படித்தான் தேவியைத் தர்சிப்பது எனில், அவள் அருளால், சுத்தமான, ஸூக்ஷ்மமான புத்தியால் ஸூக்ஷ்ம தர்சிகள் காணலாம். ஸ்தூலமான வெளி வஸ்துக்களைக் காண்பதும், மனதால் மற்றதை எண்ணுவதும் போல் அன்று. அன்னையை உபாஸித்தால், அவள் அருளால் அவளை நிர்குண ப்ரும்மமாகவும் ஸகுணமாகவும் காணலாம்.

416. **चिच्छक्त्यै नमः** — சித்சக்த்யை நம: — சித் எனப்படும் சக்தி ரூபமானவள். ஜடத்தை (அக்ஞானத்தை) அகற்றுவது " **சித்** " எனப்படும். இந்த சக்தி பரப்ரும்மத்தின் ஸ்வரூபமாம். அதன் அம்ஸம் நம்மிடம் ஜீவனாக இருக்கிறது.

417. **चेतनारूपायै नमः** — சேதனா ரூபாயை நம: — சைதன்ய ரூபமாக இருப்பவள். முன் நாமாவின் கருத்தையே இதுவும் விளக்குகின்றது. " சிதக்னி குண்டஸம்

பூதா," "சைதன் யார்க்ய ஸமாராத்யா" போன்ற பல நாமாக்கள் தேவியே சைதன்ய ஸ்வரூபிணீ என விளக்குகின்றன.

418. **जडशक्त्यै नमः** – ஜடசக்த்யை நம: – ஜடசக்தியாக இருப்பவள். உலகைப் படைக்க உபயோகமாகின்ற மாயையின் பரிணமம் ஜடம் எனப்படும். சித் சக்தியைத் தவிற மற்றதெல்லாம் ஜடமாகும். பஞ்ச பூதங்களாலாகிய நமது உடல் ஜடம். அதாவது, உணர்ச்சியின்றி, ஒரு வித கார்யமுமின்றி இருப்பதாம். அதில் ஜீவன் எனும் சித்சக்தி உள்ளே புகுந்தால், நமக்கு ஸகல உணர்ச்சியும் கர்மாவும் உண்டாகின்றன. தேவி ஜடமாகவும் சித் சக்தியாகவும் இருக்கிருள். இதே கீதையில் ப்ரக்ருதி, புருஷன் எனப்படுகிறது.

419. **जडात्मिकायै नमः** — ஜடாத்மி காயை நம: — ஜடவடிவமாக இருப்பவள். சித் சக்தியாகவும், ஜட சக்தியாகவும் இருக்கிருள் என்பது முன் கூறப்பட்டது. அந்த ஜடவடிவமான ப்ரபஞ்ச ரூபமாகவும் இருக்கிருள் என இங்கு கூறப்படுகிறது.

420. **गायत्र्यै नमः**–காயத்ரியை நம:–காயத்ரியாய் இருப்பவள். மந்த்ரங்களில் சிறந்த மூன்று பாதமுடைய காயத்ரியாக இருப்பவள் தேவி. ஒவ்வொரு வேதத்திலிருந்து ஒவ்வொரு பாதமாக ப்ருமாவிஞல் அமைக்கப் பட்டவள். (2) ஸகல வேதங்களுக்கும் தாயான காயத்ரீ தேவி. (3) காயத்ரீ எனும் சந்தஸ் வடிவமானவள். இந்த காயத்ரீ உபதேசிக்கப்படுவது உபநயன கர்மாவில். அது ப்ரும்ம ஸ்வரூபமானதால், ப்ரும்மோபதேசம் எனப்படுகிறது. காயத்ரீ ஸஹஸ்ரநாமம், கவசம் முதலியன தேவீ பாகவதத்தில் வர்ணிக்கப்படுகின்றன,

421. **व्याहृत्यै नमः** –வ்யாஹ்ருத்யை நம: –வ்யாஹ்ருதியாக இருப்பவள். முதலில், அ—உ—ம என்ற எழுத்துக்களின் சேர்க்கையான ப்ரணவமும், அதிலிருந்து மூன்று வ்யாஹ்ருதிகளும், அதிலிருந்து மூன்று பாத

முள்ள காயத்ரியும், அதிலிருந்து மூன்று வேதங்களும் உண்டாயின. ஆதலின், முதலில் ப்ரணவம், பிறகு மூன்று வ்யாஹ்ருதிகள், பிறகு காயத்ரீ என்ற முறையில் காயத்ரியை ஜபிக்கின்றோம். ப்ராணுயாமத்தில், பூராதி 7 வ்யாஹ்ருதிகள் கூறப்படுகின்றன. அவை ஏழு உலகங்களின் பெயர்களாம். அந்த வேத சப்தங்களை ப்ரும்மா வாயினுல்கூற, அவ்வேழு உலகங்களும் தோன்றின. அத்தகைய வேத மந்த்ரமான வயாஹ்ருதி வடிவம் தேவி.

422. **संध्यायै नमः** — ஸந்த்யாயை நமः —ஸந்த்யா ரூபமானவள். ஸந்த்யா காலவடிவமானவள். ஸந்த்யை எனும் கர்மவடிவமானவள். ஸந்த்யையால் உபாஸிக்கத் தக்கவள் என பல பொருள்கள் உண்டு. பகலும் இரவும் சேரும்காலம் ஸாயம் ஸந்த்யா. இரவும் பகலும் சேரும் காலம் ப்ராதஸ் ஸந்த்யா. இந்த காலங்களில் செய்யப் படும் உபாஸனைக்கும் ஸந்த்யா என்றே பெயர். ஜீவன் ப்ரும்மா இவர்களின் சேர்க்கை வடிவமானதே சிறந்த ஸந்த்யையாம். (2) இடா, பிங்களா, ஸுஷும்நா என்ற மூன்று நாடிகள் சேர்ந்திருப்பது போல், மஹாகாளி, மஹாலக்ஷ்மீ, ஏகவீரா இவர்களது சேர்க்கை ஸந்த்யா. (ரேணுகா புராணம்.) (3) ஒரு வயதுள்ள கன்யகைக்கு ஸந்த்யா எனப் பெயர். அந்த வடிவமாகவும் தேவி இருக்கிருள். (4) ஸ்வப்னுவஸ்தையாய் இருப்பவள்.

423. **द्विजवृन्द निषेवितायै नमः** —த்விஜப்ருந்த நிஷேவிதாயை நமः — த்விஜர்களது கூட்டத்தால் ஸேவிக்கப் படுகிறவள். தாய் வயிற்றிலிருந்து ஒரு முறை பிறந்து, ஜாதகர்மா, உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்களால் மற்றும் ஒரு ஜன்மா பெறுவதால், ப்ராம்மண, க்ஷத்ரிய, வைச்யர் த்விஜர் எனப்படுவர். அவர்கள் ப்ரதிதினம் தேவியை ஸந்த்யா வந்தன மூலமாக உபாஸிக்கின்றனர். சிஷ்டேஷ்டா 411 முதல் 423 வரை காயத்ரீ வடிவமாக உபாஸிக்க வேண்டிய முறை நன்கு வர்ணிக்கப்பட்டது. மேலே 429 வரை ஸந்த்யை உபாஸனையால் உண்டாகும் பலனுன மோக்ஷஸ்வரூபம் கூறப்படுகிறது.

424. **तत्वासनायै नमः** — தத்வாஸனுயை நம: — தத்வங்களை ஆஸனமாக உடையவள். ப்ருத்வி முதல் சிவன் வரையிலுள்ள தத்துவத்தின் மீது தேவி அமர்ந்திருக்கிருள். (2) இந்த தத்துவங்களைக் கடந்து மேலாக இருப்பவள்.

425. **तस्मै नमः** — தஸ்மை நம: —**தத்** (அந்த) ரூபமானவள். அந்த என்ற சொல் மஹா மஹிமை வாய்ந்த பரமாத்ம ஸ்வரூபத்தைக் கூறும். அடுத்த நாம **த்வம்** என்பது ப்ரபஞ்சத்தைக் கூறும். அதற்கடுத்த நாம இரண்டிற்கும் ஐக்யத்தைக் கூறும். இம் மூன்றும் சேர்ந்தால், உபநிஷத்தில் கூறப்படும் மஹா வாக்யமாகும். **அஸி** என்றவிடத்தில், **அஸி** எனப்படும் மஹா வாக்யத்தில். இதுதான் இரண்டிற்கும் பேதம்.

426. **तुभ्यं नमः** — துப்யம் நம: — நீ எனப்படுபவள். நான் என்பது பரமாத்ம ஸ்வரூபம். நீ என்பது ஜீவன் முதலான ஸமஸ்த ப்ரபஞ்ச ரூபம். அதிலுள்ள ஜட அம்சம் கிஞ்சித்க்ஞத்வம், முதலியவைகளை விட்டு விட்டே ஜீவப்ரும்ம ஐக்யம் கூறப்படுகிறது. அன்னை பரப்ரம்ம வடிவமானவள். அது ப்ரகாச விமர்ச ரூபங்களின் ஐக்யம் என்றும், ப்ரகாசம் என்பது ஸ்ரீ காமேச்வரர் என்றும், விமர்சம் என்பது காமேச்வரீ என்றும் கூறப்படுகிறது. 907-வது நாம தத்வமயீ என்று ஒன்ருகவும், இங்கு தனியாக 3 நாமாவாகவும் பிரிக்கப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

427. **अय्यै नमः** — அய்யை நம: — அயீ எனப்படுபவள். அன்போடு அன்னையை அழைக்கும் சொல் இது. (2) அத்ருஷ்ட வடிவமானவள்.

428. **पञ्चकोशान्तर स्थितायै नमः** — பஞ்ச கோசாந்தர ஸ்திதாயை நம: — ஐந்து கோசங்களுக்கு இடையே உள்ளவள். நமது உடலிலுள்ள அன்னமய, ப்ராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய என்று ஐந்து

கோசங்களுக்கு இடையே உள்ளவள் தேவி. (2) பஞ்ச பஞ்சிகா எனும் பூஜையில் பயன்படும் பஞ்சகோசம் எனும் மந்த்ரத்தின் இடையில் உள்ளவள். பஞ்ச கோசங்கள் பஞ்ச லக்ஷ்மிகள், பஞ்ச கல்பலதைகள், பஞ்ச காம தேனுக்கள், பஞ்ச ரத்னங்கள் ஷை பூஜையில் கூறப்படுபவை.

429. **निः सीम महिम्ने नम** : — நிஸ்ஸீம மஹிம்னே நம: — எல்லையில்லா மஹிமை உள்ளவள்.

430. **नित्ययौवनायै नम** :–நித்ய யௌவனாயை நம:– எப்போதும் யௌவனமுள்ளவள்.

431. **मदशालिन्यै नम** : — மத சாலின்யை நம: — மதத்தால் ப்ரகாசிப்பவள். இங்கு மதம் என்ற சொல்லிற்கு ஆனந்தம் என்று பொருள்.

432. **मदघूर्णित रक्ताक्ष्यै नम** : — மத கூர்ணித ரக்தாக்ஷ்யை நம: — மதத்தால் சுழலும் சிவந்த கண் உடையவள்.

433. **मद पाटल गण्डभुवे नम** : —மத பாடல கண்டபுவே நம: —மதத்தால் சிவந்த கன்னங்களை உடையவள்.

434. **चन्दनद्रव दिग्धाङ्ग्यै नमः** -சந்தன த்ரவ திக்தாங்க்யை நம: –சந்தனக் குழம்பு பூசிய அங்கம் உள்ளவள்.

435. **चांपेयं कुसुमप्रियायै नमः** — சாம்பேய குஸுமப்ரியாயை நம: —சம்பக புஷ்பத்தில் ப்ரியம் உள்ளவள்.

436. **कुशलायै नमः** – குசலாயை நம: — ஸாமர்த்யமுள்ளவள். ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம் என்ற கார்யங்களில் மிக்க ஸாமர்த்யம் வாய்ந்தவள்.

437 **कोमलाकारायै नमः** – கோமளாகாராயை நம: – அழகிய உடல் உள்ளவள்.

438. कुरुकुल्लायै नमः — குருகுல்லாயை நம: —குருகுல்லா என்ற தேவி வடிவமானவள். ஸ்ரீ நகரத்தில் சித்தம், அஹங்காரம், என்ற இரு ப்ரகாரங்களுக்கு இடையே விமர்சம் எனப்படும் நடபாவியில் இருப்பவள் குருகுல்லா தேவி. நமது உடலில் வாராஹியைப் பிதாவாகவும், குருகுல்லாவை மாதாவாகவும் எண்ணும்படி பாவனோப நிஷத் கூறுகிறது.

439. कुलेश्वर्यै नमः — குலேச்வர்யை நம: — குலத்திற்கு ஈச்வரியாக உள்ளவள். மாத்ரு, மேய, மிதி, அதாவது, ஒன்றை அளப்பவர். அளக்கத்தக்க வஸ்து அளப்பது என்பவை குலம் எனப்படும். அதற்கு ஈச்வரீ. அதாவது. இவைகளெல்லாம் தேவியினுலேயே தோன்றுகின்றன. 90-வது நாமாவில் குலம் என்பது விளக்கப்பட்டுள்ளது.

440. कुलकुण्डालयायै नमः -குலகுண்டாலயாயை நம: குலகுண்டத்தை இருப்பிடமாகக்கொண்டவள். குண்டலினீ சக்தியானது தாமரைக் கிழங்கு போன்ற இடத்தை மூன்றரைசுற்று சுற்றிக்கொண்டு, தாமரைத்தண்டிலுள்ள த்வாரம்போன்ற பிந்துவில் தலை வைத்துப் படுத்திருப்பதால், குலகுண்டாலயா எனப்படுகிருள் தேவி. ஷை பிந்து குலகுண்டம் எனப்படும்.

441. कौलमार्ग तत्पर सेवितायै नमः – கௌலமார்க்க தத்பரஸேவிதாயை நம: –கௌல மார்க்கத்தில் மிக்க ஈடுபட்டவர்களால்ஸேவிக்கப்பட்டவள். அவரவரது குலபரம்பரையாக வந்த வழியில் முயற்சி கொண்டவர்கள் தேவியை உபாஸிக்கின்றனர். ஸமயமதம், கௌலமதம், மிச்ர மதம் என்று ஸ்ரீவித்யையில் மூன்று பேதம் உண்டு. (1) சுக, வஸிஷ்ட, ஸனக, ஸனந்தன, ஸனத்குமாரஸம்ஹிதைகள் எனப்படும், சுப ஆகம பஞ்சாங்கத்தில் சொல்லப்பட்டதும், வைதிக மார்க்கத்தைத் தழுவியதுமான மதம் ஸமய மதம் எனப்படும். (2) 64 தந்த்ரங்களால் கூறப்படுவது கௌல மதம். (3) சந்த்ரகலா,

ஜ்யோத்ஸ்னுவதி கலாநிதி, குலார்ணவம், குலேச்வரி, புவநேச்வரி, பார்ஹஸ் பத்யம், தூர்வாஸ மதம்; என்ற எட்டு நூல்களால் கூறப்படுவது மிச்ர மதம் எனப்படும். இதில் ஸமயமதம்கௌலமதம்இரண்டும்கலந்திருப்பதால்இதை மிச்ர மதம் என்பார்கள். ஸ்மய மதம் வைதிகர்களாலும், கௌலமதம் 3 வர்ணத்தாராலும்,மிச்ரமதம் 4 வர்ணத்தார்களாலும் அனுஷ்டிக்கத்தக்கன. மிச்ரம் அபஸவ்யம் என்றும்,மற்றவை ஸவ்யம் எனவும் கூறப்படும்.(லக்ஷ்மீதரர்)

442. **कुमार गणनाथांबायै नमः** - குமார கணநாதாம்பாயை நம: — குமாரனுக்கும் கணநாதனுக்கும் தாய். (2) சிவனும், விஷ்ணுவும் புருஷர். உமையும், லக்ஷ்மியும் அவ்யக்தம். இதில், சிவன் உமா இவர்களது சேர்க்கையால் உண்டானவர் ஸேனுபதியான குஹர் அஹங்காரம் எனப்படுவர்' ஆதலால், குமார கண என்ருல் அஹங்காரக் கூட்டம் என்று பொருள். அதை அடக்கி ஆளுவதால், தேவி குமார கண, நாதா, என்று இரண்டாவது பொருள் கூறப்படும்.

443. **तुष्ट्यै नमः** — துஷ்ட்யை நம: —துஷ்டி எனும் த்ருப்தியாக இருப்பவள். (2) வஸ்த்ரேச்வர க்ஷேத்ரத்தில் துஷ்டி என்ற பெயருடன் இருப்பவள்.

444. **पुष्ट्यै नमः** — புஷ்டியை நம: — புஷ்டிஎனும் செழிப்பாக இருப்பவள். தேவதா நக்ஷத்ரத்தில் புஷ்டி என்ற பெயருள்ளவள்.

445. **मत्यै नमः** — மத்யை நம: –புத்தியாய் இருப்பவள். மனிதருக்குப் பகுத்தறிவை அளிப்பவள் தேவி.

446. **धृत्यै नमः** —த்ருத்யை நம: —தைர்ய ரூபமாக இருப்பவள். (2) பிண்டாரக க்ஷேத்ரத்தில் த்ருதி என்ற பெயருடன் இருப்பவள்.

447 **शान्त्यै नमः** — சாந்த்யை நம: — சாந்தி ரூபமானவள். (2) வாயுவின் கலையான சாந்தியாக இருப்பவள். மாயையால் துன்பப்படும் ஜீவர்களுக்கு, வாயு

வினது சாந்தி எனும் கலை, சாந்தியை அளிக்கின்றது. (சைவாகமம்)மூக்கின் நுனியிலிருந்து 15 அங்குலத்திற்கப்பால் சாந்தி என்ற கலை இருக்கின்றது. அங்கு ஜீவனது துக்கம் அகன்று சாந்தி ஏற்படுகின்றது. ப்ருஹத்(பராசர ஸ்ம்ருதி)

448. **स्वस्तिमत्यै नमः** — ஸ்வஸ்தி மத்யை நம: — க்ஷேமத்தை உடையவள். (1) எக்காலத்திலும் அழியாதிருப்பவள். ஸு — அஸ்தி — மதி என மூன்று சொற்களின் சேர்க்கை இது. (அஸ்தி) இருப்பது என்பதை ஸத்தா என்பர். இதை வேதாந்த சாஸ்த்ரம் ப்ராதி பாஸிகம், வ்யாவஹாரிகம், பாரமார்த்திகம் என மூன்ருகப் பிரிக்கின்றது. இருட்டில் ஒரு கட்டையைப் பார்த்து திருடன் என எண்ணுவது ப்ராதி பாஸிகம். அதாவது உண்மை அறியும்வரை தோற்றம். (2) உலகில் நாமும் நம்மால் காணப்படுபவைகளும் வ்யவஹாரத்தில் ஸத்தாக கூறப்படுகின்றன. க்ஞானிக்கு அது உண்மையல்ல. (3) முன்னும், பின்னும், இப்போதும், எப்போதும், ஏகரூபமாக அழியாதிருப்பது பாரமார்த்திகஸத்தா எனப்படும். அதே ஸ்வஸ்திமதி என்ற சொல்லுக்குப் பொருள்.

449. **कान्त्यै नमः** — காந்த்யை நம: — காந்தி ரூபமாக இருப்பவள். துஷ்டி, புஷ்டி, புத்தி, தைர்யம், சாந்தி, மங்களம், காந்தி என்ற இவ்வேழும் தேவியின் ஸ்வரூபமாகும். ஆதலால் இக்குணம் வாய்ந்தவருக்குத் தேவி மிக ஸுலபமானவள்.

450. **नन्दिन्यै नमः** — நந்தின்யை நம: — நந்தன் பெண்ணுக இருப்பவள். பகவான் வஸுதேவரிடம் தோன்றியபோது மாயாதேவியை நந்தனிடம் பெண்ணுகப் பிறக்கும்படிச் செய்தார். அதைக் கம்ஸன் கொல்ல முயற்சிக்கும்போது தேவி தன் ஸ்வரூபத்துடன் கிளம்பினுள். (2) நந்தினீ என்ற காம தேனுவின் பெண்ணுக இருப்பவள். அந்த நந்தினியை உபாஸித்து, திலீபமஹாராஜா ரகு என்ற புத்ரனைப் பெற்ருர். (பாத்மம்)

451. **विघ्न नाशिन्यै नमः** —விக்ன நாசின்யை நம:— விக்னங்களை நாசம் செய்பவள். ஸ்ரீ வித்யை, ஆத்ம வித்யை இவைகளுக்குத் தோன்றும் விக்னங்களை அகற்றி, பக்தருக்கு அருள் புரிபவள்.

452. **तेजोवत्यै नमः** — தேஜோவத்யை நம: — தேஜஸ் உள்ளவள்.

453. **त्रिनयनायै नमः** —த்ரிநயனாயை நம; —மூன்று கண்ணுள்ளவள். ஸோம, ஸூர்ய, அக்னி என்ற மூன்று கண்களுடையவள். (2) ப்ரத்யக்ஷம், அனுமானம், சப்தம் என்ற மூன்று ப்ரமாணம் உள்ளவள். அவைகளால் அறியத்தக்கவள். தக்ஷிணமார்க்கம், உத்தர மார்க்கம், ப்ரும்ம மார்க்கம் என்ற மூன்று வழியாக பக்தரை அழைத்துச் செல்பவள்.

454. **लोलाक्षी कामरूपिण्यै नमः** — லோலாக்ஷீ காம ரூபிண்யை நம: — சஞ்சலமான கண் உடையவரது காம ரூபமானவள். சஞ்சலமான கண் பெண்களுக்கே லக்ஷணமாம். அவர்களது காமவடிவமானவள் தேவி. காமத்திற்கு அதி தேவதையான யோகேச்வரீ வடிவமானவள். காமத்திற்கு அதிதேவதை யோகேச்வரீ. க்ரோத அதிதேவதை மாஹேச்வரீ. லோப அதிதேவதை வைஷ்ணவீ. மத அதிதேவதை ப்ரஹ்மாணீ, மோஹ அதிதேவதை கல்யாணீ. மாத்ஸர்ய அதிதேவதை இந்த்ராணீ. பைசுன்ய அதிதேவதை (கோள் சொல்லுதல்) யமதண்டதரா. அஸூயா அதிதேவதை வாராஹீ. (வராஹ புராணம்) லோலாக்ஷீ, காம ரூபிணீ என்ற இரண்டு நாமாவாகக் கூறுவர் சிலர்.

455. **मालिन्यै नमः** – மாலின்யை நம: – மாலையைத் தரித்திருப்பவள். (2) மாலினீ என்ற சக்தியாயிருப்பவள். 51 அக்ஷரங்களுக்கு அபிமானி தேவதை மாலினீ சக்தி. (3) மாலினீ என்ற பார்வதி தேவியின் தோழியாக இருப்பவள். (4) ஏழு வயதுள்ள கன்யகை ரூபமானவள்.

456. **हंसिन्यै नमः** — ஹம்ஸின்யை நம: – ஹம்ஸங்களை உடையவள். அன்னையின் சிந்தாமணி க்ருஹத்தில் பல ஹம்ஸங்கள் தேவியின் நடையைக் கற்க ஆவல் கொண்டு வஸிக்கின்றன. (2) பரமஹம்ஸர் பலர் அம்பாளிடம் வஸிக்கின்றனர். (3) ஹம்ஸ என்ற அஜபா காயத்ரீ வடிவமாக இருப்பவள்.

457. **मात्रे नमः** — மாத்ரே நம: – தாயாராக இருப்பவள். மந்த்ரங்களுக்கும் தாய். (2) நாம பாராயணத்தில் தசமீ திதி நித்யா தேவதா ரூபமாக இருப்பவள். (3) காயாவரோஹண க்ஷேத்ரத்தில் மாதா என்ற பெயருடன் இருப்பவள்.

458. **मलयाचल वासिन्यै नमः**— மலயாசல வாஸின்யை நம: — மலய மலையில் வஸிப்பவள். மலயாசல பகவதி என்ற தேவியின் பெருமையை சாபரசிந்தாமணி என்ற நூல் விஸ்தாரமாக வர்ணிக்கிறது. மலயாசல பகவதி என்பது மலயாள பகவதீ என மாற்றி அழைக்கப்படுகிறது.

459. **सुमुख्यै नमः** — ஸுமுக்யை நம: — ப்ரகாசமான முகம் உள்ளவள். (2) ஷோடசியின் அங்க தேவதையான ஸுமுகியாக இருப்பவள்.

460. **नलिन्यै नमः** — நளின்யை நம: — தாமரை போன்றவள். அன்னையின் கை, கால், கண், முகம் முதலியன தாமரை போலிருப்பதால் தேவியே தாமரை எனப்படுகிறாள். (2) கங்கா வடிவமானவள். (3) நளன், தேவியிடம் லயமானதால் நளினீ.

461. **सुभ्रुवे नमः** — ஸுப்ருவே நம: — அழகான புருவமுள்ளவள். ஸௌந்தர்யலஹரீ "ப்ருவௌபுக்னே" என்ற ச்லோகத்தால் இதை வர்ணிக்கின்றது.

462. **शोभनायै नमः** — சோபனாயை நம: – மங்களமானவள். ஆசோபனா என 972-வது நாம.

463. **सुरनायिकायै नमः** — ஸுரநாயிகாயை நம: — தேவர்களுக்குத் தலைவி.

464. **कालकण्ठ्यै नमः** – கால கண்ட்யை நம: – கால கண்டரது பத்நீ. ஹாலாஹல விஷத்தை உண்டதால் சிவன் கழுத்து கறுப்பானது. ஆதலால் அவர் நீலகண்டர் எனப்படுகிறார். (2) காலஞ்ஜரக்ஷேத்ரத்தில் காலகண்டர் என்ற பெயருடன் விளங்கும் சிவனது பத்நீ. (3) மதுர மான கண்டம் உள்ளவள்.

465. **कान्तिमत्यै नमः** — காந்திமத்யை நம:—காந்தி உடையவள். காந்தியாகவே இருக்கிறாள் என 449-வது நாம.

466. **क्षोभिण्यै नमः** — க்ஷோபிண்யை நம: — தீவ்ர மான உணர்ச்சியை உண்டு பண்ணுபவள். ஸ்ருஷ்டிக்கு முன் பரமாத்மாவினிடம் ஸ்ருஷ்டியைச் செய்வதற்காகத் தேவி ஒருவகை உணர்ச்சியை உண்டு பண்ணுகிறாள். (2) கலக்கம் உள்ளவள். மந்தர மலையில் வைஷ்ணவீ தேவி தவம் செய்யும்போது அஸுரரால் பக்தருக்கு உண்டா கும் துன்பத்தை எண்ணி மனங்கலங்கினாள்.

467. **सूक्ष्मरूपिण्यै नमः** –ஸூக்ஷ்ம ரூபிண்யை நம:– ஸூக்ஷ்மமான ரூபம் உள்ளவள். (2) ஸூக்ஷ்மா என்ற ஹோம ரூபமானவள். (தந்த்ரராஜம்) தேவிக்கு ஸ்தூல ஸூக்ஷ்ம பர என்கிற 3 ரூபங்கள் உண்டு. அதில் ஸூக்ஷ்ம ரூபமிங்கு கூறப்பட்டது.

468. **वज्रेश्वर्यै नमः** – வஜ்ரேச்வர்யை நம: – வஜ்ரே ச்வரீ ரூபமாக இருப்பவள். ஷஷ்டி திதியினுடைய நித்யா தேவதை வஜ்ரேச்வரீ எனப்படுவாள். (2) வஜ்ரா நதிக்குத் தேவதையானவள். ஸ்ரீநகரத்தின் பனிரண்டா வது மதில் வஜ்ரமணியாலாகியது. அதனருகே ஓடும் நதி வஜ்ரா. அதனால் வஜ்ரேச்வரீ. (லலிதாஸ்தவராஜம்)

469. **वामदेव्यै नमः** -வாமதேவ்யை நம: –வாமதேவ ருடைய பத்நீ. எல்லோராலும் வணங்கப்படுவதாலும்,

அழகாக இருப்பதாலும், அழகான பார்வதிக்கு இடதுபுர மளித்ததாலும். சிவன் வாமதேவர் எனப்படுகிறார். அன்றியும், சிவனது 5 முகங்களில் ஸத்யோ ஜாதம் மேற்கிலும், வாமதேவம் வடக்கிலும், தத்புருஷம் கிழக்கிலும், அகோரம் தெற்கிலும், ஈசாநம் நடுவிலுமிருக்கின்றன. வாமதேவ முகம் சிவப்பானது. அதன் பத்நியானவள். (2) வாம மார்க்கமாக உபாஸிப்பவருக்குத் தேவியாயிருப்பவள்.

470. **वयोऽवस्थाविवर्जितायै नमः** – வயோ அவஸ்தா விவர்ஜிதாயை நம: — வயதாலும் அவஸ்தை இல்லாதவள். நித்யமாயுள்ள தேவிக்கு குழந்தை பருவம் முதலிய அவஸ்தைகளில்லை.

471. **सिद्धेश्वर्यै नमः** — ஸித்தேச்வர்யை நம: — ஸித்தர்களுக்கு ஈச்வரீ, நாரதர், மத்ஸ்யேந்த்ரர், கோரக்ஷர் முதலியவர்கள் ஸித்தர்கள். (2) காசியில் ஸித்தேச்வரீ என்ற பெயருடன் இருப்பவள்.

472. **सिद्धविद्यायै नमः** — ஸித்த வித்யாயை நம: – ஸித்த வித்யா ரூபமாக இருப்பவள். பஞ்சதசீ என்ற மந்த்ரம் ஸித்தவித்யா எனப்படும். பொதுவாக மந்த்ரங்களை ஸித்த அரிசக்ர பரீக்ஷை செய்தே உபதேசம் பெற வேண்டும். அதாவது இந்த மந்த்ரம் இந்த ஜாதகனுக்கு ஏற்றதா? என பார்த்தல். பஞ்சாக்ஷரீ பஞ்சதசாக்ஷரீ இவைகட்கு அது பார்க்கவேண்டாம் என்று பொருள்.

473. **सिद्धमात्रे नमः** – ஸித்த மாத்ரே நம: – ஸித்தர்களுக்குத் தாய்.

474. **यशस्विन्यै नमः** – யசஸ்வின்யை நம: – யஸஸ் உள்ளவள். தேவியினது யசஸ் மிகப் ப்ரஸித்தமானது.

475. **विशुद्धि चक्र निलयायै नमः** — விசுத்தி சக்ர நிலயாயை நம: — விசுத்தி சக்ரத்திலிருப்பவள். நம் உடலிலுள்ள 6 சக்ரங்களில் விசுத்தி சக்ரம் கழுத்தில்

உளது. அது 16 தளம் உள்ளது. ஒவ்வொரு தளத்திலும் அ முதல் அ: வரையிலுள்ள 16 அக்ஷரங்கள் இருக்கின்றன. எந்தெந்த தளங்களில் எந்தெந்த அக்ஷரங்கள் கூறப்படுகின்றனவோ அவைகளைப் பிந்துவுடன் சேர்த்து அம் ஆம் என்பதுபோல் ப்ரதக்ஷிணமாக த்யானம் செய்யவேண்டும். இந்த சக்ரத்தில் ஜீவன் ப்ரும்மத்தைத் தர்சித்து சுத்தனுவதால் இதற்கு விசுத்தி சக்ரமென்று பெயர். இந்த நாமாவிலிருந்து 62 நாமாவரை யோகினீ ந்யாஸம் கூறப்படுகிறது. ந்யாஸமென்ருல் வைப்பது என்பது பொருள். ஒவ்வொரு மந்த்ரத்திலும் அங்கன்யாஸ கரன்யாசங்களைச் செய்யவேண்டும். தேவி தந்த்ரத்தில் பலவகையான ந்யாஸங்களைக் கூறி ந்யாஸ கண்டம் என தனியாகவே ஹயக்ரீவர் உபதேசிக்கிருர். அந்தந்த எழுத்துக்களை—அதன் தேவர்களை—அந்தந்த அவயவங்களில் வைத்து நம் உடலைத் தன்மயமாகச் செய்வதே இதன் நோக்கம்.

இங்கு கூறப்படும் யோகினிகள் நமது சரீரத்திலுள்ள 6 சக்ரங்களும், உள்ளவர்கள். யோகினியின் பெயர், அதன் சக்ரம், ரூபம், வர்ணம், முகம், ஆயுதம், குணம், பரிவார தேவதை, தாது, ப்ரியமான அன்னம் இவைகள் முறையே இனி கூறப்படுகின்றன. விசுத்த சக்ர நிலயா முதல் டாகினீச்வரீ என்ற வரை டாகினீ எனும் யோகினியின் ந்யாஸத்தில் அதைச் சார்ந்த வரலாறு வர்ணிக்கப்படுகிறது. அதாவது டாகினீ விசுத்தி சக்ரத்திலுள்ளவள். 3 கண்கள், சிவந்த வர்ணம், ஒரு தலை, கட்வாங்கம் முதலிய ஆயுதங்கள் உள்ளவள். பசு லோகத்திற்குப் பயங்கரமானவள். அம்ருதாதி பரிவார தேவதை உள்ளவள். த்வக் எனும் தாதுவை அண்டினவள், அவளுக்குப் பாயஸான்னமே ப்ரியம். இதேபோல் மற்ற யோகினிகளும் பின்னர் கூறப்படுகின்றனர்.

476. **आरक्त वर्णायै नमः** – ஆரக்த வர்ணுயை நம:– கொஞ்சம் சிவந்த வர்ணமுள்ளவள்.

477. **त्रिलोचनायै नमः** — த்ரிலோசனுயை நம: — மூன்று கண்ணுள்ளவள்.

478. **खट्वाङ्गादि प्रहरणायै नमः** — கட்வாங்காதி ப்ரஹரணுயை நம:—கட்வாங்கம் முதலிய ஆயுதமுள்ளவள். டாகினீ தேவி 4 கரங்களிலும் கட்டில் கால், கத்தி, சூலம், மஹாசர்மம் இவைகளைத் தரித்திருக்கிருள்.

479. **वदनैक समन्वितायै नमः** — வதனைக ஸமன்விதாயை நம: — ஒரு முகத்துடன் கூடியவள். எல்லோருக்கும் ஒரே முகமென்பது ஸாதாரணம். ஆனுலும், சில சக்திகளும் சில தேவர்களும் பலமுகம் பெற்றிருப்பதால் டாகினீ தேவி ஒரே முகமுள்ளவள் எனக் காட்டுகிறது இந்த நாமா.

480. **पायसान्नप्रियायै नमः** — பாயஸான்ன ப்ரியாயை நம: — பாயஸ அன்னத்தில் ப்ரிய முள்ளவள். பசும் பாலில் அரிசியை வேகவைப்பது பாயஸான்னம்.

481. **त्वक्स्थायै नमः** — த்வக் ஸ்தாயை நம: — த்வக் எனும் தாதுவில் இருப்பவள்.

482. **पशुलोक भयङ्कर्यै नमः** –பசுலோக பயங்கர்யை நம: — பசு போன்றவர்க்குப் பயத்தை உண்டுபண்ணுபவள். தானும் ப்ரும்மமும் ஒன்றெனும் க்ஞானமில்லாதவனே பசு.

483. **अमृतादिमहाशक्ति संवृतायै नमः** – அம்ருதாதி மஹா சக்தி ஸம்வ்ருதாயை நம: — அம்ருதா முதலிய மஹா சக்திகளால் சூழப்பட்டவள். 16 தளங்கள் உள்ளது விசுக்தி சக்ரம். அந்த 16 களில் 16 அக்ஷரங்கள் இருக்கின்றன என்ருேம். அந்த அக்ஷரங்களுக்குத் தேவதையாக உள்ளவர் 16 பேர்களே அம்ருதாதி சக்திகள். (1) அம்ருதா. (2) ஆகர்ஷிணீ, (3) இந்த்ராணி, (4) ஈசாநீ, (5) உமா, (6) ஊர்த்வகேசீ, (7) ரித்திதா, (8) ரூகாரா, (9) லுகாரா, (10) லூகாரா, (11) ஏகபதா, (12) ஐச்வர்யாத்மிகா, (13) ஓம்காரா, (14) ஔஷதி, (13) அம்பிகா, (16) அக்ஷரா.

484. **डाकिनीश्वर्यै नमः** — டாகினீச்வர்யை நம: — டாகினீச்வரியாக உள்ளவள். இந்த யோகினீ ந்யாஸத்

தில் விசுத்தி சக்ரநிலயா முதல் டாகினீ வரை 10 நாமாக்களும் டாகினியின் ஸ்வரூபத்தைக் கூறுகின்றன.

485. **अनाहताब्जनिलयायै नमः** — அனாஹதாப்ஜ நிலயாயை நம: — அனாஹதம் எனும் சக்ரத் தாமரையில் இருப்பவள். ஹ்ருதயத்திலுள்ள இந்த சக்ரம் 12 தளமுள்ள தாமரையாகும். அந்த 12 தளங்களிலும், 'க' வர்க்கத்திலுள்ள 5 'ச' வர்க்கத்தில் 5 'ட' வர்க்கத்தில் 2 ஆக 12. **क ख ग घ ङ च छ ज झ ञ ट ठ** அக்ஷரங்களை த்யானம் செய்யவேண்டும். ஸம்ஸ்க்ருதத்தில் கசடதப இவைகளில் ஒவ்வொன்றும் நான்கு நான்காக வகுத்து கூறப்பட்டுளது. இது முதல் ராகிண்யம்பா ஸ்வரூபிணீ என்ற 10 நாமாவரை ராகிண்யம்பா எனும் யோகினியின் ஸ்வரூபம், குணாதிகளைக் கூறுகிறது. முன் கூறியதுபோல் வர்ணம், முகம், ஸ்வரூபம், ஆயுதம், தாது, பரிவார தேவதை, ப்ரியமான அன்னம் இவைகள் முறையே கூறப்படுகின்றன.

486. **श्यामाभायै नमः** — ச்யாமாபாயை நம :— பச்சை கலந்த கறுப்பு வர்ணமுள்ளவள்.

487. **वदनद्वयायै नमः** — வதன த்வயாயை நம :— இரு முகங்கள் உள்ளவள்.

488. **दंष्ट्रोज्ज्वलायै नमः** — தம்ஷ்ட்ரோஜ்வலாயை நம: — கோரைப்பற்களுடன் ப்ரகாசிப்பவள்.

489. **अक्षमालादिधरायै नमः** - அக்ஷமாலாதிதராயை நம :— ஜபமாலை முதலியவைகளைத் தரிப்பவள். அக்ஷமாலை என்பது அ முதல் க்ஷ வரையுள்ள எழுத்துக்களின் (எழுத்துக்களின் கணக்குள்ள ருத்ராக்ஷம் முதலிய) மாலையாம். அக்ஷமாலை, சூலம், கபாலம், டமரு என்ற 4 ஆயுதங்களைத் தரிப்பவள் ராகிணீ தேவி.

490. **रुधिरसंस्थितायै नमः** — ருதிரஸம்ஸ்திதாயை நம: — ரத்தத்தில் இருப்பவள். ரத்தமெனும் தாதுவில் அபிமானதேவதையாக இருப்பவள் என்று பொருள்.

491. **कालरात्र्यादि शक्त्योघवृतायै नमः** – *கால ராத்ரியாதி சக்த்யோக வ்ருதாயை நம: — காளராத்ரி முதலிய சக்தி கூட்டங்களால் சூழப்பட்டவள். அந்த கணங்கள் : 1. காளராத்ரி. 2. கண்டிதா, 3. காயத்ரீ, 4. கண்டாகர்ஷணி, 5. ஙார்ணு, 6. சண்டா, 7. சாயா, 8. ஜயா 9. ஜங்காரிணீ, 10. ஞானரூபா, 11. டங்கஹஸ்தா, 12. டங்காரிணீ என்பனவாம். காளராத்ரி என்பதும் ரௌத்ரீ என்பதும் ஒன்றே.*

492. **स्निग्धौदन प्रियायै नमः** — *ஸ்னிக்தௌதன ப்ரியாயை நம : —நெய் (தோய்ந்த) அன்னத்தில் ப்ரியமுள்ளவள். நிவேதனம் செய்யும் பொருள் எல்லாவற்றிற்கும் ஆஜ்யத்தால் அபிகாரம் செய்யவேண்டுமென்பது சாஸ்த்ர விதி.*

493. **महावीरेन्द्र वरदायै नमः** –*மஹா வீரேந்த்ர வரதாயை நம: — மஹாவிரேந்த்ரர்களுக்கு வரமளிப்பவள். க்ஞானிகளே மஹாவீரர் ஆவர். வீரரில் இந்த்ரர் என்று கூறப்பட்டதால் ஸாதாரண் சரீர பலமுள்ள வீரர் இங்கு கூறப்படவில்லை. (1) பல வகையான வேதவாக்கைப் பேசுபவர். (2) மஹாவீரம் என்று யாகத்தில் உபயோகமாகும் ஒரு பாத்ரத்தால் ப்ரும்ம ரஸம் அருந்தியவர். (3) ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்தி என்ற இம்மூன்று நிலைகளிலும் துரிய நிலையுடன் கூடியவர். (4) இந்த்ரியங்களை ஜயித்தவர். (5) ப்ரஹ்லாதன் ஆகிய பலவகையான வீரர்களுக்கும் அவரவருக் கேற்ற வரம் அளிப்பவள் தேவி.*

494. **राकिण्यंबा स्वरूपिण्यै नमः** — *ராகிண்யம்பா ஸ்வரூபிண்யை நம: — ராகிணீ சக்தி ஸ்வரூபமானவள்.*

இத்துடன் இரண்டாவதான யோகினீ ஸ்வரூபம் முதலியன முடிந்தது.

495. **मणिपूराब्जनिलयायै नम** :— *மணி பூராப்ஜ நிலயாயை நம: — மணீபூரம் எனும் தாமரையில் வஸிப்பவள். மணி பூராப்ஜ என்பது நம் நாபியில் 10 தளமுள்ள*

தாக் இருக்கின்றது. அவைகளில் ड ढ ण त थ द ध न प फ என்ற எழுத்துக்கள் இருப்பதாக பாவனை செய்ய வேண்டும்.

496. **वदनत्रय संयुतायै नमः** — வதனத்ரய ஸம்யுதாயை நம: — மூன்று முகங்களுடன் கூடியவள்.

497. **वज्रादिकायुधोपेतायै नमः** — வஜ்ராதிகாயுதோபேதாயை நம: — வஜ்ரம் முதலிய ஆயுதங்களுடன் கூடியவள். வஜ்ரம், சக்தி, தண்டம், அபய முத்ரை முதலியவைகள், 4 கரங்களிலும் இருக்கின்றன.

498. **डामर्यादिभिरावृतायै नमः** — டாமர்யாதிபிராவ்ருதாயை நம: — டாமரீ முதலியவர்களால் சூழப்பட்டவள். டாமரீ, டங்காரிணீ, ஞார்ஞ, தாமஸீ, ஸ்தாண்வீ, தாக்ஷாயணீ, தாத்ரீ, நாரீ, பார்வதி பட்காரிணீ ஆகிய 10 பேர்களும் பரிவார தேவதைகள்.

499. **रक्तवर्णायै नमः** — ரக்த வர்ணாயை நம: — சிவந்த வர்ணமுள்ளவள்.

500. **मांसनिष्ठायै नमः** — மாம்ஸ நிஷ்டாயை நம: — மாம்ஸத்தில் இருப்பவள். மாம்ஸம் எனும் தாதுவில் அபிமானி தேவதையாக இருக்கிறவள்.

501. **गुडान्नप्रीत मानसायै नमः**—குடான்ன ப்ரீதமானஸாயை நம: —வெல்லம் கலந்த அன்னத்தில் ப்ரீதியுள்ள மனம் உடையவள்.

502. **समस्त भक्त सुखदायै नमः** — ஸமஸ்த பக்த ஸுகதாயை நம: — எல்லா பக்தர்களுக்கும் ஸுகத்தைத் தருபவள்.

503. **लाकिन्यंबास्वरूपिण्यै नमः** — லாகின்யம்பா ஸ்வரூபிண்யை நம: — லாகினீ தேவியின் ஸ்வரூபமாக இருப்பவள்.

இத்துடன் 3-வது யோகினியின் விஷயம் பூர்ணமானது.

504. स्वाधिष्ठानांबुजगतायै नमः — ஸ்வாதிஷ்டானும் புஜகதாயை நம: — ஸ்வாதிஷ்டானத் தாமரையை அடைந்தவள். குஹ்யத்திலுள்ள ஸ்வாதிஷ்டான கமலம் 6 தளமுள்ளது. பமயரலவ என்ற எழுத்துக்களை அங்கு த்யானம் செய்யவேண்டும்.

இது முதல் 10 நாமாவரை காகினீ யோகினியின் விஷயமாகும்.

505. चतुर्वक्त्र मनोहरायै नमः — சதுர்வக்த்ர மனோ ஹராயை நம: — 4 முகங்களால் அழகாக இருப்பவள்.

506. शूलाद्यायुध संपन्नायै नमः — ஸூலாத்யாயுத ஸம்பன்னாயை நம: —சூலம் முதலிய ஆயுதம் உள்ளவள். சூலம், பாசம், கபாலம், அங்குசம் இவை காகினியின் ஆயுதங்களாம்.

507. पीतवर्णायै नमः — பீதவர்ணாயை நம: — ஸ்வர்ண வர்ணமானவள்.

508. अतिगर्वितायै नमः — அதிகர்விதாயை நம :— மிக்க கர்வமுள்ளவள்.

509. मेदोनिष्ठायै नमः — மேதோ நிஷ்டாயை நம: — மேதஸ்ஸில் இருப்பவள். மேதஸ் என்பது உடலுக்குக் கொழுப்பைத்தரும் தாது. அதன் அபிமானியாக இருப்ப தால், அதிகர்விதா என்ற நாமா மிகப்பொருத்தமுள்ளது.

510. मधुप्रीतायै नमः — மது ப்ரீதாயை நம :—மது வில் ப்ரியம் உள்ளவள். தேனினால் ஹோமம் செய்தால் தேவிக்கு மஹாப்ரீதி உண்டாகும். (வேதம்)

511. बन्दिन्यादि समन्वितायै नमः — பந்தின்யாதி ஸமன்விதாயை நம: — பந்தினீ முதலியவர்களால் சூழப் பட்டவள். பந்தினீ, பத்ரகாளீ, மஹாமாயா, யசஸ்வினீ ரக்தா, லம்போஷ்டி ஆகியவர் பந்தின்யாதி எனப்படு பவர்.

512. दध्यन्नासक्त हृदयायै नमः — தத்யன்னஸக்த ஹ்ருதயாயை நம: — தயிர் அன்னத்தில் அதிக ஆசை உள்ளவள்.

513. काकिनीरूपधारिण्यै नमः-காகினீரூபதாரிண்யை நம: — காகினீ சக்தியின் உருவைத்தரிப்பவள்.

ஸ்வாதிஷ்டா ம்புஜாரூடா முதல் இதுவரை காகினீ ஸ்வரூபம் வர்ணிக்கப்பட்டது.

514. मूलाधाराम्बुजारूढायै नमः — மூலாதாராம்புஜா ரூடாயை நம: — மூலாதாரத் தாமரையில் ஏறி இருப்பவள்.

இது முதல் ஸாகினீ தேவியின் ஸ்வரூப வர்ணனை.

515. पञ्चवक्त्रायै नमः — பஞ்சவக்த்ராயை நம: — ஐந்து முகமுள்ளவள்.

516. अस्थिसंस्थितायै नमः — அஸ்தி ஸம்ஸ்திதாயை நம: — அஸ்தியிலிருப்பவள். எலும்பெனும் தாதுவில் அபிமாநியாக இருப்பவள்.

517. अङ्कुशादिप्रहरणायै नमः - அங்குசாதி ப்ரஹரணாயை நம: — அங்குசம் முதலிய ஆயுதமுள்ளவள். அங்குசம், தாமரை, புஸ்தகம், க்ஞாந முத்ரை ஆகியன்வை ஸாகிநியின் ஆயுதங்களாம்.

518. वरदादि निषेवितायै नमः — வரதாதி நிஷேவிதாயை நம: — வரதா முதலிய சக்திகளால் சூழப்பட்டவள். வரதா, ஸ்ரீ, ஷண்டா, ஸரஸ்வதி இந்த நால்வர் "வரதாதி."

519. मुद्गौदनासक्त चित्तायै नमः — முத்கௌதனாஸக்த சித்தாயை நம: — பயத்தம் பருப்பு அன்னத்தில் அதிக ஆசை உள்ளவள். பொங்கல் முக்தான்னம் எனப்படும்.

520. **साकिन्यंबा स्वरूपिण्यै नमः** — ஸாகின்யம்பா ஸ்வரூபிண்யை நம: — ஸாகினீ தேவியின் ரூபமானவள்.

521. **आज्ञाचक्राब्ज निलयायै नमः** — ஆக்ஞாசக்ராப்ஜ நிலயாயை நம: – ஆக்ஞாசக்ர தாமரையிலுள்ளவள்.

இது முதல் ஹாகிநி யோகிநியின் வரலாறு வர்ணிக்கப்படுகிறது. ஆக்ஞாசக்ரம் இருபுருவங்களுக்கிடையே இரண்டு தள தாமரையாக உள்ளது. அதில் ஹ, க்ஷ என்ற இரு அக்ஷரங்களை த்யாநம் செய்யவேண்டும்.

522. **शुक्लवर्णायै नमः** — சுக்ல வர்ணாயை நம: — வெண்மை நிறமுள்ளவள்.

523. **षडाननायै नमः** — ஷடானனாயை நம: – ஆறு முக முள்ளவள்.

524. **मज्जासंस्थायै नमः** –மஜ்ஜாஸம்ஸ்தாயை நம:– மஜ்ஜா எனப்படும் தாதுவில் இருப்பவள். எலும்பு, மாம்ஸம் இவைகளின் ஸாரமே மஜ்ஜா எனப்படும்.

525. **हंसवतीमुख्य शक्ति समन्वितायै नमः** — ஹம்ஸவதீ முக்ய சக்தி ஸமன்விதாயை நம: — ஹம்ஸவதீ முதலிய சக்திகளால் சூழப்பட்டவள். ஹம்ஸவதீ, க்ஷமாவதி இவ்விருவரே ஹம்ஸவத்யாவர்.

526. **हरिद्रान्नैक रसिकायै नमः** — ஹரித்ரான்னைக ரஸிகாயை நம: — மஞ்சள் அன்னத்தில் மிக்க ஆசை உள்ளவள். பொங்கல் சாதம் எனப்படுவது பருப்பும் மஞ்சள் பொடியும் கலந்து கல்யாணங்களில் காலையில் முன்னர் செய்வது வழக்கம். அதே ஹரித்ரான்னமாம்.

527. **हाकिनीरूप धारिण्यै नमः** — ஹாகினீ ரூப தாரிண்யை நம: — ஹாகினீ ரூபத்தைத் தரித்தவள்.

528. **सहस्रदल पद्मस्थायै नमः** — ஸஹஸ்ரதள பத்மஸ்தாயை நம: — ஸஹ்ரதளபத்மத்தில் இருப்பவள். ஸஹஸ்ரதள பத்மம் என்பது தலையில் ப்ரும்மரந்த்ரத்தில் உள்ள சக்ரமாம்.

இதுமுதல் யாகினீ யோகினியின் வரலாறு கூறப்படுகிறது.

529. **सर्व वर्णोप शोभितायै नमः** — ஸர்வ வர்ணோப சோபிதாயை நம: — எல்லா வர்ணங்களாலும் ப்ரகாசிப்பவள். கீழே மற்ற யோகினிகளுக்குக் கூறப்பட்ட சிவப்பு, ச்யாம, ரத்த, பீதம் முதலிய வர்ணமுள்ளவள். இது ஆயிரம் இதழ்கொண்ட தாமரையாதலின், இதில் எல்லா வர்ணங்களும் உள்ளதுபோல், அ முதல் க்ஷ வரையிலுள்ள ஸகல அக்ஷரங்களும் இருப்பதாக த்யானம் செய்யவேண்டும். ஐம்பது அக்ஷரங்கள் அநுலோமமாகவும் அவைகள் ப்ரதிலோமமாகும்போது ஐம்பது ஆக நூறு ஆகின்றன. அநுலோம எனில் அ முதல் க்ஷவரை முறையே உளது. ப்ரதிலோம என்பது க்ஷ முதல் அ வரையாம். ஒவ்வொரு அக்ஷர தேவதையும் பத்து தளங்களிலிருப்பதாக எண்ணினுல் நூறு தேவதைகள் ஆயிரம் தளங்களிலிருப்பது ஸஹஜமாகும். ஸர்வ வர்ணோப சோபிதா என்பதிலுள்ள உப என்ற இரு அக்ஷரங்கள் வரருசி என்ற முனிவர் கூறிய கடபயாதி முறையில் பத்து என்பதாகும். இதே முற்கூறியதற்கு ஸூசகமாகும்.

530. **सर्वायुध धरायै नमः** — ஸர்வாயுத தராயை நம: — எல்லா ஆயுதங்களையும் தரித்தவள்.

531. **शुक्लसंस्थितायै नमः** — ஸுக்ல ஸம்ஸ்திதாயை நம: — ஸுக்ல தாதுவில் இருப்பவள்.

532. **सर्वतोमुख्यै नमः** — ஸர்வதோ முக்யை நம: — எங்கும் முகமுள்ளவள்.

533. **सर्वौदन प्रीत चित्तायै नमः** — ஸர்வௌதன ப்ரீத சித்தாயை நம: — ஸகல அன்னங்களிலும் ப்ரீதி உடைய மனமுள்ளவள்.

534. **याकिन्यंबास्वरूपिण्यै नमः** — யாகின்யம்பாஸ்வரூபிண்யை நம: — யாகினீ தேவியின் உருவமுள்ளவள்.

இதுவரை டாகினீ, ராகினீ, லாகினீ, ஸாகினீ, காகினீ, ஹாகினீ, யாகினீ எனும் ஏழுயோகினிகளாக தேவி வர்ணிக்கப்பட்டாள்.

535. **स्वाहायै नमः** –ஸ்வாஹாயை நம: –ஸ்வாஹா என்ற வடிவமானவள். ஸ்வாஹா என்பவள் அக்நியின் பத்நீ. தேவர்களை நாடி ஹோமம் செய்யும்போதெல்லாம் ஸ்வாஹா அல்லது வஷட், வௌஷட், ச்ரௌஷட் இவைகளில் ஒன்றைக் கூறவேண்டும்.

536 **स्वधायै नमः** — ஸ்வதாயை நம; — ஸ்வதா என்ற ரூபமானவள். பித்ருக்களை நாடி கொடுக்கும் போது ஸ்வதா என்று கூறவேண்டும். "ஸ்வதா பித்ருப்ய: ".

537. **अमत्यै नमः** — அமத்யை நம: — அவித்யா வடிவுமானவள். மதி எனில் புத்தி, ஞானம் என்று பொருள். அது இல்லாதது அமதி. உலகைப் படைக்க ஆரம்பிக்கும்போது தேவி அவித்யா, மாயா, ப்ரக்ருதி, அவ்யக்தம் என்ற பெயர்களைப் பெறுகிருள்.

538. **मेधायै नमः** – மேதாயை நம: –புத்தி விசேஷமாக யிருப்பவள். உபநயனத்தில் மேதா பூஜை நடக்கின்றது. மேதா தக்ஷிணமூர்த்தியை உபாஸித்துப் பலர் மேதையை அடைந்தவர், அடைகின்றவர் பலர் உண்டு. (2) காஷ்மீரதேசத்தில் மேதா என்ற பெயருடன் இருப்பவள்.

539. **श्रुत्यै नमः** — ச்ருத்யை நம: —வேதரூபமானவள். காதினுலேயே கேட்டு உலகில் வந்ததால் வேதத்திற்கு ச்ருதி என்று பெயர்.

540. **स्मृत्यै नमः** — ஸ்ம்ருத்யை நம : — ஸ்ம்ருதி ரூபமானவள். வேதத்தின் பொருளை நினைத்து மஹரிஷிகள் எழுதிய நூல்கள் ஸ்ம்ருதிகள் எனப்படும்.

(2) ஸ்ம்ருதி என்ற நினைவுரூபமானவள். ச்ரவண ரூபமான வள் என்பது முன் நாமாவின் பொருள். ஸ்மரண ரூப மானவள் என இங்கு கூறுவது மிகப் பொருத்தமானது.

541. **अनुत्तमायै नमः** — *அநுத்தமாயை நம:* — தனக்கு மேற்பட்டவள் இல்லாதவள். ஸகல வ்யவகாரங் களிலும் சக்தி, சக்தி என ப்ரஸித்தமாகக் கொண்டாடப் படுபவள். பலமில்லை என்பதற்குப் பதில் சக்தி இல்லை என்றே கூறுகிறோம். ருத்ரனில்லை விஷ்ணு இல்லை என்று கூறுவதில்லை. ஆதலால் தேவியைவிட உத்தமர் யாரும் இல்லை.

542. **पुण्यकीर्त्यै नमः** — *புண்ய கீர்த்யை நம:* — புண்யமான கீர்த்தி உள்ளவள். தேவியின் கீர்த்தியைக் கேட்போர், படிப்போர், நினைப்போர் அனைவரும் புண் யத்தைப் பெறுவர்.

543. **पुण्यलभ्यायै नमः** — *புண்ய லப்யாயை நம:* — புண்யத்தால் அடையத்தக்கவள். "சிவச் சக்த்யா" என்ற ஸௌந்தர்ய லஹரீ புண்யம் செய்யாதவர் தேவி யைப் பணியவோ துதிக்கவோ முடியாது என்கின்றது.

544. **पुण्य श्रवणकीर्तनायै नमः** — *புண்ய ச்ரவண கீர்த்தனாயை நம:* — புண்யமான ச்ரவண கீர்த்தனங்களை உடையவள். அன்னையின் சரிதத்தைக் கேட்பதும் துதிப்பதும் புண்யத்தைத் தரும்.

545. **पुलोमजार्चितायै नमः** — *புலோமஜார்சிதாயை நம:* — இந்த்ராணியால் பூஜிக்கப்பட்டவள். ப்ரும்மஹத் திக்குப் பயந்து இந்த்ரன் தாமரைத்தண்டில் பதுங்கி யிருந்தபோது பூலோகத்திலிருந்து நகுஷராஜன் இந்த்ர னாக்கப்பட்டான். அவன் இந்த்ராணியை மனைவியாக விரும்பியபோது, அவள் தேவியை உபாசித்து அவளரு ளால் ஸப்தரிஷி பல்லக்கில் நகுஷனை வரச்சொன்னாள். பல்லக்கு தூக்கும் அகஸ்த்யரைக் காலால் உதைத்து சீக்கிரம் போ என்றான். அவர் நகுஷனைப் பாம்பாகும் படிச் சபித்தார். (தேவி பாகவதம்.)

546. **बन्धमोचन्यै नमः** — பந்தமோசன்யை நம: — பந்தத்திலிருந்து விடுவிப்பவள். சிறையிலிருந்தும் ஸம்ஸார பந்தத்திலிருந்தும் பக்தர்களை விடுவிப்பவள். ஏகாவளி என்ற ராஜகன்யகையை காலகேது எனும் அரக்கன் சிறைப்படுத்தியபோது தேவி அவளை விடுவித்தாள். (தேவி பாகவதம்.)

547. **बर्बरालकायै नमः** — பர்பராலகாயை நம: — அழகிய முன் மயிரை உடையவள். இதே பந்துராலகா என்றும் கூறப்படுகிறது. அலைபோல் அடுக்கடுக்காக சுருண்ட மயிர் உள்ளவள் என்பது இரண்டிற்கும் பொருள்.

548. **विमर्शरूपिण्यै नमः** – விமர்சரூபிண்யை நம: – விமர்ச வடிவமானவள். தேவி ப்ரகாச விமர்சத்தின் ஸமரஸ ரூபமானவள். சிவனைவிட சக்தி வேறில்லை என்றபடி சிவன் பிரகாச ரூபம். சக்தி விமர்ச ரூபம். இவை இரண்டும் சேர்ந்துதான் ப்ரும்மம் எனப்படும். இதை ஸகுணத்தில் அர்த்தநாரீச்வர ஸ்வரூபம் என்கிறோம். இதே "வாக்கும் அர்த்தமும் போல்" எனக் காளிதாஸனால் கூறப்பட்டது. உலக வழக்கில் விமர்சம் எனில் ஒரு விஷயத்தை நன்கு விசாரிப்பதாம். விசாரணையில் நல்லது, கெட்டது, ஸாதகம், பாதகம் முதலியன வெளியாகும். அதேபோல் சுத்த ப்ரும்ம ஸ்வரூபமானது ஸ்தாணு என்றபடி அசைவற்று கேவல சைதன்ய மாத்ரமாகயிருக்கும். தேவியோ அதில் ஒரு உணர்ச்சி ரூபமாகயிருப்பவள். ஆதலால் முக்தி அடைந்தவர் கேவல ஜடமாகயிராமல் ரஸாநுபவி யாவர். வாக் என்பது விமர்சரூபமான அன்னை. அர்த்தம் என்பது ப்ரகாச ரூபனான பிதா. அதேபோல் சப்த ப்ரும்மம். அர்த்த (அநுபவ) ப்ரம்மம் எனலாம்.

549. **विद्यायै नमः** — வித்யாயை நம: — வித்யா வடிவமானவள். அறிவைப் புகட்டும் எல்லா கல்விகளையும் வித்யா என்றாலும், முக்தியைத் தரும் க்ஞான சாஸ்த்ரமான உபநிஷத்தே வித்யா எனப்படும்.

550. **वियदादि जगत्प्रसुवे नमः** — வியதாதி ஜகத் ப்ரஸுவே நம: — ஆகாசம் முதலிய ஜகத்தைப் படைத்த வள். ஆத்மாவினிடமிருந்து ஆகாசமும் அதிலிருந்து மற்றவைகளும் உண்டானதாக வேதம் கூறுகிறது.

551. **सर्व व्याधि प्रशमन्यै नमः** — ஸர்வ வ்யாதி ப்ரச மன்யை நம: — ஸகல நோய்களையும் போக்குபவள். இன்ன இன்ன நோய் உள்ளவர் இந்தமாதிரி தேவியைப் பூஜித்து ஆரோக்கியத்தைப் பெறலாம் என தேவி தந்த்ரம் கூறுகிறது.

552. **सर्व मृत्यु निवारिण्यै नमः** — ஸர்வ ம்ருத்யு நிவாரிண்யை நம: — ஸகல விதமான மரணத்தையும் அகற்றுபவள். அகால மரணம், கால மரணம், நீரில் விழுந்து இறப்பதுபோன்ற துர்மரணம் ஆகிய ஸகல மர ணங்களையும் தேவி அகற்றுவாள். இந்த ஸஹஸ்ரநாமத் தின் முடிவில் பலன் கூறுகையில் " அகால மரணம் கால மரணம் ஜ்வராதி ரோகம் முதலியவைகளை அகற்றி ஆரோக்யம் தீர்க்க ஆயுள் முதலியவைகளைத் தரும் " என்று கூறப்பட்டுள்ளது.

553. **अग्रगण्यायै नमः** — அக்ர கண்யாயை நம: — முதன்மையாக எண்ணப்படுகிறவள். தேவியே உலகிற்கு முதல் காரணமானதால் முதலில் கணிக்கத்தக்கவள், மற்ற தேவர்களைப் பிறகே எண்ணவேண்டும். (2) கணங் களை உடையவர்களில் முதல்வள். சிவகணம், கணேச கணம், யக்ஷகணம் எனப் பல கணங்களை உடையவர் சிவன், கண்பதி, குபேரன் முதலியவர். இவர்களில் மிகச் சிறந்தவள் தேவி.

554. **अचिन्त्यरूपायै नमः** — அசிந்த்யரூபாயை நம :— சிந்தைக்கு எட்டாத ரூபமுள்ளவள். கேவல, நிர்குண, ப்ரும்ம ரூபமாக இருக்கும்போது வாக்கிற்கும் மனதிற் கும் எட்டாதவள். ஸகுணமாக வந்தபோது பக்தர்களின் ஸ்தூல கண்ணிற்கும் தெரிபவள்.

555. **कलि कल्मष नाशिन्यै नम :** — கலி கல்மஷ நாசன்யை நம: — கலியில் உண்டாகும் கல்மஷத்தை அகற்றுபவள். க்ருதயுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் என்ற நான்கில் கலியில் ஒரே பாதத்துடன் நிற்கின்றது தர்மம். முக்கால் பங்கு அதர்மம் அதிகரித்திருக்கின்றது. மற்ற யுகங்களில் பாபம் செய்தவர்கள் அனைவரும் இக்கலியில் பிறக்கின்றனர். ஆதலால் கலியில் பாபத்திலும் அதர்மத்திலும் மனம் செல்லும்., தேவி தன் பக்தர்களது பாபத்தை அகற்றி புண்யத்தைத் தருவாள். நாம் அறிந்தோ அறியாமலோ செய்த மஹா பாபங்களைப் போக்கடிக்க வல்லவள் தேவி ஒருவளே. (ப்ரும்மாண்டம், வாமநம்.)

556. **कात्यायन्यै नम :** — காத்யாயன்யை நம: — கதரெனும் முனிவர் வம்சத்தில் தோன்றியவள். ஸகல தேவர்களுடைய தேஜஸால் உண்டானவள் காத்யாயனீ. (வாமநம்) (2) ஒட்யாண பீடத்தில் காத்யாயனீ என்ற பெயருடன் இருப்பவள். (3) ப்ரும்ம ஸ்வரூபிணியாய் இருந்து தான் படைத்த உலகைத் தாங்குவதால் காத்யாயனீ. கோபிகா ஸ்த்ரீகள் காத்யாயனியை உபாஸித்து க்ருஷ்ணனைப் பதியாகப் பெற்றனர்.

557. **कालहन्त्र्यै नमः** — காலஹந்த்ர்யை நம: — காலனை ஸம்ஹரிப்பவள். காலனைக் காலால் உதைத்த சிவனது மனைவி என்றும் ம்ருத்யுவை அகற்றி மோக்ஷம் அளிப்பவள் என்றும் பொருள்.

558. **कमलाक्ष निषेवितायै नमः** — கமலாக்ஷ நிஷேவிதாயை நம: — விஷ்ணுவினால் ஸேவிக்கப்பட்டவள். விஷ்ணு தேவியை உபாஸித்து அவள் அருளால் மது கைடபரைக் கொன்றார். (தேவீ பாகவதம்).

559. **ताम्बूल पूरित मुख्यै नमः** — தாம்பூல பூரித முக்யை நம: — தாம்பூலம் நிறைந்த முகம் உள்ளவள் இந்த தாம்பூல ரஸத்தால் மூகன் கவியானான்.

560. **दाडिमी कुसुमप्रभायै नमः** — தாடிமீ குஸும ப்ரபாயை நம: — மாதுளம்பூ போன்ற காந்தியுள்ளவள். சிவப்பான திருமேனி உள்ளவள் தேவி.

561. **मृगाक्ष्यै नमः** — ம்ருகாக்ஷ்யை நம: — மான் போன்ற கண் உள்ளவள். மீன்போன்ற கண் உள்ளவள் என்பதுபோல் அல்ல. இங்கு மானினுடைய கண்போன்ற கண் உள்ளவள்.

562. **मोहिन्यै नमः** —மோஹின்யை நம: —மோஹிக்கும்படி செய்பவள். தனது அழகால் காமேச்வரனை மோஹிக்கும்படி செய்பவள். தனது மாயா சக்தியால் உலகை மோஹிப்பவள். (2) தன்னை உபாஸித்த விஷ்ணுவிற்கு மோஹினீ ரூபம் அளித்தவள்.

563. **मुख्यायै नमः**-முக்யாயை நம: -முதலாக இருப்பவள். (2)முக்யமாக இருப்பவள். ப்ரதானம், கௌணம் என்பது வஸ்துவிலும் காலத்திலும் கூறப்படுகிறது. அதில் முக்கிய தேவதாஸ்வரூபி அன்னை. மற்றவர் அடுத்தபடியான கௌணமானவர்.

564. **मृडान्यै नमः** — ம்ருடான்யை நம: — பரமசிவத்தின் பத்நீ. ம்ருட எனில் ஸுகத்தை அளிக்கும் சிவன் என்று பொருள். ம்ருடப்ரியா என்ற 211-வது நாமாவும் இதே விஷயத்தைக் கூறுகிறது.

565. **मित्ररूपिण्यै नमः** — மித்ர ரூபிண்யை நம: — மித்ர வடிவமானவள். மித்ர எனில் நண்பன், ஸூர்யன் எனப்பொருள்.

566. **नित्य तृप्तायै नमः** —நித்ய த்ருப்தாயை நம: — ஸதா த்ருப்தியுள்ளவள். பரமசிவத்திற்குள்ள ஆறு குணங்களில் நித்ய த்ருப்தராகயிருத்தல் ஒன்று. ப்ரும்ம ரூபிணீ ஆனதால் ஸதா ஆனந்தத்துடன் இருப்பவள்.

567. **भक्त निधये नमः** —பக்த நிதயே நம: —பக்தர்களுக்குப் பொக்கிஷமாகயிருப்பவள். பக்தர்களின் இஷ்டத்தைத் தர குறையாத சக்தி உள்ளவள்.

568. **नियन्त्र्यै नमः** — நியந்த்ரியை நம:— அடக்கி ஆள்பவள். நல்லவழியில் அழைத்துச் செல்பவள்.

569 **निखिलेश्वर्यै नमः** — நிகிலேச்வர்யை நம: — எல்லாவற்றிற்கும் ஈச்வரியாக இருப்பவள்.

570. **मैत्र्यादि वासना लभ्यायै नमः** — மைத்ரியாதி வாஸனா லப்யாயை நம: –மைத்ரி முதலிய வாஸனைகளால் அடையத்தக்கவள். மைத்ரி, கருணா, முதிதா, உபேக்ஷா, என்ற நான்கும் ஸத்வாஸனைகள். (1) ஸுகப்படுபவரிடம் கொள்ளும் அன்பு மைத்ரீ. (2) துக்கப்படுபவரிடம் காட்டும் இரக்கம் கருணா. (3)புண்யவான்களிடம் ஸந்தோஷப் படுவது முதிதா. (4) பாபிகளிடம் விருப்பு வெருப்பு இல்லாமை உபேக்ஷா. இவைகளால் மனம் நிர்மலமாகிறது. யோகமும், க்ஞாநமும், தேவி அருளும், சுத்த மனதிற்கே கிட்டும்.

571. **महाप्रलय साक्षिण्यै नमः** — மஹா ப்ரளய ஸாக்ஷிண்யை நம: –மஹா ப்ரளயகாலத்தில் ஸாக்ஷியாக இருப்பவள். ப்ரும்மலோகம் வரையிலுள்ளவை ப்ரும்மாவிடம் லயமாவது அவாந்தர ப்ரளயம் எனப்படும். ப்ரும்மா, விஷ்ணு, அவர்கள் உலகமும் ஸ்வரூபத்தை இழந்து சிவனிடம் லயமாவது மஹாப்ரளயம் எனப் படும். அக்காலத்தில் தேவி ஒருவளே அதைப்பார்க்கும் ஸாக்ஷியாகயிருக்கிறாள். அக்காலத்தில் பரமசிவன் ஜீவித்திருப்பது அன்னையின் கற்பினால் என்றும் அதனால் ஸுவாஸினீ என்ற பெயர் தேவிக்குப் பொருத்தமானதென்றும் ஸௌந்தர்ய லஹரீ கூறுகிறது.

572 **पराशक्त्यै नमः** — பராசக்த்யை நம: — பராசக்தி ரூபமானவள். உலகில் பெண்கள் அனைவரும் சக்தி. அவர்களில் ப்ராம்மீ, வைஷ்ணவீ, முதலிய சக்தி

கள் மிகச் சிறந்தவர்கள். அவர்களேவிட எல்லாவற்றை யும்விட மிகச் சிறந்த சக்தி தேவி. நமது உடலில் பல தாதுக்கள் இருக்கின்றன. அவைகளில், தோல், ரத்தம், மாம்ஸம், மேதஸ், எலும்பு என்ற ஐந்தும் சக்தியின் அம்சம். மஜ்ஜா, சுக்லம், ப்ராணன், ஜீவன், இந்த நான்கும் சிவ அம்சமானவை. இங்ஙனம் 9 தாதுக்களா லாகிய உடல் நவயோகினிகளிலிருந்து உண்டானவை. பத்தாவது தாது ஒன்று இருக்கிறது. அதற்குப் பெயர் பராசக்தி. (காமிக ஆகமம்)(2) பரா எனும் மந்த்ரத்தின் சக்தியாக இருப்பவள். இந்த நாம பராசக்த்யை நம: பரஸ்யை சக்த்யை என்றும் கூறப்படுகிறது.

573. **परानिष्ठायै नमः** -பராநிஷ்டாயை நம: -சிறந்த நிஷ்டையாக இருப்பவள். நிஷ்டை எனில் முடிவான நிலே என்று பொருள். ஸமஸ்த வஸ்துக்களும் தேவியிடமே வந்து முடிவடைகின்றன. அதற்குமேல் எந்த வஸ்துவும் இல்லே. இதைப் பராயை நிஷ்டாயை நம: எனக்கூற வேண்டும்.

574. **प्रज्ञान घन रूपिण्यै नमः** -ப்ரக்ஞான கன ரூபிண்யை நம: — க்ஞானத்தின் கனரூபமானவள். மாறுத லில்லாத க்ஞாநம் நிறைந்த வடிவமானவள் என்பது பொருள். உள்ளும் புறமும் ஒரேருசியான உப்புக்கட்டி ரஸகனமெனப்படும்.

575. **माध्वी पानालसायै नमः** -மாத்வீ பாஞலஸாயை நம: — த்ராக்ஷாரஸ பானத்தால் ஆலஸ்யமுள்ளவள். இங்கு ஆலஸ்யம் என்பது வெளி வ்யாபாரத்தைவிட்டு உள்முகமாயிருப்பதைக் கூறும்.

576. **मत्तायै नमः** -மத்தாயை நம: - மயங்கியிருப் பவள். (2) சிவனது அஹந்தா ரூபமாயிருப்பவள்.

577. **मातृका वर्ण रूपिण्यै नमः** — மாத்ருகா வர்ண ரூபிண்யை நம: — மாத்ருகை எழுத்துக்களின் ரூபமாக யிருப்பவள். அ முதல் க்ஷ வரை உள்ள எழுத்துக்களும்,

மாத்ருகாவர்ணங்கள் எனப்படும் அ முதல் அ: வரை உள்ளது அச் அல்லது ஸ்வரம் எனப்படும். எழுத்துக்கள் பல வர்ணமானவை. க முதல் 12 எழுத்துக்கள் ஸிந்தூரவர்ண முள்ளவை. ட முதல் 10 வெண்மை நிறமானவை. ப முதல் 5 சிவப்பு வர்ணம். ல முதல் ஸ வரையில் பொன்னிற மானவை. ஹ, க்ஷ இரண்டும் மின்னல் போன்றது. (ஸநத்குமார ஸம்ஹிதா) எல்லா எழுத்துக்களும் வெளுப்பென்றும் ஒவ்வொரு அக்ஷரமும் ஒவ்வொரு வர்ணமென்றும் சிலர் கூறுவர். அக்ஷமாலா வடிவமானவள், மாத்ருகா வர்ணங்களைப் படைத்தவள் எனவும் கூறுவர். மாத்ருகா வர்ணங்களின் ந்யாஸத்தால் ஸ்ரீ சக்கரத்தைப் பாவனை செய்யத்தக்கவள் என்றும் பொருள். இது கைலாஸ ப்ரஸ்தரம். திதி நித்யா தேவதைகளின் ந்யாஸத்தால் ஸ்ரீசக்ரத்தைப் பாவனை செய்வது மேருப்ரஸ்தரம். வசின்யாதி தேவதைகளின் ந்யாஸத்தால் ஸ்ரீ சக்ரபாவனை செய்வது பூப்ரஸ்தரம். இப்படி ஸ்ரீசக்கரமானது லோஹம், ஸ்படிகம், ஸாளக்ராமம், முதலியவைகளால் செய்யப்படும், மூன்று வகையாக கூறப்படும். அவைகளின் அமைப்புத் தனியானது.

578. **महाकैलासनिलयायै नमः** — மஹா கைலாஸ நிலயாயை நம: — மஹா கைலாஸத்தில் வஸிப்பவள். முன் சொல்லிய மாத்ருகா வர்ண ந்யாஸத்தால் பாவனை செய்யப்படும் மஹாகைலாஸ ப்ரஸ்தரத்தில் வஸிப்பவள் என்று பொருள். பூலோகத்தில் ஹிமயமலைக்கு மேல் ஒரு கைலாஸம் உளது. 14 லோகங்களுக்குமேல் ஒரு கைலாஸம் உண்டு. அதற்கு மேலுள்ளது மஹா கைலாஸம். அங்கு காமேச்வரருடன் வஸிப்பவள் என்றும் பொருள். தேவி மிகச் சிறந்த தேவதை ஆனதால் அவளை வர்ணிக்கும் இடமெல்லாம் மஹா என்ற சப்தம் கூறப்படுகிறது. ஸ்ரீ மஹாராக்ஞீ முதல் ஸுமார் 40 நாமாக்களில் மஹா என்பதைக் காணலாம்.

579. **मृणालमृदुदोर्लतायै नमः** — ம்ருணால ம்ருது தோர்லதாயை நம: — தாமரை நூலைப்போல் ம்ருதுவான கைகளை உடையவள்.

580. **महनीयायै नमः** –மஹ்நீயாயை நம: -பூஜிக்கத் தக்கவள்.

581. **दयामूर्त्यै नमः** –தயாமூர்த்யை நம: –தயையே சரீரமாக உள்ளவள்.

582. **महासाम्राज्य शालिन्यै नमः** -மஹா ஸாம்ராஜ்ய சாலின்யை நம: — மஹாஸாம்ராஜ்யத்தில் ப்ரகாசிப்பவள். ராஜ்யத்திற்கு அதிபதியானவன் ராஜா. ஸகல ராஜ்யத்திற்கும் தலைவனை ஸம்ராட் என்பர். தேவி ஸகல லோகத்திற்கும் ராணியானதால் மஹாஸம்ராக்ஞி. மஹா ஸாம்ராஜ்ய ஸாலினி.

583 **आत्मविद्यायै नम** :— ஆத்ம வித்யாயை நம: — ஆத்ம வித்யாவடிவமானவள். ஆத்மக்ஞான வடிவமானதால் தேவி க்ஞான வித்யாரூபிணீ ஆவாள்.

584. **महाविद्यायै नमः** — மஹா வித்யாயை நம: — மஹா வித்யா வடிவமானவள். வித்யைகளில் சிறந்தது க்ஞான வித்யையே. அந்த மஹாவித்யை வடிவமாகவும் மஹத்தாயும் வித்யா ரூபமாயும் நவதுர்க்கா வித்யையாகவும் உள்ளவள்.

585. **श्रीविद्यायै नमः** — ஸ்ரீ வித்யாயை நம: — ஸ்ரீ வித்யையாகவும் இருப்பவள். பஞ்சதசாக்ஷரீமந்த்ரத்திற்குச் சிறப்பான பெயர் ஸ்ரீ வித்யா, தேவிவிஷயமான ஸகல வித்யைகளுக்கும் பொதுவான பெயர் ஸ்ரீ வித்யை என்பது. (1) கர்ம வித்யா—யக்ஞாதிகள். (2) மஹா வித்தியா—உபாஸனுதிகள். (3) குஹ்ய வித்யா—மந்த்ராதிகள். (4) ஆத்மவித்யா — வேதாந்தம் என வித்யை நால்வகை (விஷ்ணு புராணம்.)

586. **कामसेवितायै नमः** — காமஸேவிதாயை நம: — மன்மதனுல் ஸேவிக்கப்பட்டவள். மநு, சந்த்ரன் முதலியவர்களைப்போல் மன்மதன் ஒருவகையான மந்த்ரத்தால் தேவியைப் பூஜித்தவன். (2) மஹாகாமேசரால் பூஜிக்கப்பட்டவள்.

587. **श्रीषोडशाक्षरि विद्यायै नमः** — ஸ்ரீஷோடசாக்ஷரீ வித்யாயை நம: — ஸ்ரீ ஷோடசாக்ஷரீ வித்யாவடிவமானவள். 16 அக்ஷரங்களுடன் கூடிய ஸ்ரீ வித்யாரூபிணி தேவி. ஷோடசாக்ஷரீ என்பது 28 அக்ஷரங்கள் உள்ளது. ஆனால் பஞ்சதசாக்ஷரியில் உள்ள வாக்பவ கூடத்தை ஒரு அக்ஷரமாகவும், மத்யகூடம் ஒன்று, சக்தி கூடம் ஒன்று ஆக பஞ்சதசாக்ஷரியை மூன்று அக்ஷரமாகக் கொண்டால் மற்ற 13 அக்ஷரங்களைக்கொண்டு 16 அக்ஷர வித்யை என்று கூறப்படும். (கௌடபாத ஸ்ரீ வித்யா ரத்ந ஸூத்ரம்.)

588. **त्रिकूटायै नमः** — த்ரிகூடாயை நம: — மூன்று கூட வடிவமானவள். முன் கூறிய பஞ்சதசாக்ஷரியின் 3 கூடமாகவும் மும்மூர்த்தி, மூன்று குணம், மூன்று அவஸ்தை இவைகள் ரூபமாகவும் இருப்பவள்.

589. **कामकोटिकायै नम** – காமகோடிகாயை நம: — காமகோடியாக இருப்பவள். காமகோடி பீடமாக இருப்பவள். காமேச்வரனுடன் ஒன்றாக இருப்பவள் என்றும் பொருள்.

590. **कटाक्ष किङ्करीभूत कमलाकोटि सेवितायै नमः** — கடாக்ஷ கிங்கரீ பூத கமலா கோடி ஸேவிதாயை நம: — தன் கடைக்கண்ணுக்குக் கிங்கரிகளாக கோடிலக்ஷ்மிகளை உடையவள். தேவியின் கடைக்கண் அசைதலை ஒட்டி கைங்கர்யம் புரிய கோடிக்கணக்காக லக்ஷ்மிகள் காத்திருக்கின்றனர்.

591. **शिरः स्थितायै नम** — சிரஸ்திதாயை நம: — சிரஸிலிருப்பவள். தலையிலுள்ள ப்ரும்மரந்த்ரத்தில் குரு ரூபமாக யிருப்பவள்.

592. **चन्द्रनिभायै नमः** — சந்த்ர நிபாயை நம: — சந்திரனுக்கு ஸமமானவள். சந்த்ரன் போன்ற காந்தி உள்ளவள். (2) சந்த்ரனாக ப்ரும்ம ரந்த்ரத்தின் கீழ் இருப்பவள். அது ஸ்ரீ வித்யையின் 3-வது கூடமாக யிருப்பது.

593. **फालस्थायै नमः** — பாலஸ்தாயை நம: — நெற்றிலிருப்பவள். நெற்றியில் ஹ்ருல்லேகையின் பிந்து ரூபமாக யிருப்பவள். **भाल** எனச்சிலர்.

594. **इन्द्रधनुः प्रभायै नमः** — இந்த்ரதனு: ப்ரபாயை நம: — இந்த்ர வில்போன்ற காந்தி உள்ளவள். முன் கூறிய பிந்துவுக்குமேலே அர்த்த சந்த்ர வடிவமாக யிருப்பவள்.

595. **हृदयस्थायै नमः** — ஹ்ருதயஸ்தாயை நம :— ஹ்ருதயத்திலிருப்பவள். நமது ஹ்ருதயத்தில் ஜீவஸ்வரூபமாகவும் தயானம் செய்யத் தக்கவளாகவும் இருக்கிறுள். (2) ஹ்ருதயம் என்னும் பராபீஜ மந்த்ரமாக இருப்பவள். (3) பரமாத்மாவின் ஹ்ருதயமெனும் உபநிஷத்திலிருப்பவள்.

596. **रविप्रख्यायै नमः** — ரவி ப்ரக்யாயை நம: — ஸூர்யனைப்போன்ற காந்தி உள்ளவள். ஹ்ருதயத்திலுள்ள ஸூர்ய மண்டலம் ஸ்ரீ வித்யையின் இரண்டாவது கூடமானதால் அங்குள்ள தேவி ரவி ப்ரக்யா எனப்படுகிறுள்.

597. **त्रिकोणान्तर दीपिकायै नमः** — த்ரிகோணுந்தர தீபிகாயை நம: — த்ரிகோணத்தினிடையே தீபமாக இருப்பவள். மூலாதார பத்மத்தின் கர்ணிகையில் த்ரிகோணம் இருக்கின்றது. அங்குள்ள அக்நி மண்டலத்தில் ப்ரதமகூடமாகத் தேவியிருக்கிறுள். மூலாதாரத்தில் அக்னி மண்டலம், ஹ்ருதயத்தில் ஸூர்ய மண்டலம், ப்ரஹ்மரந்த்ரத்தில் சந்த்ர மண்டலமும் இருக்கின்றன. ஆங்கு முறையே முதல் 3 கண்டங்களுடன் பேதமின்றி இருக்கிறுள் தேவி. (தந்த்ர ராஜம்) (2) மேருமலை எட்டு கோணவடிவமானது. அதைச் சுற்றிவருகிறுர் ஸூர்யன். அச்சமயம் 3 கோணங்களையே அவர் ஏககாலத்தில் ப்ரகாசப்படுத்துகிறுர். அந்த த்ரிகோணத்தின் இடையே ப்ரகாசமான ஸூர்ய வடிவமாக இருக்கிறுள் தேவி.

598. दाक्षायण्यै नमः – தாக்ஷாயண்யை நம: — தக்ஷனது பெண்ணானவள். (2) அச்விநீ முதலிய நக்ஷத்ர வடிவமானவள். (3) தர்ஸபூர்ண மாஸ யக்ஞ ரூபமானவள்.

599. दैत्यहन्त्र्यै नमः — தைத்ய ஹந்த்ர்யை நம: — தைத்யர்களைக் கொல்பவள். மஹிஷன், சும்ப நிசும்பன், பண்டாஸுரன் போன்றவர்களைக் கொன்றவள்.

600. दक्षयज्ञ विनाशिन्यै नमः – தக்ஷயக்ஞ விநாசின்யை நம: — தக்ஷயக்ஞத்தை அழித்தவள். சிவனை விலக்கி மற்ற தேவர்களுக்கு தக்ஷப்ரஜாபதி யக்ஞம் செய்த போது அவர் பெண்ணான தாக்ஷாயணி நல்ல புத்தி கூறியும் அவன் கேளாததால் யோகத்தால் தன் உடலை விட்டாள் தேவி. இதை அறிந்த சிவன் அந்த யக்ஞத்தை அழித்தார். (ஸ்காந்தம்)

601. दरान्दोलित दीर्घाक्ष्यै नमः — தராந்தோலித தீர்காக்ஷ்யை நம: — கொஞ்சம் சஞ்சலமானதும் நீண்டதுமான கண்களை உடையவள். (2) பயத்தை விரட்டும் நீண்ட கண் உள்ளவள்.

602. दरहासोज्ज्वलन्मुख्यै नमः — தரஹாஸோஜ்வலன்முக்யை நம: — புன் சிறிப்பால் ப்ரகாசிக்கும் முகம் உடையவள்.

603. गुरुमूर्त्यै नमः – குருமூர்த்யை நம: — குருவின் ரூபமாக இருப்பவள். குரு, மந்த்ரம், தேவி ஆகிய மூன்றும் ஒன்றே என உபாஸிக்க வேண்டும். (2) காளிதாஸனுக்கும், மற்றும் பலருக்கும் பீஜாக்ஷரத்தைத் தந்து குருவாக இருந்தவள். "தேஸிக ரூபேண தர்ஸித அப்யுத்யாம்" என்கிறார் காளிதாஸன், 'கு' இருளை, 'ரு' போக்குபவர் என்றும், 'கு' எப்போதுமுள்ள, 'ரு' ப்ரும்மக்ஞானம் என்றும் குரு ஸப்தத்திற்குப் பொருள். பெற்றோரைவிடச் சிறந்தவர் என்றும் பொருள்.

604. **गुणनिधये नमः** — குணநிதயே நம: — குணங் களுக்கு இருப்பிடம், ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களுக்கும், அவைகளால் உண்டாகும் பற்பல குணங்களுக்கும் தேவி நிதியானவள். (2) ஒன்பது வ்யூ ஹங்களுக்கு நிதியானவள். 1, கால. 2. குல. 3. நாம. 4. ஞான. •5. சித். 6. நாத. 7. பிந்து. 8. கல்ப. 9. ஜீவ என்பன 9 வ்யூகங்கள். அந்த ரூபமாக உள்ளவள். (3) கயிற்றைப் பிடித்திழுத்தவள். ப்ரளய காலத்தில் மநு ஸமஸ்த விதைகளையும் ஒரு படகில் வைக்க, அதை ப்ரள யக்கடல் விழுங்கா வண்ணம் ஒரு கயிற்ருல் அதைக்கட்டி இழுத்தாள் தேவி (மத்ஸ்ய-புராணம்).

605. **गोमात्रे नमः** – கோமாத்ரே நம: — பசுக்களுக் குத் தாயான காமதேனுவாக இருப்பவள். கோ என்ற சொல்லுக்கு ஸ்வர்க்கம், கிரணம், வாக்கு என பற்பல பொருள்களுண்டு. இது முதலான ஸமஸ்த வஸ்துக்களை யும் படைத்தவளானதால் தேவி "கோமாதா" எனப் படுகிருள்.

606. **गुहजन्मभुवे नमः** — குஹ ஜன்மபுவே நம: — குஹன் பிறப்புக்கு ஸ்தானமானவள் (2) ஸகல ஜீவர் களையும் படைத்தவள் குஹம் எனில் சூழ்ந்திருப்பது என்று பொருள். அவித்யையால் ஜீவராசிகள் சூழப்பட் டிருப்பதால் அவர்களும் குஹ எனப்படுவர்.

607. **देवेश्यै नमः** —தேவேஸ்யை நம: — தேவர்க ளுக்கு ஈஸ்வரியாக இருப்பவள்.

608. **दण्डनीतिस्थायै नमः** - தண்ட நீதிஸ்தாயை நம: தண்ட நீதியில் இருப்பவள். அர்த்த சாஸ்த்ரத்திலும், தர்மசாஸ்த்ரத்திலும் குற்றம் செய்தவர்களுக்குத் தண்டம் எனும் சிக்ஷை விதிக்கப்பட்டிருக்கிறது. அந்த சாஸ்த் ரத்திலும் இருப்பவள் லலிதா தேவி. நீதியுடன் குற்ற வாளியை சிக்ஷித்து நல்வழிக்குக் கொண்டு வருவதால் அதற்கு தண்ட நீதி என்று பெயர் உண்டானது.

609. **दहराकाश रूपिण्यै नमः** — *தஹராகாச ரூபிண்யைநம:* — *தஹர ஆகாச வடிவமானவள். நமது ஹ்ருதயத்தில் உள்ள ஸூக்ஷ்மமான ஆகாசம் தஹர ஆஹாசமாகும். அந்த தஹராகாச வடிவமாக இருப்பவள் அன்னை. உபநிஷத்துக்களில் தஹரவித்யை மோக்ஷத்திற்கு ஒரு ஸாதனம் என்று விரிவாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.*

610. **प्रतिपन्मुख्य राकान्त तिथिमण्डल पूजितायै नमः**— *ப்ரதிபன் முக்ய ராகாந்த திதி ம்ண்டல பூஜிதாயை நம:* — *ப்ரதமை முதல் பௌர்ணமி வரையுள்ள திதி மண்டலத்தில் பூஜிக்கப்பட்டவள். ப்ரதமையிலும் த்விதியை முதல் பௌர்ணமி வரையிலுமுள்ள 15 திதிகளிலும் எந்தெந்த வகையாகத் தேவியைப் பூஜிக்க வேண்டும்? அதனுல் உண்டாகும் பலன் யாது என தேவீ தந்த்ரங்களில் கூறப்படுகிறது. (2) சந்த்ர கலையிலிருந்து உண்டாகும் 15 திதிகளில் இருக்கும் காமேச்வரீ முதல் சித்ராவரையிலுள்ள நித்யா தேவதைகளுடன் அபின்னமாகப் பூஜிக்கப்பட்டவள். ப்ரதமா—காமேச்வரீ. த்விதியா—பகமாலினீ. த்ருதியா—நித்ய க்லின்னை. சதுர்த்தி—பேருண்டா. பஞ்சமீ—வன்னிவாஸினீ. ஷஷ்டீ—வஜ்ரேச்வரீ. ஸப்தமீ சிவதூதீ. அஷ்டமீ — த்வரிதா. நவமீ — குலஸுந்தரீ. தசமீ—நித்யா. ஏகாதசீ—நீலபதாகா. த்வாதசீ—விஜயா. த்ரயோதசீ — ஸர்வமங்களா. சதுர்த்தசீ — ஜ்வாலாமாலினீ. பௌர்ணமி—சித்ரா என்றும் அழைக்கப்படும். (3) ஸ்ரீ சக்ரத்தின் நடுவிலமைந்த த்ரிகோணத்திலுள்ள ப்ரதிபத் முதலிய நித்யா தேவதைகளால் பூஜிக்கப்பட்டவள். த்ரிகோணத்திலுள்ள ஒவ்வொரு ரேகையிலும் 5 நித்யைகள் இருக்கின்றனர். இடையிலுள்ள பிந்து எனும் ஸர்வானந்தமய சக்ரமே ஸாதா என்ற ஷோடச கலா ரூபிணியான ஜகன்மாதாவின் இருப்பிடம்.*

611. **कलात्मिकायै नमः** – *கலாத்மிகாயை நம:* –*கலா வடிவமாக இருப்பவள். கலை பலவகைப்பட்டது. சந்த்ர கலை 16. ஸூர்யகலை 12. அக்னி கலை 10. ஆக இந்த கலா*

வடிவமானவள். (2) 64 கலாவடிவமானவள். (3) ஜாக்ரத் கலை 4. ஸ்வப்ன கலை 4. ஸுஷுப்தி கலை 4. துரீயகலை 4 இந்த 16 கலா வடிவமானவள். 1. சித்த வ்ருத்தியுடனிருப்பது, எழுந்திருப்பது, நினைவோடிருப்பது, விழித்திருப்பது என்பவை நான்கும் ஜாக்ரதவஸ்தையின் கலைகளாம். இவை சக்திஸ்வரூபமானவைகள். 2. விஷய ஞாபகம், சிந்தை, ப்ரமம் ஆசை இவை நான்கும் ஸ்வப்ன கலைகளாம். இவை சிவ சக்தி வடிவமானவை. 3. மரணம், மறந்து போகுதல், மூர்ச்சை, நித்ரை இவை நான்கும் ஸுஷுப்தியின் கலைகள். இவை கேவல சிவவடிவமானவை. 4. வைராக்யம், மோக்ஷேச்சை, ஸமாதி நிலை. நித்ய அநித்ய வஸ்துக்களின் நிச்சய க்ஞானம் இவை துரீய அவஸ்தையின் 4 கலைகள்.

612. **कलानाथायै नमः** — கலாநாதாயை நம: —கலைகளுக்குத் தலைவி (2) சந்த்ர வடிவமானவள், சந்த்ர மண்டலம் ஸ்ரீசக்ர வடிவமானது.

613. **काव्यालाप विनोदिन्यै नमः** - காவ்யாலாப விநோதின்யை நம:—காவ்ய சொற்களால் களிப்பவள். வால்மீகி காளிதாஸன் போன்றவர்கள் இயற்றிய நூல் காவ்யமாகும். ஆங்குள்ள விசித்ரமான பதங்களைக் கண்டு ஸந்தோஷிப்பவள்.

614. **सचामर रमावाणी सव्य दक्षिण सेवितायै नमः** — ஸசாமர ரமாவாணீ ஸவ்ய தக்ஷிண ஸேவிதாயை நம: — சாமரத்துடன் கூடிய லக்ஷ்மியாலும் ஸரஸ்வதியாலும் இடது புரத்திலும் வலதுபுரத்திலும் இருந்து ஸேவிக்கப்படுபவள். லக்ஷ்மிதேவி இடதுபக்கத்திலும் ஸரஸ்வதிதேவி வலது புரத்திலுமிருந்து தேவிக்கு சாமரம் வீசுகின்றனர்.

615. **आदिशक्त्यै नमः** —ஆதி சக்த்யை நம: — ஆதி சக்தியாக இருப்பவள். உலகிற்கு முதலாகவும், சக்தியாகவும் இருப்பவள்.

616. **अमेयायै नमः** — அமேயாயை நம: – அளவிட முடியாதவள். தேவியினது ஸ்வரூபம் எங்கும் எல்லாமாய்

எக்காலத்திலும் இருப்பதால் ஏதேனும் ஒன்றைக் கொண்டு இவ்வளவுதான் அன்னையின் ஸ்வரூபம் என எவராலும் அளக்க முடியாதது.

617. **आत्मने नमः** — ஆத்மனே நம: – ஆத்ம வடிவமாக இருப்பவள். ஆத்மா எனில் பரமாத்மா, ஜீவாத்மா, மனஸ், உடல், ஸ்வபாவம், புத்தி முதலிய பல பொருள்கள் உண்டு. முன் நாமாவுடன் இதைச் சேர்த்தால் அமேயாத்மா என்றும், பின் நாமாவுடன் சேர்த்தால் பரமாத்மா என்றும் அமையும்.

618. **परमायै नमः** – பரமாயை நம: —எல்லாவற்றிலும் சிறந்தவள். (2) பர ப்ரும்மத்தை ஒரு அளவிலடக்கி நமக்குத் தெரியும்படி செய்பவள். (3) பரமசிவனுக்கு (லக்ஷ்மியாக) பத்னியாக இருப்பவள் (4) ப்ரும்மத்தின் சிறந்த ரூபமாக உள்ளவள். ப்ரும்மத்திற்குப் புருஷ, வ்யக்த, அவ்யக்த, கால என்று நான்கு ரூபங்கள் உண்டென விஷ்ணு புராணம் கூறுகிறது. அதில் சிறந்ததான புருஷ ரூபமாக உள்ளவள்.

619. **पावनाकृतये नमः** — பாவனாக்ருதயே நம: — பவித்ரமான ஆக்ருதி உள்ளவள். பவித்ரமாகச் செய்யக் கூடிய ஆக்ருதி, க்ஞானம், ச்ரித்ரம், முதலியவைகள் உள்ளவள். அதாவது அன்னையின் உருவைத் தர்சித்தாலும், அவளது சரிதத்தைக் கேட்டாலும் அவளை அறிந்தாலும் பக்தர் பாவனமாவர். 'பரஸ்த்ரீ ஹரணம், குரு பசுவின் வதம், நீசஸங்கம் என்ற மூன்று பாபங்களைச்செய்த த்ரிசங்கு 'என்பவன் தேவியின் தர்சன, ச்வரண, க்ஞானம் முதலியவைகளால் சுத்தனாகி ராஜ்யத்தைப் பெற்றான். பூத உடலை, வித்யையும் தபஸ்ஸும் சுத்தமாக்குகின்றன. நமது புத்தியை க்ஞானமும் ஜீவனை ஈச்வரஸ்வரூபமும் சுத்தமாகச் செய்கின்றன. புண்ய கீர்த்தி, புண்ய ச்வரண கீர்த்தனா என்ற இரண்டு நாமாக்களும் இக்கருத்தையே விவரிக்கின்றன.

620. अनेककोटि ब्रह्माण्डजनन्यै नमः — அநேக கோடி ப்ரஹ்மாண்ட ஜனன்யை நம:— அநேககோடி ப்ரும்மாண்டங்களைப் படைத்தவள். (2) அநேககோடி ப்ரும்மாண்டங்களை உடையவர்களுக்குத் தாயாக இருப்பவள். பிறத்தல் முதலான ஆறு விகாரம் (மாறுதல்) உள்ளதும், பஞ்சீக்ருத பஞ்ச மஹா பூதங்களால் உண்டானதுமான 14 உலகம் சேர்ந்தது ஒரு ப்ரம்மாண்டமாகும். அதற்கு அபிமான தேவதை விராட். ஆங்குள்ள ஜீவராசிகளின் லிங்க சரீர ஸமஷ்டிக்கு அபிமானி தேவதை ஸ்வராட். இவ்விரண்டிற்கும் காரணமான அவ்யக்தத்திற்கு அதி தேவதை ஸம்ராட். இந்த வகையான விராட், ஸ்வராட், ஸம்ராட் என்பவர்களுக்குத் தாயாக இருப்பவள்.

621. दिव्य विग्रहायै नमः – திவ்ய விக்ரஹாயை நம: அழகான தேஹமுள்ளவள். (2) ஆகாயத்தில் நின்று சம்பராதிகளுடன் யுத்தம் செய்தவள். விக்ரஹம் எனில் உருவம், யுத்தம் என இரு பொருளுண்டு.

622. क्लींकार्यै नमः — க்லீம் கார்யை நம: — க்லீம் எனும் காமபீஜத்தைச் செய்பவள். (2) க்லீம்கார வடிவமானவள். (3) க்லீங்கார வடிவரான காமேச்வரர் மனைவியாக இருப்பவள்.

623. केवलायै नमः —கேவலாயை நம:– கலப்பற்ற ஸ்வரூபமாக உள்ளவள். தேவி வேறெந்த தர்மத்துடனும் சேராமல் தனித்துத் தன் ரூபமாகவே இருப்பவள். (2) க்ஞான ரூபிணியாக இருப்பவள். (3) க்லீம் என்பதில் ககார லிகாரங்களை விட்டுக் கேவல காம கலா ரூபமாக இருப்பவள்.

624. गुह्यायै नमः – குஹ்யாயை நம: – மிக ரஹஸ்யமானவள். (2) அதிரஹஸ்யமான அர்த்தமுள்ளவள். (3) ஜீவாத்ம பரமாத்ம ஐக்ய ரூபமானவள்.

625. कैवल्यपददायिन्यै नमः – கைவல்ய பத தாயின்யை நம:— கைவல்ய பதவியை அளிப்பவள். கைவல்யம் எனில் ஸகல தர்மங்களையும் விட்டு தர்மி மாத்ரமாக

(அதாவது, ப்ரஹ்மஸ்வரூபமாக) நிற்பது. ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம், கைவல்யம் என்ற 5 வகையான மோக்ஷத்தில் கைவல்யமாக இருப்பவள்.

(1) சிவன் ராமன் முதலிய குணரூபங்களை உபாஸிப்பவர் ஸாலோக்யம், அதாவது அந்தந்த தேவதைகள் உள்ள லோகத்தில் வஸிப்பதான மோக்ஷத்தைப் பெறுவர். (2) அவரவர் ஸ்வதர்மத்தை விடாமல் ஷை ஸகுணோ பாஸனை செய்பவர் அந்தமூர்த்திகளின் அருகில் வஸிக்கும் ஸாமீப்யம் எனும் பாக்யத்தைப் பெறுவர். 3. விக்ரஹ ஆராதனைகளைவிட்டு, தன்னைவிட வேறானவன் பகவான் என்று மானஸிகமாக உபாஸிப்பவர் பகவானுக்கு ஸமமான ரூபத்தைப் பெறுவது என்ற ஸாரூப்ய முக்தியைப் பெறுவர். 4. தான் உபாஸிக்கும் தெய்வம் தன்னை விட வேறல்ல என்று உபாஸிப்பவர் ஸாயுஜ்யம் என்ற ஸ்வரூபத்தில் ஈடுபடும் முக்தியைப் பெறுவதாகும். இந்த நான்கும் உபாஸனை என்ற கர்மாவினுல் பெறத்தக்கவை ஆனதால், ''பதம்'' எனப்படும். கைவல்யம் என்பதோ கேவல க்ஞானமானதால் நித்யானந்தத்தை அளிப்பதாகும். லலிதா தேவி கைவல்யத்தையும் ஸாலோக்யம் முதலான பதங்களையும் அளிப்பவள்.

626. **त्रिपुरायै नमः** — த்ரிபுராயை நமः — மும்மூர்த்திகளுக்கும் முந்தியவள். (2) ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம்; ஸத்வ ரஜஸ் தமஸ்; வாக்பவ கூடம், மத்ய கூடம், சக்தி கூடம் என்ற மூன்று கூடம். இப்படி மூன்று மூன்று வடிவமானவை அனைத்தும் த்ரிபுரா எனப்படும். அங்கு எல்லாவிடத்திலும் தங்கி நிற்பவள் த்ரிபுரா.

627. **त्रिजगद्वन्द्यायै नमः** —த்ரிஜகத் வந்த்யாயை நமः மூன்று உலகங்களாலும் நமஸ்கரிக்கத்தக்கவள்.

628. **त्रिमूर्त्यै नमः** — த்ரிமூர்த்யை நமः — ப்ரும்மா விஷ்ணு ருத்ரராக உள்ளவள். (2) வாமா, ஜ்யேஷ்டா, ருத்ரா எனும் மூன்று மூர்த்தியானவள். (3) இச்சா ஞான, க்ரியா ரூபமான த்ரிமூர்த்தி யானவள். (4) ப்ராம்மீ, வைஷ்ணவீ, ரௌத்ரீ என்ற த்ரிமூர்த்தியான

வள். (5) வெண்நிறமுள்ள சாம்பவீ, சிவந்த வர்ணமுள்ள ஸ்ரீ வித்யா, கருப்பு வர்ணமுள்ள ச்யாமா என்ற மும் மூர்த்தியானவள்.

629. त्रिदशेश्वर्यै नमः — த்ரிதசேச்வர்யை நம: — தேவர்களுக்கெல்லாம் ஈச்வரீ. குழந்தையாக இருத்தல், குமாரனாக இருத்தல், யுவாவாக இருத்தல் என்று மூன்று நிலை உள்ளவர் த்ரிதசர். (2) 13 ஸங்க்யை உள்ள விச்வே தேவர்களுக்கு ஈச்வரீ.

630. त्र्यक्षर्यै नमः — த்ரயக்ஷர்யை நம: — மூன்று அக்ஷர ரூபமானவள். பாலை என்னும் மந்த்ரம் மூன்று அக்ஷர வடிவமாக அமைந்துளது. மந்த்ரமும் தேவியும், (பாலையும் தேவியும்) ஒன்றே யாகும்.

631. दिव्यगन्धाढ्यायै नमः —திவ்ய கந்தாட்யாயை நம: — திவ்யமான கந்தம் நிறைந்தவள். தேவலோகத்தி லுள்ள ஹரி சந்தனம் முதலிய வாஸனை நிறைந்தவள். (2) நல்ல வாஸனையுள்ளவர்களால் நிறைந்திருப்பவள். ஸத்வாஸனையுள்ளவர்களே அம்பிகையைச் சூழ்ந்து உபா ஸிக்கின்றனர். (3) திவ்ய கந்தத்தை யோகத்தால் அறி யும் யோகிகளால் நிறைந்தவள்.

632. सिन्दूर तिलकाञ्चितायै नमः – ஸிந்தூர திலகாஞ் சிதாயை நம: — ஸிந்தூரப் பொட்டால் அலங்கரிக்கப் பட்டவள். (2) ஸிந்தூரத்தாலும் அழகிய முன்கூந்தலா லும் அலங்கரிக்கப்பட்டவள். (3) ஸுமங்கலிகளால் அலங்கரிக்கப்பட்டவள்.

633. उमायै नम : — உமாயை நம: — உமா என்ற பெயருள்ளவள். (2) சிவனுக்கு லக்ஷ்மீகரமாக இருப் பவள். (3) அளவிடமுடியாத ஸ்வரூபத்தை அளவிடும் படி செய்தவள். (4) காசாம்பூ, மஞ்சள், கீர்த்தி, காந்தி, இவைகளை ஸ்வரூபமாக உடையவள். (5) உத்தமமான சித்த வ்ருத்தியாக இருப்பவள். (6) அகார, உகார, மகார வடிவமானவள். (7) சிவசிரஸ்ஸிலுள்ள பிந்துகலை

யாக இருப்பவள். ஸகல ப்ராணிகளுடைய ஹ்ருதயத்தி லும் அநாஹதம் என்று கூறப்படுவதும், அகார உகார மகாரமெனும் 3 எழுத்துக்கள் ஒன்ருகச் சேர்ந்த மாத்ரா வடிவமானதும், ப்ரணவ நாதத்தின் ஓர் அம்சமாக உள் ளதும் சப்த ப்ரஹ்ம ஸ்வரூபமானதும் தஹராகாச ரூப மானதுமாக அமைந்துள்ள சிவசிரஸ்ஸிலிருக்கும் சந்த்ர கலை உமா எனப்படும். (8) ஜீவன் ஹம்ஸம் எனப்படு கிறது. அது ஹ்ருதய கமலத்தின் கேஸரத்தில் ஸஞ் சரிக்கும்போது ஜாக்ரத் அவஸ்தை. தாமரையின் கர்ணி கையில் இருக்கும்போது ஸ்வப்னம் லிங்கம் எனப்படும். ஆகாசத்திலிருந்தால் ஸுஷுப்தி. ஹ்ருதயத்தை விட்டு மேலே நாடும்போது துரீயம். நாதத்தில் லயமாகும் போது துரீயா தீதம் என அழைக்கப்படும். பார்வதி தேவி தவம் செய்யும்போது அவளை, தாயான மேநா என்பவள், உ—ஓ பெண்ணே, மா—தவம் வேண்டாம் எனக்கூறியதால் பார்வதிக்கு உமா எனப் பெயர் உண் டானது. (9) ஏழு வயதுள்ள கன்யகையாக இருப்பவள்.

634. **शैलेन्द्रतनयायै नमः** — சைலேந்த்ர தநயாயை நம: — பர்வத ராஜனுடைய பெண்ணாக இருப்பவள். தக்ஷன் யாகத்தில் தனது உடலை விட்டபின் ஸதீதேவி ஹிமவானது ப்ரார்த்தனைக்கு இணங்கி பார்வதியாகத் தோன்றினள்.

635. **गौर्यै नमः** — கௌர்யை நம: — சிறிது மஞ் சள் வர்ணமானவள். (2) வெண்மை நிறம் வாய்ந்தவள். (3) கௌரீ எனும் நதியாக இருப்பவள். (4) கௌரீ எனும் 10 வயதுள்ள கன்யகையாக இருப்பவள். (5) கான்ய குப்ஜ தேசத்தில் கௌரீ என்ற பெயருடன் விளங்குபவள்.

636. **गन्धर्वसेवितायै नमः** — கந்தர்வ ஸேவிதாயை நம: —கந்தர்வர்களால் ஸேவிக்கப்பட்டவள். (2) சிறந்த கானத்தால் உபாஸிக்கப்பட்டவள்.

637. **विश्वगर्भायै नमः** — விச்வகர்பாயை நம: — உலகைக் கர்ப்பத்தில் உடையவள்.

638. स्वर्ण गर्भायै नमः —ஸ்வர்ண கர்பாயை நம: — ஸ்வர்ணத்தைக் கர்ப்பத்தில் உடையவள். (2) ஸ்வர்ணத்தையே கர்ப்பமாக உடையவள். (3) ஹிரண்ய கர்ப்பரது வடிவமானவள். (4) மாத்ருகைகளால் ஸேவிக்கப் பட்டவள்.

639. अवरदायै नमः — அவரதாயை நம: — அஸுரர்களைச் சிக்ஷிப்பவள். (2) காந்தியுள்ள பற்களுடன் கூடியவள்.

640. वागधीश्वर्यै नमः -வாகதீச்வர்யை நம: -வாக்குக்ளுக்கு ஈச்வரியாக இருப்பவள்.

641. ध्यानगम्यायै नमः – த்யான கம்யாயை நம :— த்யானத்தால் அடையத் தக்கவள். (2) த்யானத்தால் அறியத்தக்கவள்.

642. अपरिच्छेद्यायै नमः — அபரிச்சேத்யாயை நம அளவிட முடியாதவள். இந்தக் காலத்தில் இந்தவிடத்தில் இந்த ரூபமாகத்தான் என்று கூறமுடியாமல் பரிபூர்ண வஸ்துவாக இருப்பவள்.

643. ज्ञानदायै नमः – க்ஞானதாயை நம: —க்ஞானத்தைத் தருபவள். மோக்ஷத்தைப் பெறுவதற்கேற்ற க்ஞானத்தை அளிப்பவள் லலிதா தேவி. (2) பேத க்ஞானத்தைக் கண்டிப்பவள்.

644. ज्ञान विग्रहायै नमः — க்ஞான விக்ரஹாயை நம: — அறிவையே உடலாகப் பெற்றவள். (2) விரிவான க்ஞானத்தை அளிப்பவள்.

645. सर्व वेदान्त संवेद्यायै नमः – ஸர்வ வேதாந்த ஸம்வேத்யாயை நம: —ஸர்வ உபநிஷத்துகளாலும் நன்கு அறியத்தக்கவள். வேதத்தின் முடிவில் வர்ணிக்கப்படுவதாலும், வேதத்திற்குத் தலைபோல் இருப்பதாலும் உபநிஷத்துகள் வேதாந்தம் எனப்படும்.

646. **सत्यानन्द स्वरूपिण्यै नमः** – ஸத்யானந்த ஸ்வரூபிண்யை நம: — ஸத்ய ஆனந்தமே ஸ்வரூபமாக உள்ளவள். ஸத்யமும் ஆனந்தமுமே ப்ரும்மத்தின் ஸ்வரூபம். அல்லது ஸத்யமான, முக்காலத்திலும் மாருத ஆனந்தமானதென்றும் பொருள். இங்கு ஸத்யா என்று ஒரு நாமாவாகவும் ஆனந்த ஸ்வரூபிணீ என்று வேருென்ருகவும் பிறிப்பர் சிலர். இந்த கணக்கிற்குப் பதிலாக அமேயாத்மா என்ற நாமாவை அமேயா ஆத்மா என்று இரு நாமாவாகக் கூறுவர்.

647. **लोपामुद्रार्चितायै नमः** — லோபாமுத்ரார்ச்சிதாயை நம: — லோபாமுத்ரையால் பூஜிக்கப்பட்டவள். அகஸ்த்யரது பத்னியான லோபாமுத்ரை ஹாதி வித்யையின் ரிஷி ஆவள். அதாவது ஹாதி வித்யை என்ற ஸ்ரீ வித்யையின் பிரிவைக் கண்டுபிடித்தவள். (2) லோபாமுத்ரையாகவும் அர்ச்சிக்கப்பட்டவளாகவும் இருக்கிருள்.

648. **लीलाक्लृप्त ब्रह्माण्ड मण्डलायै नमः** — லீலாக்லுப்த ப்ரஹ்மாண்ட மண்டலாயை நம: — லீலையாக ப்ரும்மாண்ட மண்டலத்தைச் செய்பவள். அநேககோடி ப்ருமாண்டங்களைப் படைப்பதில் லலிதா தேவிக்கு ஶ்ரமமில்லை. விளையாட்டுபோல் படைக்கிருள் என்றும், உலகைப் படைப்பது ஒரு லீலையே யாகும் என்றும் பொருள்.

649. **अदृश्यायै नमः** – அத்ருஶ்யாயை நம: –பார்க்கமுடியாதவள். பாபிகளாலும், ஸ்தூலக் கண்ணினுலும் அன்னையைக் காணமுடியாது.

650. **दृश्य रहितायै नमः** — த்ருஶ்ய ரஹிதாயை நம: — காணத்தக்க வேறு வஸ்து இல்லாதவள். (2) காணப்படுவதான பொருளில் ஸம்பந்தப்படாதவள். (3) சுத்தக்ஞானமாய் இருப்பவள்.

651. **विज्ञात्र्यै नमः** — விக்ஞாத்ரியை நம: – விசேஷமான அறிவுள்ளவள். அறியமுடியாதவள். எல்லாவற்றையும் அறிவிப்பாள். ஒரு பொருளின் அறிவு நமக்குத் தோன்ற தேவியே க்ஞானத்தைத் தருகிருள்.

652. **वेद्यवर्जितायै नमः** — வேத்ய வர்ஜிதாயை நம: — அறிய வேண்டிய வஸ்து இல்லாதவள். எல்லாம் அறிந்த தேவிக்கு இனி அறியவேண்டிய வஸ்து ஒன்றும் கிடையாது. (2) ஸத்தாய், க்ஞானமாய் இருக்கின்ற தேவியை அறிவதற்கு வேறு யாருமில்லாவள். அவளே அவளேதான் பக்தனுக இருந்து அறியவேண்டும்.

653. **योगिन्यै नमः** — யோகின்யை நம: — யோக ரூபமாக இருப்பவள்.

654. **योगदायै नमः** — யோகதாயை நம: —யோகத்தைக் கொடுப்பவள்.

655. **योग्यायै नमः** — யோக்யாயை நம: – யோகம் செய்து அதனல் அடையத்தக்கவள். யோகம் என்பது பொதுவாக பாதஞ்ஜல யோகத்தைக் கூறினும், ஜீவன் ப்ரும்மத்துடன் சேருவதே யோகமாம். அத்தகைய யோகமாகவும், அந்த யோகத்தை உபாஸகர்களுக்குத் தருபவளாகவும் அந்த யோகத்திற் கேற்றவளாகவும் இருக்கிருள் அன்னே. என இந்த மூன்று நாமாக்களும் கூறுகின்றன. (2) பாதஞ்ஜலாதி யோகத்தால் அறியத்தக்கவள் என்ற பொருளும் பொருந்தும். அந்த யோகமும் மந்த்ர யோகம், லய யோகம், ஹட யோகம், ராஜயோகம் என நான்கு வகைப்படும். ராஜ யோகமும் ஸாங்க்ய யோகம், தாரக யோகம், அமநஸ்க யோகம் என மூவகைப்படும் (3) டாகினீ முதலிய யோகினி ரூபமாக இருப்பவள்.

656. **योगानन्दायै नमः** — யோகாநந்தாயை நம: — யோகாநந்தம் உள்ளவள். (1) ஶிவஶக்தி யோகத்திலும், யோக நித்திரையிலும் ஆனந்தமுள்ளவள். (2) யோகானந்தா என்றவரது ரூபமாக உள்ளவள். (3) அயோகா, நந்தா என்று பதம்பிறித்து, **அயோகா** என்பதற்கு – பற்றில்லாதவள், இரும்பு மலேபோல் அசைக்கமுடியாதவள், பக்தர்களேச் சிவனிடம் சேர்க்கின்றவள் என்றும்; **நந்தா** எனில் அளக நந்தா என்ற கங்கா ரூபமானவள், சுக்ல பக்ஷத்தின் ப்ரதமா, ஷஷ்டீ, ஏகாதசி என்று திதிகளுக்குப்

பெயரான நந்தா வடிவமானவள், நந்தகோபன் பெண், நந்தா என்ற ஸரஸ்வதி நதி வடிவமாக இருப்பவள், இன்பத்தைத் தருபவள், நந்த வனத்தில் இருப்பவள் என்றும் பல பொருள் கூறப்படும்.

657. **युगन्धरायै नमः** — யுகந்தராயை நம: — நுகத்தடியைத் தரிப்பவள். யுகம் என்ற சொல்லுக்கு 4 முழம் அளவுள்ளது, க்ருதயுகம் முதலியவை, இரண்டு, ஒளஷதம் இரு முதலான பொருள்கள் உண்டு. தேவி குதிரை, காளை முதலியவைகளாக இருந்து நுகத்தடியை சுமக்கிறாள். 4 யுகங்களையும், இரட்டையாயுள்ள ஸமஸ்த வஸ்துக்களையும் ஒளஷதத்தையும் தரிக்கிறாள்.

658. **इच्छाशक्ति ज्ञानशक्ति क्रियाशक्ति स्वरूपिण्यै नमः**— இச்சாஶக்தி க்ஞான ஶக்தி, க்ரியா ஶக்தி ஸ்வரூபிண்யை நம: — இச்சா ஶக்தி, க்ஞான ஶக்தி, க்ரியாஶக்தி வடிவமானவள். உலகில் ஒரு விஷயத்தைப்பற்றி ஆசை உண்டாகி அதைப்பற்றி நன்கு அறிவு பெற்று, அதைப் பின்னர் செய்கிறோம். தேவியினது பூஜை செய்ய ஆசை, அதைப்பற்றி தெரிந்துகொள்ளுதல், செய்தல் என்பதாம். இவை அனைத்தும் தேவியின் ஸ்வரூபமேயாகும். இதில், இச்சை லலிதா தேவியின் ஶிரஸ். க்ஞானம் உடல். க்ரியை பாதமாம். இச்சாஶக்தி வாமா என்ற பெயருடன் ப்ரும்மாவாக அமைந்து, உலகைப் படைக்கின்றது. க்ஞான ஶக்தி ஜ்யேஷ்டா என்ற பெயருடன் விஷ்ணுவாகி உலகை ரக்ஷிக்கின்றது. க்ரியா ஶக்தி ரௌத்ரீ என்ற ரூபமாகி, ஶிவனாக அமைந்து உலகை ஒடுக்குகிறது. முதலில் வஸ்து க்ஞானம், பிறகு அதனிடம் ஆசை, அதன் பின் அதைச் செய்ய முயற்சி என்றும், இம் மூன்றும் உள்ள இடமே அம்பிகை என்றும் க்ஞானத்தால் இச்சை, இச்சையால் க்ரியை உண்டாகின்றன என்றும், இம் மூன்றும் உள்ள இடமே அம்பிகை என்றும் சிலர் கூறுவர்.

659. **सर्वाधारायै नमः** — ஸர்வாதாராயை நம: — எல்லாவற்றிற்கும் ஆதாரமானவள். (2) எல்லாவித ஆதாரங்களையும் உடையவள். (3) ஸகல ஜகத் பரம்பரா ரூபமாக உள்ளவள்.

660. **सुप्रतिष्ठायै नमः** — ஸுப்ரதிஷ்டாயை நம: — நல்ல ப்ரதிஷ்டையாக இருப்பவள். உலகெலாம் ஒன்றுக்கு ஒன்று (ப்ரதிஷ்டையாக) இருப்பிடமாக இருக்கின்றது. அவை ஒரு சமயம் அழியும். அழியும் எல்லா வஸ்துக்களும் மஹாதேவியினிடம் வந்து ஸூக்ஷ்ம ரூபத்துடன் ப்ரளய காலத்திலும் மற்ற காலங்களிலும் ப்ரதிஷ்டை அடைந்திருக்கின்றன. ஆதலால் ஸமஸ்த வஸ்துக்களுக்கும் நல்ல இருப்பிடமானவள். (2) இருபது எழுத்துக்களுடன் கூடிய ஒரு சந்தஸ்ஸிற்கு ஸுப்ரதிஷ்டா என்று பெயர். அந்த சந்தஸ்ஸாக இருப்பவள்.

661. **सदसद्रूपधारिण्यै नमः** —ஸதஸத் ரூபதாரிண்யை நம: — ஸத் அஸத் என்ற உருவைத் தரிப்பவள். ஸத்–பரப்ரும்மம். அஸத்–உலகம். இவ் விரண்டும் அம்பிகையின் உருவமே. (2) பாரமார்த்திக ஸத்யமாகவும், வ்யாவஹாரிக ஸத்யமாகவும் இருப்பவள். முக்காலத்தும் அழியாத ஆத்ம ஸ்வரூபம் பாரமார்த்திக ஸத்யமாகும். உலகமுள்ளவரையும், இடையில் சிறிது காலம் அழியாமலிருக்கும் வீடு, வாசல் முதலியன வ்யாவஹாரிக ஸத்யம், அக்ஞானத்தால் தோன்றி, க்ஞானம் வந்த க்ஷணத்தில், அழிவதான கயிற்றைப்பார்த்து, பாம்பு என எண்ணுவது ப்ராதிபாஸிக ஸத்யமாம்; (3) **भाव** பாவ, **अभाव** அபாவ ரூபமான ரூபம் உள்ளவள்.

662. **अष्टमूर्त्यै नमः** — அஷ்ட மூர்த்யை நம: — எட்டு சரீரமுள்ளவள். ஈச்வரன் அஷ்டமூர்த்தி. அவர் பத்னியான தேவியும் அஷ்டமூர்த்தியே. (1) பூமி, நீர், தீ, வாயு ஆகாசம், சந்த்ரன், ஸூர்யன், யாகம் செய்பவர் உடல் ஆகிய எட்டு சரீரமுள்ளவள் லலிதாதேவி. (2) லக்ஷ்மீ, மேதா, தரா, புஷ்டி, கௌரீ, துஷ்டி, ப்ரபா, த்ருதி. (3) ஜீவாத்மா, அந்தராத்மா, பரமாத்மா, சுத்தாத்மா, க்ஞாநாத்மா, மஹாத்மா, பூதாத்மா, ஆத்மா. (4) பஞ்ச பூதங்கள், மனஸ், புத்தி, அஹங்காரம். (5) கணிகா, சௌண்டகீ, கைவர்த்தி, ரஜகீ, தந்த்ரகாலீ, சர்மகாரீ, மாதங்கீ, பும்ச்சலீ இத்தகைய பலவகையான அஷ்ட மூர்த்தி உள்ளவள்.

663. **अजाजैत्र्यै नमः** — அஜா ஜைத்ர்யை நம: — அவித்யையை ஜயித்தவள். அஜா என்பது மாயை. அவித்யை.

664. **लोकयात्राविधायिन्यै नमः** – லோகயாத்ரா விதா யின்யை நம: — உலக யாத்ரையைச் செய்பவள். யாத்ரை என்பது : இருப்பிடத்தை விட்டு வெளியில் புறப்படுவதையும், விசேஷமாக புண்ய தீர்த்த க்ஷேத்திரங் களுக்குச் செல்வதையும் சொல்லும். உலகம், தனது வீடான ப்ரும்ம ஸ்வரூபத்திலிருந்து கிளம்பி எங்கேயோ போய்க் கொண்டிருக்கிறது. அதாவது ப்ரும்மத்தினிடம் செல்லாமல், பிறந்து, இறந்து, மறுபடியும் அதே கார் யத்தைச் செய்தவண்ணம் இருக்கிறது. அவரவர் கர்மா வால் அங்ஙனம் அதை அன்னை நடத்துகிருள்.

665. **एकाकिन्यै नमः** — ஏகாகின்யை நம: — ஒருவ ளாக இருப்பவள். தன்னைப்போல், ஸ்வந்த்ரமாய், ஸ்திர மாய், வேறு வஸ்து இல்லாமல் தான் ஒன்ருகத் தனியாக இருப்பவள்.

666. **भूमरूपायै नमः** — பூமரூபாயை நம: – ப்ரும்ம ஸ்வரூபமாக உள்ளவள். "பூமா" என்பது பரமாத்ம ஸ்வரூபம் என உபநிஷத்துகள் வர்ணிக்கின்றன. (2) பல ரூபமாக உள்ளவள். லலிதாதேவி ஒன்ருன பரமாத்ம ஸ்வரூபமாக இருந்தாலும், சில நிமித்தத்தால் பற்பல ரூபங்களைத் தரிக்கிருள். ஆதலால், முன் நாமாவிற்கும் இதற்கும் விரோதமில்லை.

667. **निर्द्वैतायै नमः** — நிர்த்வைதாயை நம: – இரண் டென்ற தன்மை இல்லாதவள்.

668. **द्वैतवर्जितायै नमः** — த்வைத வர்ஜிதாயை நம: இரண்டாவது வஸ்து இல்லாதவள்.

மேல் இரண்டு நாமாக்களும் த்வைத வஸ்து பாவனை யும், த்வைத வஸ்துவும் எப்போதுமில்லாமல் ஏக வஸ்து வாகவே உள்ளவள் பராஶக்தி என்பதைக் காட்டுகின்றன.

669. **अन्नदायै नम** : — அன்ன தாயை நம: — அன்னத்தை அளிப்பவள். ஸகல ப்ராணிகளும் ஜீவித்திருப்பதற்கு ஆதாரமாக உள்ள அன்னத்தை அவரவர்களுக்கேற்றபடி அளிப்பவள் அன்னையே யாவள். காஶீ க்ஷேத்திரத்தில் அன்னபூர்ணு என்ற பெயருடன் பரமசிவனுக்கே அன்னமளிப்பதான அன்னகூட உத்ஸவம் இன்றைக்கும் நடக்கிறது. நமக்கும் அன்னத்தை அளிப்பவள் அன்னை யானதால், நாம் உண்ணும்போது "அன்னபூர்ணே, ஸதா பூர்ணே ஶங்கர ப்ராண வல்லபே, க்ஞான வைராக்ய ஸித்யர்த்தம் பிக்ஷாம் தேஹிச பார்வதி" என்ற ஶ்லோகத்தைக் கூறுகிறோம்.

670. **वसुदायै नमः** — வஸுதாயை நம: — தனத்தைத் தருபவள். அன்னம் மாத்ரமல்லாமல், உடுக்க உடை, ஆபரணம் முதலியவைகளையும் பெற செல்வத்தையும் தருகிருள் என்று இந்த நாமா கூறுகிறது. இங்ஙனம் அன்னத்தையும் செல்வத்தையும் தருகிருள் என்று உணர்ந்து உபாஸிப்பவர்களுக்கு அன்னமும் செல்வமும் நிறையக் கிடைக்கும் என ப்ருஹதாரண்ய உபநிஷத் கூறுகிறது.

671. **वृद्धायै नमः** — வ்ருத்தாயை நம: — வயது முதிர்ந்தவளாக இருப்பவள். கிழவர்களை விருத்தர் என்பது வழக்கம். ரொம்ப காலமாக இருப்பதால், அவர் உடல் காலத்தால் கிழமாக்கப்படுகிறது. மஹாதேவியின் உடல் இத்தகைய கிழத்தனமின்றி "வ்ருத்தத்வம் ஜரஸாவிணு" உடல் கிழமாகாமல் வ்ருத்தர் என்று காளிதாஸன் கூறியபடி கிழ சின்னமான நரை திரை இல்லாமலேயே வ்ருத்தையாக இருப்பவள்.

672. **ब्रह्मात्मैक्य स्वरूपिण्यै नमः** — ப்ரஹ்மாத்மைக்ய ஸ்வரூபிண்யை நம: — ப்ரும்மம், ஆத்மா என்ற இரண்டின் ஐக்யமான வடிவ முள்ளவள். பரப்ரும்மமும் ஜீவாத்மாவும் ஐக்யமான இடமே த்ரிபுரா தேவியின் ஸ்வரூபம். (2) ஶிவன், ஜீவன் ஆகிய இவர்களுடைய ஐக்யத்தைக் கூறுவதான ஹம்ஸ மந்த்ரத்தைத் தன் உருவாகக் கொண்டவள்.

673. **बृहत्यै नमः** — ப்ருஹத்யை நம: — பெரிய வளாக இருப்பவள். (2) ப்ருஹதீ சந்தஸ்ஸாக இருப் பவள். (3) ப்ருஹத்ஸாம ரூபமானவள். (4) ஜ்யேஷ்ட ஸாம ரூபமானவள்.

674. **ब्राह्मण्यै नमः** – ப்ராஹ்மண்யை நம: – ப்ராஹ் மண பத்னியாக இருப்பவள். சாந்தோக்ய உபநிஷத் தும் மற்றும் பல நூல்களும் பரமசிவனை ப்ராஹ்மணன் என்று கூறுகின்றன. ப்ராஹ்மணனுன சிவத்தின் பத்னி யாக இருப்பவள்.

675. **ब्राह्मै नमः** — ப்ராஹ்மயை நம: — ப்ரும்ம பத்னியான ஸரஸ்வதியாக இருப்பவள்.

676. **ब्रह्मानन्दायै नमः** — ப்ரஹ்மானந்தாயை நம: — ப்ரும்மானந்த வடிவமானவள்.

677. **बलिप्रियायै नमः** — பலிப்ரியாயை நம: — பலமுள்ளவரிடம் ப்ரியமுள்ளவள். 'காமக்ரோதம், அக் ஞானம் முதலியவைகளை ஜயிக்கும் பலமுள்ளவரே 'பலி' எனப்படுவர். (2) பூஜையில் ப்ரியமுள்ளவள். பலி என் ருலே பூஜை என்று பொருள். அதிலிருந்தே, உக்ரமான காளி முதலிய பூஜையில் ஆடு கோழிகளைக் கொடுப்பது பலி வெட்டப்படுகிறது என்று கூறப்படுகிறது. (3) மஹாபலியிடம் ப்ரியமுள்ளவள்.

678. **भाषारूपायै नमः** — பாஷா ரூபாயை நம: — பாஷைகளின் வடிவமானவள். பேசுவதற்கு ஸாதகமான சொற்களின் சேர்க்கையே 'பாஷை' எனப்படும். உலகி லுள்ள ஸமஸ்தமான பாஷைகளும் மஹா தேவியேயாம். ஶப்தமெல்லாம் அன்னையின் உருவு, அர்த்தமெல்லாம் சிவனின் உருவமாம்.

679. **बृहत्सेनायै नमः** — ப்ருஹத்ஸேனுயை நம: — பெரிய ஸேனைகளை உடையவள். (2) ப்ருஹத்சேனன் என்ற அரசனது ரூபமாக இருப்பவள்.

680. **भावाभाव विवर्जितायै नमः** — பாவாபாவ விவர்ஜிதாயை நம; — இருப்பது இல்லாதது என்பது இல்லாதவள். உற்பத்தி, அழிவு இல்லாதவள் என்று பொருள்.

681. **सुखाराध्यायै नमः** — ஸுகாராத்யாயை நம: — ஸுகமாக ஆராதிக்கக் கூடியவள். கடுமையான உபவாஸம் நியமம் முதலியவைகள் இல்லாமல் பஞ்ச தஶாக்ஷரீ முதலிய ஶக்தி மந்த்ர ஜபத்தாலும், ஶக்தி த்யானத்தாலும் ஆராதிக்கத் தக்கவள் என்று பொருள். கீதையில் பகவான் கூறியதுபோல் பார்வதிதேவி தன் தந்தையான ஹிமவானுக்குப் படிப்படியாக ஸுலபமான பூஜா மார்க்கத்தைக் கூறுகிருள் தேவீ பாகவதத்தில்.

682. **शुभकर्यै नमः** — ஶுபகர்யை நம: — மங்களத்தைச் செய்பவள். தன்னை உபாஸிப்பவர்களுக்கு இவ்வுலகிலும் மறு உலகிலும் மறு பிறப்பிலும் மங்களத்தையே செய்வாள். அமங்களம் என்பது தேவீ பக்தருக்கு இல்லை.

683. **शोभनासुलभा गत्यै नम** :— ஶோபனு ஸுலபா கத்யை நம; — ஶோபனை யாகவும், ஸுலபை யாகவும் அடையத்தக்க ஸத்கதியாகவும் இருப்பவள். நித்யானந்தத்தைத் தருவதால் "ஶோபனு." ஸுலபமாக உபாஸிக்கத்தக்கவளாதலால் "ஸுலபா." அடையத் தக்கதில் உத்தம வஸ்துவானதால் 'கதி' என்று அழைக்கப்படுகிருள். இது மூன்று சொற்கள் சேர்ந்த ஒரே நாமா என்ருலும் **ஶோபனுயை ஸுலபாயை கத்யை நம:** என்றே கூறவேண்டும்.

இந்த ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் மனிதராலோ முனிவராலோ இயற்றப்பட்டதல்ல. ஸ்ரீ தேவியின் உத்திரவு பெற்ற வாக் ஶக்தியால் இயற்றப்பட்டது ஆதலின், மற்றவை போல், ச-து-ஹி-வை முதலிய ஶ்லோகத்தைப் பூர்த்தி செய்வதற்காக ஏற்பட்ட எழுத்துக்களோ, ஒரே பதம் பலமுறை வருவதோ இதிலில்லை. ஆனுல் சில விடங்களில் காணப்படும் பதங்கள் அடிக்கடி வருவது போல் காணப்படினும், அது அப்படியல்ல என பாஷ்ய

மெழுதியவர் எடுத்துக் காட்டுகின்றனர். இங்குள்ள ஶோபனு என்ற சொல் (462, 972) மற்ற இரண்டு இடங்களில் காணப்படுகிறது. ஆதலால், 'ஒரே சொல்லை மூன்று முறை கூறமாட்டாள் வாக்தேவீ, என்ற நம்பிக்கையால், 462-வது நாமாவை "ஶோபனுயை நம" என்றும், 972-வதை "ஆஶோபனுயை நம:" என்றும் இங்கு "ஶோபனுயை, ஸுலபாயை, கத்யை" என ஒரே நாமாவாகவும் கூறப்பட்டது. இங்ஙனம், பதத்தைச் சேர்ப்பதாலும், (அ) என்று பிரிப்பதாலும், திரும்பக் கூறுதல் என்ற தோஷம் அகற்றப்படுகிறது. மற்ற விடங்களிலும், மற்ற பாஷ்யங்களிலும் இதே மாதிரி செய்யப்படுகிறது. சிலர் இங்கு மூன்று பதங்களை ஒன்று சேர்த்ததுபோல், "ஶோபனு அஸுர நாயிகா" என்ற சொற்கள் இரண்டையும் ஒன்ருகச் சேர்த்து மற்ற விடத்தில் பிரிக்கின்றனர்.

684. **राजराजेश्वर्यै नमः** — ராஜ ராஜேஶ்வர்யை நம; — ராஜ ராஜர்களுக்கும் ஈஶ்வரியாக இருப்பவள். தேவராஜன், யக்ஷராஜன், ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரர் முதலியவர்களுக்கும் ஈஶ்வரியாக இருப்பவள் அன்னை.

685. **राज्यदायिन्यै नमः** — ராஜ்யதாயின்யை நம :— ராஜ்யத்தைத் தருபவள். உபாஸகர்களுக்கு மோக்ஷம் எனும் ஸ்வராஜ்யத்தையும், மும்மூர்த்திகளுக்கு அவரவர் லோகமான ஸத்யலோக, வைகுண்ட, கைலாஸ ராஜ்யத்தையும இந்த்ரனுக்கு ஸ்வர்க்கத்தையும் (ஸுதர்சனனுக்கு அவனது ராஜ்யத்தையும்) கொடுத்தவள் பராஶக்தி.

686. **राज्यवल्लभायै नमः** – ராஜ்ய வல்லபாயை நம: ராஜ்யங்களில் ப்ரியமுள்ளவள். முன்சொன்ன ராஜ்யங்களுக்குப் பதியாக உள்ளவரிடம் அன்பு கொண்டவள். ஸ்ரீ நகரத்தில் 13, 14 ப்ரகாரங்களுக்கிடையே இருந்து இவர்கள் அம்பிகையை உபாஸிப்பதால், பக்தரிடம் அன்புகொள்வது அன்னைக்கு இயற்கையே.

687. **राजत्कृपायै नमः** — ராஜத் க்ருபையை நம: — ப்ரகாசமான க்ருபையை உடையவள். அன்னையின் கருணை உலகில் மிக ப்ரஸித்தமானது.

688. **राजपीठनिवेशित निजाश्रितायै नमः** — ராஜபீட நிவேஶித நிஜாஶ்ரிதாயை நம: — தன்னை அண்டியவர்களுக்கு ராஜ பீடத்தைத் தருபவள். தன்னிடம் தஞ்சம் என்று வந்த பக்தர்களுக்கு ஸ்வல்பமாகக் கொடுக்கத் தெரியாது. குறைந்தபக்ஷமாக ராஜ்யத்தைத் தருபவள்.

689. **राज्यलक्ष्म्यै नमः** — ராஜ்ய லக்ஷ்ம்யை நம: — ராஜ்ய லக்ஷ்மியாக இருப்பவள். ஒரு ராஜ்யத்திற்கு வேண்டிய தனம், தான்யம், அஶ்வம், கஜம் முதலிய அஷ்ட லக்ஷ்மியாகவும் இருப்பவள் ஜகன்மாதா.

690. **कोशनाथायै नमः** — கோஶநாதாயை நம: — பொக்கிஷத்திற்கு நாதையாக இருப்பவள். (2) அன்னமய ப்ராணமய மனோமய விக்ஞானமய ஆனந்தமயம் எனும் 5 கோஶங்களுக்கும் நாதையாக இருப்பவள்.

691. **चतुरङ्गबलेश्वर्यै नमः** – சதுரங்க பலேஶ்வர்யை நம: — நால்வகை ஸேனைகளுக்கும் ஈஶ்வரீ. ரதம் கஜம் அஶ்வம் காலாட்படை என்பது சதுரங்க ஸேனையாம். (2) ஸங்கர்ஷண வாஸுதேவ ப்ரத்யும்ன அனிருத்த என்ற நான்கு வ்யூஹங்களுக்கு ஈஶ்வரீ. (3) ஶரீர புருஷன் சந்த புருஷன், வேத புருஷன் மஹாபுருஷன் என்ற நால்வருக்கும் ஈஶ்வரீ.

692. **साम्राज्यदायिन्यै नमः** – ஸாம்ராஜ்யதாயின்யை நம: — ஸாம்ராஜ்யத்தைத் தருபவள். ராஜஸூயம் என்ற யக்ஞத்தைச் செய்த சக்ரவர்த்தி "ஸம்ராட்" எனப்படுவான். அத்தகைய பதவியை பக்தனுக்கு அளிப்பவள்.

693. **सत्यसन्धायै नमः** — ஸத்ய ஸந்தாயை நம: — ஸத்யமான ப்ரதிக்ஞை உள்ளவள். லலிதா தேவியினது ஆக்ஞையை எவராலும் மீறமுடியாது. (2) தான் செய்த ப்ரதிக்ஞையை ஸத்யமாகச் செய்பவள்.

694. **सागरमेखलायै नमः** – ஸாகர மேகலாயை நம: — ஸமுத்ரத்தை ஒட்யாணமாக உடையவள். ஒட்யாணம்

போல் நான்கு புரமும் ஸமுத்ரங்கள் பூமியைச் சூழ்ந்து கொண்டு இருக்கின்றன. அந்த பூமிவடிவமாக இருப்பவள் என்று பொருள்.

ராஜராஜேஜ்ஸ்வரீ என்ற நாமா முதல் இதுவரை உள்ள நாமாக்கள் அந்த அர்த்தத்தைத் தழுவி அதையே புஷ்டி செய்வதாக அமைந்துள.

695. **दीक्षितायै नमः** — *தீக்ஷிதாயை நம: — தீக்ஷை செய்து வைக்கப்பட்டவள். அன்னையைத் தவிர வேறு ஒருவர் இல்லாததால் தன்னால் தானே தீக்ஷை செய்து கொள்ளப்பட்டவள். தீக்ஷை என்பது ஒரு கர்மாவைச் செய்ய ப்ரத்யேகமாக சில பூர்வ அங்கங்களைச் செய்வதாம். யாகத்தில் நவநீத தீக்ஷை, க்ருஷ்ணாஜின தீக்ஷை, வஸ்த்ர தீக்ஷை, தீக்ஷணீய இஷ்டி முதலியவைகளால் தீக்ஷை செய்யப்படுகிறது. அதனால் அவர்* ***தீக்ஷிதர்*** *எனப்படுகிறார். அங்ஙனம் விவாஹ தீக்ஷை, உபநயன தீக்ஷை, மந்த்ர தீக்ஷை எனப் பல தீக்ஷைகள் உண்டு. மாத்ரு, பித்ரு கர்மாவைச் செய்துமுடித்து ஓராண்டுவரை சில நியமங்களைக் கை கொள்வதும் தீக்ஷை எனப்படுகிறது. (2) க்ஞானத்தை அடையச் செய்பவள். (3) பாபத்தை நீக்கி திவ்யத் தன்மையைத் தருபவள். (4) யக்ஞாதி தீக்ஷை செய்து கொள்பவருடைய உடலில் வஸிப்பவள்.*

696. **दैत्य शमन्यै नमः** — *தைத்ய ஶமன்யை நம: — அஸுரர்களை அடக்குபவள். பண்டாஸுரன், மஹிஷாஸுரன் முதலிய துஷ்டர்களை (பக்தர்களைக் காப்பதற்காக) சிக்ஷித்தவள்.*

697. **सर्वलोक वशंकर्यै नमः** — *ஸர்வலோக வஶம் கர்யை நம: —ஸகல லோகங்களையும் தனக்கு வஶமாகச் செய்கிறவள்.*

698. **सर्वार्थ दात्र्यै नमः** —*ஸர்வார்த்த தாத்ர்யை நம: ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கிறவள்.* ***"அர்த்த"*** *என்றால் "வேண்டத்தக்க பொருள்" என்று அர்த்தம்.*

எல்லோரும் பெரும்பாலும் தனத்தையே விரும்புவதால் தனமே அர்த்தம் எனப்படுகிறது. ஆயினும் புருஷர்களால் வேண்டப்படும் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கும் 4 புருஷார்த்தங்களாம். பக்தர்களது விருப்பத்திற்கும், உபாஸனைக்கும் தக்கபடி அம்பிகை ஸர்வ புருஷார்த்தங்களையும் தருபவள்.

699. **सावित्र्यै नमः** — ஸாவித்ர்யை நம: —ஸாவித்ரீ ரூபமாக இருப்பவள். உலகைப் படைப்பதால் பரமாத்மாவுக்கு "ஸவிதா" என்றபெயர் தோன்றிற்று. பரமாத்மாவாகவும், அவருடைய பத்னியாகவும் இருப்பதால் அம்பிகை ஸாவித்ரீ எனப்படுகிருள். ஸவிதா என்பது ஸூர்யனுக்கே ப்ரஸித்தமான பெயர். ஆனாலும் விஷ்ணுவும் சிவனும் ஸூர்யமண்டலத்தில் இருப்பதாலும் ஸவிதாவை ஸ்விதா என்று அழைத்து ப்ரும்மமாகவும் உபாஸிக்கின்ருேம். (2) ஸர்வ வேதங்களாலும் பூஜிக்கப்பட்டுச் சுத்தமாக இருப்பவள். (3) ஒளி பரவக் காரணமாக இருப்பவள். (4) புஷ்கர க்ஷேத்ரத்தில் ஸாவித்ரீ என்ற பெயருடன் இருப்பவள். (5) ஸத்யவானது பத்னியான ஸாவித்ரிக்கு அருள் புரிந்தவள்.

700. **सच्चिदानन्द रूपिण्यै नमः** —ஸச்சிதானந்த ரூபிண்யை நம: —ஸத் சித் ஆனந்தம் என்ற வடிவமாக இருப்பவள். இதே பரப்ரும்மத்திற்கு ஸ்வரூப லக்ஷணம் என வேதாந்தம் கூறுகிறது. எக்காலத்தும் அழியாததும், எக்காலத்தும் ப்ரகாஶமான க்ஞானமாக இருப்பதும் எக்காலத்தும் ஆனந்த ரூபமாக இருப்பதும் ஜகதீஶ்வரியின் ஸ்வரூபம்.

701. **देश काल अपरिच्छिन्नायै नमः** — தேஶ கால அபரிச்சின்னையை நம: — தேசத்தாலும், காலத்தாலும் இவ்வளவு என வகுக்கப்படாதவள். சில வஸ்துக்கள் இந்த இடத்தில் தான் இருக்கின்றது, இந்த இடத்தில் இல்லை என்பது தேஶத்தால் வகுக்கப்பட்டதாகும். இந்த காலத்தில் இருந்தது, இந்த காலத்தில் இல்லை என்பது காலத்தால் வகுக்கப் பட்டதாகும். அம்பிகை இன்ன

தேசத்தில் இன்ன காலத்தில் தான் இருந்தாள், இந்த இந்த காலத்தில் இல்லை என்று கூறமுடியாமல் ஸர்வ தேசங்களிலும் ஸர்வ காலத்திலும் உள்ளவள்.

702. **सर्वगायै नमः** — ஸர்வகாயை நம: — எங்கும் நிறைந்திருப்பவள். முன் நாமாவின் அர்த்தத்தைப் பலப்படுத்துகிறது இது. ஶக்தியானவள் ஒரு ஸமயம் ஶ்வேத பர்வதத்தில் அமர்ந்து கடுமையாகத் தவம் புரிந்தாள். ப்ரும்மா "யாது வரம் வேண்டும்?" எனக்கேட்க, "நான் (ஸகுணமான வடிவத்திலும்) எல்லா விடத்திலும் வ்யாபித்திருக்க வேண்டும், என்று கேட்டாள். அங்ஙனமே அவர் வரமளித்ததால், ஸகுணத்திலும் பராஶக்தி எல்லா க்ஷேத்ரங்களிலும் நிறைந்திருக்கிருள்.

703. **सर्वमोहिन्यै नमः** - ஸர்வ மோஹின்யை நம:— எல்லோரையும் மோஹமடையும்படி செய்பவள். எல்லா விடத்திலும் எல்லா காலத்திலும் இருக்கின்ற லலிதா தேவி என் நமக்குத் தெரியவில்லை? என்பதற்குக் காரணம் கூறுவதுபோல் அமைந்துள்ளது இந்த நாமா. எவராலும் ஜயிக்கமுடியாத மாயாஶக்தி அன்னையிடம் இருக்கின்றது. அதனுல் மோஹமடைந்தவர் அவளைத் தர்ஶிக்காததுடன் நித்திய வஸ்துவை அநித்ய மாகவும், அநித்யத்தை நித்யமாகவும் எண்ணி மோஹிக்கின்றனர். நிர்குணமும் ஸகுணமும், அணுவும் ஸ்தூலமும், ஜடமும் அறிவும், நிஷ்க்ரியையும் க்ரியையுமாக உள்ளது அம்பிகையின் ஸ்வரூபம் என்று கூறும் வேதாந்தத்தில் மோஹமடைந்து ஏமாறுபவர் மாயையில் சிக்கியவர். (2) த்ரைலோக்ய மோஹன சக்ர ரூபமாக இருப்பவள்.

704. **सरस्वत्यै नमः** —ஸரஸ்வத்யை நம: — ஸரஸ்வதி தேவியின் ரூபமாக இருப்பவள். (2) இரண்டுவருஷ கன்யகையின் ரூபமாக இருப்பவள். (3) ஸர்வ ப்ராணிகளின் நாக்கிலிருந்து பேசும்படி செய்பவள்.

705. **शास्त्रमय्यै नमः** — ஶாஸ்த்ர மய்யை நம: — ஶாஸ்த்ர மயமாக இருப்பவள். ஶாஸனம் (உத்திரவு)

செய்வதால் ஶாஸ்த்ரம் எனப்படும். கண்ணால் காணப் படும் ப்ரத்யக்ஷமும், அதை அண்டியுள்ள அனுமானமும், இந்த்ரியங்களுக்கு விஷயமான வஸ்துக்களையே காட்டு கின்றன. சிலஸமயம் உள்ளதை உள்ளபடி கூருமல் வேருகவும் கூறும். இந்திரியங்களுக்குப் புலப்படாத பர லோகம், மறுஜன்மம், ஆத்மஸ்வரூபம் முதலியவைகளைத் தேவி ஶாஸ்த்ரவாயிலாக நமக்கு அளித்திருக்கிருள். அந்த ஶாஸ்த்ரங்களால் தான் அம்பிகையின் நிஜஸ்வ ரூபத்தைக் காணலாம் இந்தக் கருத்தைக் கொண்டு, ப்ரும்மஸூத்ரத்தில் மூன்ருவது ஸூத்ரமானது "ஶாஸ்த்ர யோனித்வாத்" என்று தோன்றிற்று. இதற்குப் பாஷ்யம் எழுதிய ஸ்ரீ பகவத்பாதாள், ஶாஸ்த்ரங்களுக்குக் காரண மானது, ஶாஸ்த்ரத்தால் அறியத்தக்கது. ஆத்மஸ்வரூபம் என இருவகையாகவும் பொருள் கூறினர். அத்தகைய ஸாத்விகமான வேத,வேதாந்த, ஶாஸ்த்ரமயமாக இருப் பவள் தேவி என்று இந்த நாமா கூறுகிறது.

706. **गुहांबायै नमः** — குஹாம்பாயை நம: — ஸுப் ரஹ்மண்யருடைய தாயாக இருப்பவள். தாரகாஸுர னைச் சிக்ஷிக்க ஶிவ ஶக்திகளது ஸம்பந்தத்தால் ஸுப்ரஹ் மண்யர் அவதரித்தார். ஆதலின் குஹனது தாய். (2) குஹையிலிருக்கும் அம்பிகை. குஹை என்பது ஸகல ப்ராணிகளின் ஹிருதயமாம். ஆங்கு வஸிக்கும் தேவி என்றும் பொருள். (3) ஹ்ருதய குஹையில் நிழலாகவும் ஆத்மாவாகவும் இருப்பவள்.

707. **गुह्यरूपिण्यै नमः** — குஹ்ய ரூபிண்யைநம: — மிக ரஹஸ்யமான ரூபமுள்ளவள். (2) குஹ்ய உபநிஷத் தாக உள்ளவள் தேவி என கூர்மபுராணம் கூறுகிறது. கண், காது முதலிய இந்திரியங்களுக்கு ஸ்பஷ்டமாகத் தெரியாததை ரஹஸ்யம் என்கிரோம். அது ஒரு சிலருக் காவது தெரிவதால்தான் ரஹஸ்யம் எனக் கூறப்படு கிறது. அப்படி தேவியினது ஸகுண ஸ்வரூபத்தையும் நிர்குணமான தத்வரூபத்தையும் கோடியில் ஒருவரே அறிவர். ஆதலால் தேவி குஹ்ய ரூபிணீ எனப்படுகிருள்.

708. **सर्वोपाधि विनिर्मुक्तायै नमः** — ஸர்வோபாதி விநிர்முக்தாயை நம :— ஒருவித உபாதியும் இல்லாதவள். ஶாஸ்த்ரங்களில் தேசம், காலம், வஸ்து இவைகள் மற்ற வஸ்துக்களுக்கு "**உபாதி**" எனப்படும். இவைகளுக்குக் கட்டுப்படாதது தேவியின் ஸ்வரூபம். உலக வழக்கத்தில் உபாதி என்பது நோயைக் குறிக்கும். நோய் இல்லாமல் இருப்பது ஸஹஜமாகும். நிஜஸ்வரூமாகும், அதற்கு பங்கத்தை அளிக்கும் நோயே உபாதி எனப்படுகிறது. இங்ஙனமே, ஶாஸ்த்ரங்களில் ஆத்மா ஸ்வதந்த்ரன் ஸ்வ ப்ரகாஶன், நித்யன், ஆனந்த வடிவன், சுத்தன், நாம ரூபமற்றவன் என வர்ணிக்கப்படுகிறது. அதே ஆத்மா மாயையுடன் சேரும்போது ஈஸ்வரன் எனப்படுகிறுன். நோய் எனும் உபாதி வந்தபோது நாம் நோயாளி எனப் படுகிறோம். அதேபோல், சுத்த, ஆனந்த அறிவுமயமான ஆத்ம ஸ்வரூபம் அவித்யை, ஸத்வம், ரஜஸ், தமஸ், முதலியவைகளின் சேர்க்கையால் தன் நிஜ ஸ்வரூபத்தை விட்டு, ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற நாம ரூபங் களைப் பெறுகிறது. அவை நீங்கிறுல் தமது நிஜ ஸ்வரூ பத்தைப் பெறுகின்றனர். ஆதலால் கவனித்துப் பார்த் தால், ஶாஸ்த்ரம் கூறுவதையே உலகமும் ஒருவகையாகக் கூறுகிறது எனலாம். தேவி எந்த வகையான உபாதியும் இல்லாமல் நித்ய ஸ்வப்ரகாச வஸ்துவாக இருக்கிறுள். (2) தர்க்க ஶாஸ்த்ரம் கூறும் உபாதி என்ற தோஷ மில்லாத ஸத் ஹேதுவாக இருப்பவள்.

709. **सदाशिव पतिव्रतायै नमः** — ஸதாஶிவ பதிவ்ர தாயை நம; — ஸதாஶிவனுடைய (கற்புள்ள) பத்னியாக இருப்பவள். ஒவ்வொரு ஸ்திரீயும் கற்புள்ளவளாகவும் பத்னியாகவும் இருக்கவேண்டும் என்று சாஸ்த்ரம் கூறு கிறது. பதியுடன் யக்ஞ யாகாதிகளில் உடன்படும் மனைவிக்கே பத்னி என்று பெயர், பொதுவாக ஸ்த்ரீ களுக்குக் கற்பு என்பது புருஷனுடன் "ஸஹதர்ம சாரிணீ" அதாவது பதிசெய்யும் கர்மாக்களுக்கு ஸஹாயமாக இருந்து தான் ஒரு தனி கார்யம் செய்யா மல், உடல், வாக்கு, மனம் இவைகளைப் பதியிடமே அளிப்பதாம்

தேவி தனது பதியான பரமாத்மா அகண்ட ஸச்சிதானந்த ஸ்வரூபமாக இருக்கும்போது அவருடன் இரண்டற ஒன்றாகக் கலந்திருக்கிறாள். அவர் உலகைப் படைத்துப் பரிபாலித்து, உபஸம்ஹாரம் செய்யக் கருதும்போது அந்தந்த வேலைக்கேற்ற உருவெடுத்துப் பகவானுடன் சேர்ந்து அவைகளைப் பூர்த்திசெய்கிறாள். ஸதா மங்கள ரூபனாக இருக்கும் பதிக்கு ஸர்வ மங்களா என்ற பெயருடன் இருந்து பக்தர்களுக்கு மங்களத்தைச் செய்கிறாள்.

710. **संप्रदायेश्वर्यै नमः** — ஸம்ப்ரதாயே ஶ்வர்யை நம: — ஸம்ப்ரதாயத்திற்கு ஈஶ்வரியாக இருப்பவள். குரு சிஷ்ய க்ரமமாக வரும் கர்மா, வித்யை முதலியவைகளே ஸம்ப்ரதாயம் எனப்படும். அதற்கு ஈஶ்வரீ எனில், அதை நன்கு ரக்ஷிக்கிறவள். அல்லது அதனால் அறியத் தக்கவள் என்று பொருள். (2) சிவன் தர்மீ, சக்தி தர்மம் என்ற ஸம்ப்ரதாயத்திற்கு ஈஶ்வரீ. (3) ஸம்ப்ரதாய அர்த்தத்திற்கு ஈஶ்வரீ. பஞ்சதசீ என்ற தேவியின் மஹாமந்த்ரத்திற்குப் பாவார்த்தம், ஸம்ப்ரதாயார்த்தம், நிகர்ப்பார்த்தம், ஸர்வ ரஹஸ்யார்த்தம், மஹா தத்வார்த்தம் என பலவகை பொருள் இருப்பதாக யோகினீ ஹ்ருதயம், தத்தாத்ரேய ஸம்ஹிதை முதலிய நூல்கள் கூறுகின்றன.

711. **साध्व्यै नमः** — ஸாதுனே நம: — உசிதமாக இருப்பவள் என்று கூறுவதற்கு உசிதமானவள். இங்கு ஸாத்வீ என்பது **ஸாது** என்றும் **ஈ** என்றும் இரண்டு நாமாக்களாகப் பிரிக்கப்பட்டது. பின்னர் ஒருமுறை "ஸாத்வீ ஸத்கதி தாயினீ" என்று வருவதால், சொன்னதையே மறுபடி திரும்பக் கூறல் (புனருக்தி) என்ற குற்றம் நேராதபடி இங்கு இப்படி பிரிக்கப்பட்டது.

712. **यै नमः** — யை நம: — ஈ என்ற அக்ஷரவடிவமானவள். எல்லா எழுத்துக்களும் தேவியின் வடிவமேயாம். (2) விஷ்ணு ஸஹோதரியாக இருப்பவள். தர்மம், தர்மீ என்று ஒன்றாக அழைக்கப்படும் ப்ரும்மத்தினிட

மிருந்து புருஷன் ஸ்த்ரீ என இரண்டு உருவம் தோன் றிற்று. இதில் பெண்வடிவமான சக்தி சிவனுக்குப் பத்னி யானாள், புருஷ ரூபமான விஷ்ணு உலகிற்குக் காரண மாக இருக்கின்றார், (3) காமகலா ரூபமாக உள்ளவள். பஞ்சதசாக்ஷரியின் முதல் கண்டத்தில் இந்த அக்ஷரம் அமைந்திருக்கிறது.

713. **गुरुमण्डल रूपिण्यै नमः** — குரு மண்டல ரூபிண்யை நம:— குருமண்டல ரூபமாக இருப்பவள். குரு பரம்பரையால் அன்னையின் ஸ்வரூபம் இத்தகையது என நிரூபிக்கப்பட்டுளது. பரமசிவன் முதல் நமது நேரான ஆசார்யர் வரையிலுள்ளவர், குரு பரம்பரை அல்லது குரு மண்டலமாவர். பரமசிவத்தால் முதலில் உபதேசிக்கப்பட்டு நமது ஆசார்யர் வரையில் தேவியின் தத்துவம் கர்ண பரம்பரையாக உபதேசிக்கப்பட்டு வந்த ரஹஸ்யமாக அமைந்துளது.

714. **कुलोत्तीर्णायै नमः** -குலோத்தீர்ணயை நம:— குலத்தைத் தாண்டி இருப்பவள். குலம் என்பது இந்த்ரியக் கூட்டத்தைக் குறிக்கும். அதற்கு மேலாக அவைகளைக் கடந்து அறியமுடியாதிருப்பது அன்னையின் தத்துவம்.

715. **भगाराध्यायै नमः** — பகாராத்யாயை நம ;— ஸௌர்ய மண்டலத்தில் ஆராதிக்கத்தக்கவள். ரஹஸ்ய உபாஸனைக்கு ஏற்றவிடம் ஸௌர்ய மண்டலம். (2) த்ரி கோணத்தில் உபாஸிக்கத் தக்கவள். (3) த்ரிகோண வடிவமான யோனியில் உபாஸிக்கத்தக்கவள்.

716. **मायायै नमः** – மாயாயை நம: — மாயா வடிவ மானவள். உள்ளதை இல்லாததாகக் காட்டுவதும், இல்லாததை உள்ளதாகச் செய்வதும், சேரமுடியாததைச் சேர்த்துவைப்பதும், ஸ்வப்னம் இந்த்ர ஜாலம்போல்மிக ஆச்சர்யமான காரியத்தைச் செய்வதுமே மாயை எனப் படும்.

717. **मधुमत्यै नमः** — மதுமத்யை நம: — மதுவை உடையவள். (2) மதுவாக இருப்பவள். (3) மதுமதி

என்ற உபனிஷத் வித்யையாக இருப்பவள். (4) மதுமதீ எனும் ஏழாவது படியாக இருப்பவள். (இந்தப் படிகள் உத்தம யோகிகளால் தாண்டிச் செல்லத்தக்கவை என யோக நூல் கூறுகிறது) (5) மதுமதி எனும் நதி ரூபமாக இருப்பவள்.

718. **मह्यै नमः**—மஹ்யை நம:—பூமிரூபமாய் இருப்பவள். (2) மஹீ எனும் ப்ரக்ருதி ரூபமானவள். (3) மஹீ எனும் நதீ ரூபமானவள்.

719. **गणांबायै नमः** — கணாம்பாயை நம: — கணங்களின் தாயாக இருப்பவள். சிவ கணங்களுக்கும் அந்த கணங்களுக்குத் தலைவனான கணபதிக்கும் தாயாக இருப்பவள்.

720. **गुह्यकाराध्यायै नमः** - குஹ்யகாராத்யாயை நம: குஹ்யர்களால் ஆராதிக்கத்தக்கவள். (2) குஹ்யமான இடத்தில் பூஜிக்கத்தக்கவள்.

721. **कोमलाङ्ग्यै नमः** — கோமலாங்க்யை நம:— அழகான அங்கமுள்ளவள்.

722. **गुरुप्रियायै नमः** - குருப்ரியாயை நம:— குருவுக்கு ப்ரியமானவள். ஜகத்குருவான பரமசிவனுக்கு மனைவியாதலாலும் ஸ்வர்க்கலோக குருவான ப்ருஹஸ்பதிக்கும் நமது குருவிற்கும் மாதாவானதாலும் ப்ரியமானவள்.

723. **स्वतन्त्रायै नमः** —ஸ்வதந்த்ராயை நம:— ஸ்வதந்த்ரமாக இருப்பவள். பிறரை அண்டி ஒரு கார்யத்தைச் செய்பவர் பரதந்த்ரர் ஆவர். தேவியோ பிறரை அபேக்ஷிக்காமல் ஸகல கார்யங்களையும் செய்யவல்லவள். (2) ஸகல தந்த்ரங்களையும் தனக்கு அதீனமாகச் செய்தவள். (3) ஸ்வதந்த்ரம் எனும் தந்த்ர வடிவமானவள். ஸ்வதந்த்ரம் என்பது பஞ்சதஶீ என்றும், ஸௌந்தர்ய லஹரீ என்றும், வாமகேஶ்வர தந்த்ரம் என்றும் கூறுவர்.

724. **सर्वतन्त्रेश्यै नमः** –ஸர்வ தந்த்ரேஶ்யை நம :— ஸர்வதந்த்ரங்களுக்கும் ஈஶ்வரீ. 64 தந்த்ரங்களையும் ஆதரித்து அவைகளுக்கு ஆதாரமாக இருப்பவள்.

725. **दक्षिणामूर्ति रूपिण्यै नमः** — தக்ஷிணா மூர்த்தி ரூபிண்யை நம : தக்ஷிணாமூர்த்தி வடிவமானவள். பரம சிவனது பற்பல ரூபங்களில் தக்ஷிணாமூர்த்தி ஒன்று. ஸதி என்ற பத்னீ தக்ஷயக்ஞத்தில் உடலை விட்டபின் சிவன் க்ஞானமூர்த்தியாக இருந்து கல்லால மரத்தின் கீழ் ஸனகாதிகளுக்குச் சின் முத்ரையால் மௌனமாக வேதாந்த தத்துவத்தை உபதேசித்தார். குரு ரூபமான இந்த மூர்த்தி மிக முக்யமானதால், ஒவ்வொரு ஆலயத்திலும் தக்ஷிணாமூர்த்தி ஸன்னதி தனியாக இருக்கின்றது, அதனருகே பக்தர் பஞ்சாக்ஷரீ செய்வதும் ப்ரஸித்தம். தக்ஷிணா மூர்த்தி அஷ்டகமும் தக்ஷிணா மூர்த்தி தந்த்ரமும் மிகச் சிறப்பானவை.

726. **सनकादि समाराध्यायै नमः** -- ஸனகாதி ஸமாராத்யாயை நம :– ஸனகாதிகளால் ஆராதிக்கப்பட்டவள். ஸநகர், ஸநந்தனர், ஸநாதனர், ஸநத்குமாரர் என்ற நால்வரும் ப்ரும்மாவின் மானஸிக புத்ரர். விஷயங்களில் ஆசையை விட்டு, க்ஞான மார்க்கத்தில் ஈடுபட்டு ஸாக்ஷாத் சிவனிடமே உபதேசம் பெற்றவர். ஸமய மதத்தைக்கூறும் ஸநக ஸம்ஹிதா, ஸநந்தன ஸம்ஹிதா, ஸநத்குமார ஸம்ஹிதா என்பவை இவர்களால் இயற்றப்பட்டவை. தேவி பக்தர்களான இவர்கள் குரு பரம்பரையில் சேர்க்கப்பட்டிருக்கின்றனர்.

727. **शिवज्ञानप्रदायिन्यै नमः** — ஶிவக்ஞான ப்ரதாயின்யை நம: — சிவக்ஞானம் தருபவள். சிவனைப் பற்றிய அறிவை, சிவமான அறிவைத் தருபவள். (2) ஶிவனால் அளிக்கப்பட்ட க்ஞானம் உள்ளவள். முன் மூன்று நாமாக்களும் தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபத்தைக் கூறுகின்றன.

728. **चित्कलायै नमः** — சித்கலாயை நம: —சித்கலையாக இருப்பவள். சித் என்பது க்ஞானம். அன்னை

க்ஞான கலா வடிவமாக இருப்பவள். ஸத் சித் ஆனந்தம் என்பது பரமாத்ம ஸ்வரூபம். இவைகளில் "சித்" என்ற தாகவும் இருக்கிருள் என்பது பொருள். எங்குமுள்ள சைதன்யமானது ஜீவனுடைய அந்தக்கரணத்தில் நின்று சித்ரூபமாக ப்ரகாசிக்கின்றது. (2) ப்ராணிகளின் மன தில் சித் கலையாக இருப்பவள்.

729. **आनन्द कलिकायै नमः** — ஆனந்த கலிகாயை நம: — ஆனந்தத்தின் அம்சமாக இருப்பவள். பரமாத்மா ஒரே ஆனந்தமயன். அவனது அம்சமே ஜீவர்களது ஆனந்தமாக இருப்பது.

730. **प्रेमरूपायै नमः** — ப்ரேம ரூபாயை நம: — அன்பு ரூபமாக இருப்பவள். அன்புடன் கூடிய பக்தியே ப்ரேமை எனப்படும். கோபிகைகள் கண்ணனிடம் கொண்ட பக்தி ப்ரேம பக்தியாகும். பக்தர்களது ப்ரே மையே அன்னையின் வடிவமாம்.

731. **प्रियंकर्यै नमः** — ப்ரியம் கர்யை நம: —ப்ரியத் தைச் செய்கிறவள். அப்படி ப்ரேமையுடன் உபாஸிக் கும் பக்தர்களுக்கு ப்ரியத்தைச் செய்கிருள். ஒவ்வொரு வருக்கு ஒவ்வொன்றில் ப்ரியம் இருக்கும். அவரவர் புண் யத்திற்கேற்றபடி அந்தந்த ப்ரியத்தைச் செய்கிருள்.

732. **नाम पारायण प्रीतायै नमः** — நாம பாராயண ப்ரீதாயை நம: — நாமாவைப் பாராயணம் செய்வதால் ஸந்தோஷப்படுபவள். ஸஹஸ்ர நாம பாராயணத்தால் அன்னை ஸந்தோஷமடைகிருள். (2) வர்ண நாமாக்க ளான 20,736 நாமாக்களைப் பாராயணம் செய்வதால் ஸந்தோஷமடைகிறவள். அ முதல் அ: வரை 16 அக்ஷ ரங்கள் ஸ்வரம் எனப்படும். க முதல் க்ஷ வரை 35. ஸ்வரம் என்பது உயிர் எழுத்தென்றும், மற்றவை வ்யஞ் ஜனம் அல்லது மெய் எழுத்து என்றும் கூறப்படும். உயிர் எழுத்தில்லாமல் மெய் எழுத்தைக் கூறமுடியாது. அ என்ற உயிரெழுத்தையும், மெய் எழுத்து 35 ஐயும் சேர்த்தால் 36 ஆகின்றன. இந்த முப்பத்தாறையும் 16 உயிர் எழுத்துக்களால் பெருக்கினுல் ($36 \times 16 = 576$) 576 அக்ஷரங்கள் ஆகின்றன. 36 அக்ஷரங்களும் வர்ஷம்

எனப்படும். அவைகளை உயிரெழுத்தால் பெருக்கி வந்த விடை 576 மாதங்களாம். வர்ஷங்களை மாதங்களால் பெருக்கினுல் முன் கூறிய 20,736 என்ற விடை வருகின்றது. அவை அனைத்தும் அன்னையின் நாமாக்களாம். இப்படி அக்ஷரங்களைச் சேர்த்து அக்ஷரவடிவமான நாமாக்களைப் பாராயணம் செய்தால் தேவிக்கு மிகப்ரியமாம்.

**உதாஹரணம் :** ஒவ்வொரு எழுத்துடனும் ம் என்ற பிந்துவைச் சேர்க்கவேண்டும். அந்த நாமாவிற்குப் பின்னர் பல்லவம் என்ற **ஆம், ரம்** என்ற இரண்டையும் ஒவ்வொரு நாமாவிலும் சேர்க்கவேண்டும். அதேபோல் **நம :** என்பதும் சேர்க்கத்தக்கதாம். முதலில், உயிர் எழுத்தின் முதல் எழுத்தும், மெய் எழுத்தின் முதல் எழுத்தும் ஒவ்வொரு நாமாவிலும் மாருமல் அப்படியே சேரும். நடுவிலுள்ள அக்ஷரமே மாறி வரும். ஆக ஒவ்வொரு நாமாவும் 7 எழுத்துள்ளது.

(1) அம். கம். அம். ஆம். ஈ. நம: (2) அம். கம். கம். ஆம். ஈம் நம: (3) அம். கம். க²ம். ஆம். ஈம் நம: (4) அம். கம். க³ம். ஆம். ஈம். நம; (5) அம். கம். க⁴ம். ஆம். ஈம். நம: (6) அம். கம். ஙம். ஆம். ஈம். நம: என்பதுபோல் பெருக்கிப் பின்னர் 576 ஐயும் 36 மாதங்களால் பெருக்கினுல் 20,736 ஆகும். (இதேபோல் மற்றதையும் நேயர் ஊஹித்தறியவும்.) ஸ்வரங்கள் விமர்ஶம் என்றும் வ்யஞ்ஜனங்கள் ப்ரகாஶம் என்றும் இவ்விரண்டின் சேர்க்கையே ப்ரும்மம் என்றும் கூறப்படும். இதில் முதல் பீஜ அக்ஷரங்களுக்கு மேலும், பல்லவ அக்ஷரங்களுக்குக் கீழேயும் அன்னையின் மூல மந்த்ரத்தைக் கூறுவது விசேஷம். இந்த பாராயணத்தை ஒரே தினத்திலும், ஒரு வாரத்திலும், ஒரு பக்ஷத்திலும், ஒரு மாதத்திலும், 36 நாட்களிலும் பாராயணம் செய்யலாம். இந்த நாம பாராயணத்தில் மற்றும் சில விதமான மாறுதலைக் கூறுவார் உண்டு.

733. **नन्दि विद्यायै नमः** — நந்தி வித்யாயை நம: — நந்திகேசரால் உபாஸிக்கப்பட்ட வித்யா ரூபமானவள்.

734. **नटेश्वर्यै नमः** — நடேஶ்வர்யை நம: — நடேஶ்வரருடைய மனைவியா யிருப்பவள். நடனம் செய்யும் நடராஜனை அனுஸரித்து தேவியும் நடனம் செய்கிறாள். சிதம்பர க்ஷேத்ரத்தில் மிகப்ரதானமாக நடராஜன், சிவகாமிஸுந்தரியுடன் ப்ரகாசிக்கின்றார். சிவனோடு அம்பாள் ஆனந்தத் தாண்டவம் ஆடியதாகவும் ஐதிஹ்யம். இந்த தாண்டவத்தை ஸௌந்தர்ய லஹரீ—" தவாதாரேமூலே " என்ற ஶ்லோகத்தால் வர்ணிக்கின்றது.

735. **मिथ्याजगदधिष्ठानायै नमः** — மித்யா ஜகததிஷ்டானாயை நம: — மித்யா வடிவமான உலகிற்கு இருப்பிடமானவள். பரமாத்மாவும் 'நான்' எனும் ஜீவனும் ஒன்றே. வேறல்ல என்ற அனுபவம் வாய்ந்தவர்க்கு இந்த உலகம் கானல் ஜலம்போல் மித்யா மாத்ர மாகத் தோன்றும். கானலில் அல்லவா ஜலம் தோன்றுகிறது. அந்தக் கானல் உண்மை. அதே அதிஷ்டானம். அதுபோல் க்ஞானம் வந்த பின் அழியக்கூடியதான மித்யா ப்ரபஞ்சத்திற்கு இருப்பிடமாக இருக்கிறாள் அன்னை. (2) மித்யா உலகத்தைத் தாங்கும் ப்ரும்மத்தை ப்ராணனாக உடையவள். (3) மித்யா வடிவமான உலகிலும் இருப்பவள். மண்ணானது பானையாக பரிணமிப்பதுபோல், பரப்ரும்மம் உலகமாக பரிணமித்துள்ளது. ஆதலால் உலகமும் ஸத்யமே. ஆனால், உலகம் வேறு, ஈஶன் வேறு என்ற புத்தியே மித்யை, மாயை. இங்ஙனம் உலகம் வேறு, ஈஶன் வேறு என்ற மித்யா ஜகத்திற்கு தேவியே காரணம் என்று தாந்த்ரிக மதம் கூறும்.

736. **मुक्तिदायै नमः** – முக்திதாயை நம: – மோக்ஷம் அளிப்பவள் – தேவி பக்தர்களுக்கு இவ்வுலகில் வேண்டிய புத்ர, மித்ர, தனம் முதலிய பாக்யமும், மோக்ஷ ஸாம்ராஜ்யமும் ஸுலபமாகக்கிட்டும். மற்றவர்க்கு இஹ ஸுகம் கிடைத்தால் மோக்ஷமில்லை. மோக்ஷம் கிடைத்தால் இஹ ஸுகமில்லை.

737. **मुक्तिरूपिण्यै नमः** — முக்தி ரூபிண்யை நம: — முக்தி ஸ்வரூபமானவள். க்ஞானத்தால் மோக்ஷம்

உண்டாகும் என வேதாந்த நூல்கள் கூறுகின்றன. ஆனல் க்ஞானம் மோக்ஷத்தை உண்டுபண்ணுவதில்லை. க்ஞானம், அக்ஞானம், அவித்யை, மாயை என்பதையே அகற்றுகிறது. அது அகன்றபின் நித்ய ஶுத்தமுக்த ஸ்வரூபனை ஆத்மா அல்லது தேவி ப்ரகாசிக்கிருள். நாமே அது. அதே மோக்ஷானந்தம் எனப்படுகிறது.

738. **लास्य प्रियायै नमः** — லாஸ்ய ப்ரியாயை நம :— நர்த்தனத்தில் ப்ரிய முள்ளவள். பெண்களின் நர்த்தனம் லாஸ்யம் எனப்படும். புருஷர் நர்த்தனம் தாண்டவமாம். தாண்டவன் என்பது புருஷரின் பெயரேயாம்.

739. **लयकर्यै नमः** — லயகர்யை நம: — லயத்தைச் செய்பவள். கிதத்தையும் நர்த்தனத்தையும் தாளத்தால் ஸமமாக்குவது ஸங்கீத விஷயத்தில் லயமாகும். ஸ்வரம் மாதா. பிதா லயம் எனப்படும். (2) மனோலயத்தைச் செய்பவள், பக்தர்கள் மனது தேவியிடம் லயமாகும்படி அருள் புரிபவள். (3) உலகத்தை முடிவில் லயம் செய்பவள்.

740. **लज्जायै नमः** — லஜ்ஜாயை நம: — லஜ்ஜாவடிவமானவள். லஜ்ஜை என்ற வெட்கம் பதிவ்ரதைகளுக்கு மிக விசேஷமான லக்ஷணமாம். அன்னை லஜ்ஜாவடிவமாக இருந்து தனது அம்சமான பெண்மக்கள் அனைவரிடமும் இந்த சிறந்த தேவகுணத்தை அளித்திருக்கிருள். அந்த லஜ்ஜையை விட்டவள் தேவியின் நற்குணத்தைத் துறந்தவளாவாள். ஹ்ரீம் என்ற தேவியின் பீஜாக்ஷரமானது லஜ்ஜாபீஜம் என்றும் கூறப்படும். "லஜ்ஜா பத ஸமா ராத்யா" என்ற த்ரிஶதியிலுள்ள நாமா இப்பொருளையே விளக்குகிறது.

741. **रंभादि वन्दितायै नमः** — ரம்பாதி வந்திதாயை நம: — ரம்பை முதலியவர்களால் வணங்கப்பட்டவள். ரம்பை முதலான அப்ஸரஸ் கணங்கள் ப்ரதிதினம் அன்னையை நமஸ்கரிக்கின்றன.

742. **भवदाव सुधावृष्ट्यै नमः** — பவதாவ ஸுதா வ்ருஷ்ட்யை நம: — ஸம்ஸாரமெனும் காட்டுத் தீய்க்கு

அம்ருத மழையாக இருப்பவள். தியை அணைப்பது மழை. ஸம்ஸாரம் எனும் தீ கேவல மழையால் அணையாது. அன்னையின் கருணை கடாக்ஷ அம்ருதப் பெருக்கால் தான் அகலும். (2) ஸம்ஸார வ்ருக்ஷத்திற்கு அம்ருத மழையாக இருப்பவள். அதாவது, இல்லறத்தில் ஈடுபட்டு அம்பாளை உபாஸிப்பவர்களுக்கு வீடு, வாசல், மனைவி, மக்கள் போன்ற இன்பத்தைக் கொடுப்பவள் என்று பொருள். (3) பவதா - வஸுதா - வ்ருஷ்டி என்று பிரித்து மோக்ஷம், செல்வம் இவைகளை வர்ஷிப்பவள் என்றும் சிலர் கூறுவர். வஸுதா என்ற விடத்தில் தா என்பதை 'த' வர்க்கத்தின் மூன்றாவது வர்ணமாகக் கூற வேண்டும்.

743. **पापारण्य दवानलायै नमः** – பாபாரண்ய தவானலாயை நம: — பாபமெனும் காட்டிற்குக் காட்டுத் தீயாக இருப்பவள். வ்யாதி, ஏழ்மை முதலிய பல துக்கங்களைத் தரும் பாபம் கரடி, புலி, கல், முள் நிறைந்த காடுபோலாகும். பெருங் காட்டை அழிக்க ஸாதாரணத் தீயினால் முடியாது. ப்ரும்மஹத்தி, மாத்ரு கமனம் போன்ற மஹா பாபங்களை அன்னை அகற்றுகிறாள். ஜலத்தில் நின்று 1008 முறை ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீ மஹா மந்த்ரத்தை ஜபித்தால் மஹாபாபங்கள் அகலும்.

744. **दौर्भाग्यतूल वातूलायै नमः** – தௌர்பாக்ய தூல வாதுலாயை நம: — தௌர்பாக்யம் எனும் பஞ்சைப் பறக்கடிக்கும் சுழற்காற்றாக இருப்பவள். பாக்யம் என்றால் புண்ய கர்ம பயனின் அனுபவம். அக்ஞானம் உள்ள வரை, பாப புண்ய கர்மாக்களும் அதன் பலனும் போகாது. க்ஞானம் வந்தால் கர்மா எரிந்துவிடும். அப்பொழுதும் ப்ராப்த கர்மா அழியாது என்பர். அம்பாளது அருள் இருந்தால் ப்ராரப்தமான பாபகர்ம அனுபவமாயுள்ள தௌர்பாக்யமும் அகலும்.

745. **जराध्वान्त रविप्रभायै नमः** — ஜராத்வாந்த ரவி ப்ரபாயை நம: — கிழத்தனம் எனும் இருளை நீக்கும்

ஸௌர்ய காந்தியாக இருப்பவள். அம்பாளை உபாஸிப்ப வர்களுக்கு உடலும் வஜ்ரம்போலிருக்கும். கிழத்தனம் முதலிய துன்பமும் தோன்ருது.

746. **भाग्याब्धि चन्द्रिकायै नमः** — பாக்யாப்தி சந்த்ரி காயை நம: — பாக்யமெனும் கடலுக்கு நிலா போல் இருப்பவள்.

747. **भक्तचित्तकेकिघनाघनायै नमः** — பக்த சித்த கேகிகன கனயை நம: — பக்தரது மனமெனும் மயிலுக்கு மேகமாக இருப்பவள். மயிலுக்கு மேகத்தைக் கண்டால் ஆனந்தம் உண்டாகும். அதனுல் தோகையை விரித்து ஆடும். பக்தர்களது சித்தம் மேகத்தைக் கண்ட மயில் போல் பேரானந்தம் அடைந்து கூத்தாடும்.

748. **रोगपर्वत दंभोलये नमः** — ரோக பர்வத தம் போளயே நம: — நோ யெனும் மலைக்கு வஜ்ராயுதமாக இருப்பவள். நோய்கள் பல உள. ஒவ்வொரு நோயும் ஒரு மலைபோல் நின்று நாம் ஆரோக்ய, ஆனந்தத்தை அனுபவிக்க விடாமல் தடைசெய்கிறது. மலைகளைத் தேவேந்த்ரனது வஜ்ராயுதம் அதன் இறக்கைகளை அறுத் துத் தூள் தூளாக்குவதுபோல், ரோக மலையை அன்னை நாசம் செய்கிருள். அம்பிகை உபாஸகர்களுக்கு நோய் வராது. அன்னையின் ஸ்ரீ சக்ர அபிஷேக ஜலத்தை அருந்துவோருக்கே நோய் பறந்தோடும் என்ருல், பக்த ரைப்பற்றிக் கூறவும் வேண்டுமா ?

749. **मृत्युदारु कुठारिकायै नमः** –ம்ருத்யு தாரு குடாரி காயை நம: — யமன் எனும் மரத்தைப் பிளக்கும் கோடாலியாக இருப்பவள். ம்ருத்யு, யமன், அந்தகன் இவை எல்லாம் மரணத்திற்குக் காரணமான தேவதை யைக் குறிக்கும் சொற்கள். அந்த மரணம் 28 வகை. (காமக்ரோதாதிகள்). "தா" எனில் கடபயாதி கணக் கில் 8. "ரு" எனில் 2. ஆக 28 ம்ருத்யு எனவும் அதை அழிப்பதில் தேவி கோடாரிபோல் இருப்பவள் என்றும் கூறப்படுகிறது.

(742 முதல் 750 வரை உள்ள நாமாக்கள் விதிப் படி ஜபித்தால் அந்தந்த காமனைகளை அளிக்கவல்லவை).

750. **महेश्वर्यै नमः** – மஹேஶ்வர்யை நம: – பெரிய வளாயும் ஈஶ்வரியாகவும் இருப்பவள். 208-வது நாமா மாஹேஶ்வரீ. இது மஹேஶ்வரீ.

751. **महाकाल्यै नमः** – மஹாகாள்யை நம: – மஹா காளியாக இருப்பவள். (2) பெரியவளாயும் காளியா யும் இருப்பவள்.

அஸுர ஸம்ஹாரத்திற்காக மிகப் பயங்கரமான உருவமெடுத்த தேவி காளீ எனப்படுகிருள். எல்லோரை யும் காலத்திற்கு உட்பட்டவராகச் செய்வதால் காளி எனப்படுகிருள். காலனையும் காலத்திற்கு உட்படும்படி செய்வதால் மஹாகாளி என்று அழைக்கப்படுகிருள். (2) உஜ்ஜயினீ க்ஷேத்திரத்தில் மஹாகாளர் என்ற பெயருடனுள்ள ஶிவனது மனைவியாக இருப்பவள். கல்கத்தாவில் காளிகோவில் மிக ப்ரஸித்தமானது.

752. **महाग्रासायै नमः** — மஹா க்ராஸாயை நம: — பெரிய கபளம் உள்ளவள். க்ராஸம் அல்லது கபளம் என்பது நாம் உண்பதற்காக வாய் கொள்ளும் அளவிற் குக் கையால் எடுக்கும் அன்னமாம். அம்பாள் ப்ரளய காலத்தில் தன்னிடத்தில் ஸகல ப்ரபஞ்சத்தையும் தனக் குள் லயம் செய்துகொள்வது, அன்னத்தைப் புஜிப்பது போல் கல்பனையாகக் கூறப்பட்டது. நாம் பல கபளங் களால் வயிற்றை நிரப்புகிறோம். நம் கபளம் மிகச் சிறியது. அம்பாள் ஸகல ப்ரபஞ்சத்தையும் பெரிய கபளமாகக் கொண்டு புஜிக்கிருள். ஆதலால் மஹா க்ராஸா எனப்படுகிருள். இந்த விஷயம் "**ப்ரம்ம ச க்ஷத் ரஞ்ச**" என்ற உபநிஷத்தாலும், "**அத்தா சராசர க்ரஹ ணுத்**" என்ற ப்ரும்ம ஸூத்ரத்தாலும் வர்ணிக்கப்படு கிறது.

753. **महाशनायै नमः** – மஹாஶனாயை நம: – அதிக மான ஆஹாரமுள்ளவள். முன்னதை விவரிக்கின்றது இந்த நாமா. அன்னை பஹிர்முகமாக இருந்தால் உல கெலாம் படைக்கப்பட்டுத் தன் கர்ம வினையை அனுப விக்கின்றது. தேவி அந்தர்முகமாகிவிட்டால் ப்ரபஞ்ச மெலாம் அன்னையிடம் லயமாகின்றது.

754, अपर्णायै नमः — அபர்ணாயை நம: — கடனில்லாதவள். நாம் கொடுக்கவேண்டிய பாக்கி, கடன் எனப்படும். ரிஷிகளை உத்தேசித்து அத்யயனம் செய்தல் வேண்டும். யக்ஞம் செய்தால்தான் தேவ ரிணம் அகலும். ஸத்புத்ரன் பிறந்தால்தான் பித்ருரிணம் நீங்கும். இவை அவஶ்யம் கொடுக்க வேண்டியதான ஶாஸ்த்ர ஸம்மதமான கடன்களாம். இவை ஒன்றும் தேவி செய்ய வேண்டிய அவஶ்யமில்லை. லௌகிகமாக சிலர் கடன் வாங்குவதுண்டல்லவா? அந்த மாதிரியான கடன்பற்றித் தேவியிடம் பேசவேண்டுமா? (2) தன் நிலையிலிருந்து விழாதவள். (3) இலையைக்கூட புஜிக்காமல் தவம் செய்தவள்.

755. चण्डिकायै नमः — சண்டிகாயை நம: — கோபமுள்ளவள். தெய்வ பக்தி இல்லாதவரிடமும் கொடிய ராக்ஷஸ குணம் உள்ளவரிடமும் தேவிக்குக் கோபம் உண்டாகும். (2) ஏழு வயது கன்யகையாக இருப்பவள்.

756. चण्डमुण्डासुर निषूदिन्यै नमः – சண்டமுண்டாஸுர நிஷூதின்யை நம: — சண்டன் முண்டன் என்ற அஸுரர்களைக் கொன்றவள். அன்னை காளியாகத் தோன்றி இவர்களைக் கொன்ற சரிதம் தேவீ பாகவதம் 'மார்க்கண்டேய புராணம் முதலியவைகளில் காணலாம். (2) சர்ம முண்டா என்ற பெயர் உண்டு என்று வராஹ புராணம் கூறுகிறது. ருரு எனும் அரக்கன் தலையையும் தோலையும் அப்புறப்படுத்தியவள் என்று இதற்குப் பொருள். (3) உக்ரமான அஸுரர்களைக் கொன்று அவர்களது தலைகளை மாலையாக அணிந்தவள்.

757. क्षराक्षरात्मिकायै नमः — க்ஷராக்ஷராத்மிகாயை நம: — அழிவுள்ளதும், அழிவில்லாததுமான பொருள் வடிவமாக இருப்பவள். ஒவ்வொரு பொருளிலும் அழியக்கூடிய ஸ்தூல பௌதிக உடலும் அதற்குள் அழியாத சைதன்ய ரூபமும் இருக்கின்றன. அந்த வடிவமாக உள்ளவள் அன்னை. (2) அளவில்லாத அக்ஷரவடிவமானவள்.

— 758. **सर्वलोकेश्यै नमः** – ஸர்வ லோகேஶ்யை நம: ஸர்வ லோகங்களுக்கும் ஈஶ்வரீ. லோகம் என்பது 14 லோகங்களும் ஆங்குள்ள ப்ராணிகளுமாம். அவைகளுக்கு ஈஶ்வரீ. அவைகளைப் படைத்துப் பரிபாலித்து உபஸம்ஹாரம் செய்வதால் அன்னை அங்ஙனம் அழைக்கப்படுகிறாள்.

759. **विश्वधारिण्यै नमः** — விஶ்வதாரிண்யை நம :— ஸகலத்தையும் தாங்குகின்றவள். "உலகைப் படைத்து அதனுள் புகுந்தது ப்ரும்மம்" என்றபடி, படைக்கப்பட்ட பஞ்ச பூதங்களாலாகிய ஸ்தூல உடல் அழியாதபடியும், அது ஸகல கார்யங்களைச் செய்யவும் அதைத் தரிக்க வேண்டியது தேவியின் கடமையாகிவிட்டது.

760. **त्रिवर्ग धात्र्यै नमः** – த்ரிவர்க்க தாத்ர்யை நம: — தர்ம அர்த்த காமங்களைத் தருபவள். இம் மூன்றும் த்ரிவர்க்கம் என்றும், மோக்ஷம் இவ் வர்க்கத்தைக் கடந்ததால் அபவர்க்கம் என்றும் அழைக்கப்படும்.

761. **सुभगायै नमः** — ஸுபகாயை நம: — அழகான லக்ஷ்மீ முதலியவளுள்ளவள். 'பக' என்ற பதத்திற்கு ஸ்ரீ, காமம், மாஹாத்ம்யம், வீர்யம், யத்னம், கீர்த்தி முதலியவைகள் பொருள். தேவியிடம் உள்ள இவை மிக அழகாக இருக்கின்றன. (2) ஸூர்யனுக்குக் காந்தியைத் தருபவள். (3) ஸௌபாக்யம் உள்ளவள். பதிவ்ரதா ஸ்த்ரீகள் சரமான நடமாடும் ஸௌபாக்யங்களாம். கரும்பு, அஸ்வத்த வ்ருக்ஷம், முளையுடனிருக்கும் ஜீரகம், கொத்தமல்லி, பசும்பால், மஞ்சள் வஸ்த்ரம், புஷ்பம், உப்பு ஆகியவைகள் அசரங்களான ஸௌபாக்யங்களாம். இவ்விரண்டு வடிவமாகவும் உள்ளவள் அன்னை. (4) 5-வயது கன்யகையாக இருப்பவள்.

762. **त्र्यंबकायै नमः** – த்ர்யம்பகாயை நம: — மூன்று கண்கள் உள்ளவள். ஈஶ்வரன் முக்கண்ணன். அவரது ஸம்பந்தம் பெற்ற அன்னை விநாயகர், ஸ்கந்தர், நரஸிம்மன் ஆகியவர்களும் முக்கண்ணர்களே ஆவர். சந்த்ரன்,

ஸூர்யன், அக்னி ஆகிய இவர்களே மூன்று கண்ணாக அமைந்துளர். (2) மும்மூர்த்திகளுக்குத் தாயாக இருப்பவள்.

763. **त्रिगुणात्मिकायै नमः** – த்ரிகுணாத்மிகாயை நம:– மூன்று குண வடிவமாக இருப்பவள். ஸத்வம், ரஜஸ், தமஸ் இவைகளின் ஸமமான சேர்க்கையே ப்ரக்ருதி என அழைக்கப்படுகிறது. அப்படியுள்ளவளும் அன்னையே. தனி ரஜோ குணத்தோடு துர்க்கையாக இருப்பவளும், தமோ குணத்தால் காளியாகவும், ஸத்வ குணத்தால் பார்வதி ரூபமாகவும் இருப்பவள்.

764. **स्वर्गापवर्गदायै नमः** — ஸ்வர்க்கா பவர்க்க தாயை நம: — ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் தருபவள். அழிவுள்ளது ஸ்வர்க்க ஸுகம். ஶாஶ்வத ஸுகமானது மோக்ஷம்.

765. **शुद्धायै नमः** — ஶுத்தாயை நம: — அழுக்கில்லாதவள். ஶுத்தமானவள். அழுக்கு என்பது உடலில் தோன்றுவது போல், மனதிலும் ஜீவனிடமும் உண்டு. மனதிலுள்ள மலம் காமக்ரோதாதிகள். ஜீவனது மலம் மாயா மலம். உடல் மலம் அழுக்கு. அந்த மூவகையான மலமும் இல்லாமல் சுத்தமாக இருப்பவள் அன்னை.

766. **जपापुष्पनिभाकृतये नमः** — ஜபாபுஷ்ப நிபாக்ருதயே நம: — செம்பரத்தம் புஷ்பத்திற்கு ஸமமான ரூபமுள்ளவள். இங்கு அஜபா, புஷ்பாக்ருதி: என தனிப் பதமாகவும் பிரித்து, அஜபா காயத்ரீ வடிவமானவள். புஷ்பம் போன்ற உருவமுள்ளவள் என்று கூறுவர் சில உரையாளர். அவர் மதத்தில், பின்வரும் தரா, தரஸுதா என்ற இரு நாமாக்களை ஒரே நாமாவாகச் சேர்க்க வேண்டும்.

767. **ओजोवत्यै नमः** — ஓஜோ வத்யை நம: — ஓஜஸ்ஸை உடையவள். நமது உடலில் உள்ள ஸகல தாதுக்களுக்கும் இந்த்ரியங்களுக்கும் ஒளியைத் தந்து,

அதது தன்தன் வேலையைச் செய்யும்படி செய்யும் ஶக்திக்கே ஓஜஸ் என்று பெயர். அது அன்னையினுடைய அம்சமாம்.

768. **द्युतिधरायै नमः** — த்யுதிதராயை நம: — காந்தியைத் தரிப்பவள். காந்தி என்பது உடலுக்கு மேலும் ப்ரகாசமாக விளங்கும் அம்சமாம். அதைத் தரிப்பவள் தேவி.

769. **यज्ञरूपायै नमः** — யக்ஞ ரூபாயை நம: — யக்ஞ வடிவமானவள். தேவதைகளை நாடி விதிப்படி அக்னியில் செய்யும் த்யாகமே யாகம் அல்லது யக்ஞம் எனப்படும். இது மூன்று வேதங்களாலும் பூர்வ பாகத்தில் விஸ்தாரமாக வர்ணிக்கப்படுகிறது. இதில் சில (ஸோம யாகம் முதலியன) நித்யமாம். அதாவது 48 ஸம்ஸ்காரங்களில் சேர்ந்தவை. அவஶ்யம் ஒவ்வொருவரும் செய்தே ஆக வேண்டியவை. மஹா யக்ஞம் எனும் வைஸ்வ தேவத்தாலும், இந்த யக்ஞங்களாலும் மனிதனது உடல் ப்ராம்மண உடலாகச் செய்யத்தக்கதென தர்ம சாஸ்த்ரம் கூறுகிறது. நமது இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதற்காக ஏற்பட்ட யக்ஞங்கள் காம்யம் எனப்படும். இதே யக்ஞம், த்ரவ்ய யக்ஞம், க்ஞான யக்ஞமென்றும், பஹிர் முக யக்ஞம், அந்தர் முக யக்ஞம் என்றும் இருவகையாக பிரிக்கப்படும். அத்தகைய ஸர்வ யக்ஞ ரூபியாக இருப்பவள் அன்னை. இந்த நாம விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலும், சிவ ஸஹஸ்ரநாமத்திலும், பெரும்பாலும் எல்லா ஸஹஸ்ர நாமங்களிலும் கூறப்படுகிறது.

770. **प्रिय व्रतायै नमः** — ப்ரிய வ்ரதாயை நம: — வ்ரதங்களில் ப்ரிய முள்ளவள். தன்னை நாடியோ மற்ற தேவர்களை நாடியோ வ்ரதம் செய்தால் அது அன்னைக்கு அளவுகடந்த ஸந்தோஷத்தைத் தரும்.

771. **दुराराध्यायै नमः** — துராராத்யாயை நம: — ஶ்ரமப்பட்டு ஆராதிக்கத்தக்கவள். அல்ப புத்தி, அறிவில்லாதவர்; சபல சித்தர் முதலியவர்களால் அன்னையை ஆராதிக்க முடியாது. தேவி பரப்ரும்ம மானதால்,

வேதாந்தத்திற்கு வேண்டிய ஸாதனம் உள்ளவரால் ஆராதிக்கத் தக்கவள். ஆனால், ஸுலபா, ஸுலபாராத்யா என்றவைகளுக்கு இது மாறாக இருப்பதாகத் தோன்றும். இந்த்ரியங்களைப் போனவழியில் விடாமல் சிறிது அடக்குபவர் போன்றவர் ஸுலபமாக ஆராதிக்கலாம் என்று பொருள்.

772. **दुराधर्षायै नमः** – துராதர்ஷாயை நம: –ஜயிக்க முடியாதவள். தேவியின் ஸ்வரூபம் சில ஸமயம் கிட்டே சென்று குழந்தை தாயினிடம் விளையாடுவது போல் நெருங்கத்தக்கதாகவும், சில ஸமயம் சத்ருவோ, பக்தரோ அருகே அணுகமுடியாதபடி மிக உக்ரமாகவும் இருக்கும். அன்னையை எவராலும் அசைக்க முடியாது. அவளை வெல்லும் பொருள் உலகில் வேறு இல்லை என்பதை மறுக்க முடியாது. ஸுலபமாக வசப்படுத்தவும் முடியாது.

773. **पाटलीकुसुम प्रियायै नमः** — பாடலீ குஸும ப்ரியாயை நம:—பாடலீ புஷ்பத்தில் விருப்பமுள்ளவள். இதைப் பாதிரி புஷ்பம் என்றும் கூறுவர். அந்தபுஷ்பம் தேவிக்கு மிக ப்ரியமானது. பாடல புஷ்பத்தில் தேவியும், லக்ஷ்மிக்கு இருப்பிடமான பில்வமரத்தில் சிவனும் இருப்பதாக பாத்ம புராணம் கூறுகிறது.

774. **महत्यै नमः** — மஹத்யை நம: — மிகப்பெரியவள். உலகில் மலை, கடல், ஆகாயம், ப்ரும்மாண்டம் முதலியவை மிகப் பெரியவைகள். அவைகள் எல்லாவற்றையும் படைத்ததால், அம்பிகையே அவைகளைவிட மிக மிகப் பெரியவள். அவளுக்குமேல் பெரிய வஸ்து எங்குமில்லை. (2) மஹதி எனும் நாரதரின் வீணையாக இருப்பவள்.

775. **मेरुनिलयायै नमः** — மேரு நிலயாயை நம: — மேருவை இருப்பிடமாகக் கொண்டவள். மேரு என்பது ஸ்வர்ணமலை. இது வெள்ளி மலையான கைலாஸத்திற்கு மேலுள்ளது. இதற்கு முக்கோண வடிவமாக மூன்று சிகரங்களும் இடையில் ஒரு சிகரமும் உண்டு. மூன்று சிகரங்களில் மும்மூர்த்திகள் வஸிக்கின்றனர். நடு நாயக

மான சிகரம் 400 யோஜனை தூரம் உயரமுள்ளது. அங்குதான் ஸ்ரீநகரமும் சிந்தாமணி க்ருஹமும் இருக்கின்றது. அதே அன்னையின் வாஸஸ்தலம்.

ஸ்ரீலலிதா பரமேஸ்வரி பண்டாஸுரனைக் கொன்ற பின், அவள் வஸிப்பதற்காக மயனால் 16 மேரு மலைகள் படைக்கப்பட்டன. அதில் 9 மலைகளிலும், 7 கடலிலும் இருக்கின்றன. இவைகள் காமேஶ்வரீ, பகமாலினீ முதலிய 16 ஷோடஶி நித்யைகளின் ஸ்வரூபமாம் அந்நப் பெயரே அவைகளுக்கு வைக்கப்பட்டிருக்கிறது. ஆங்குள்ள ஸ்ரீ சக்ரராஜம், பூப்ரஸ்தரம், கைலாஸ ப்ரஸ்தரம், (ஊர்த்வ ப்ரஸ்தரம், அர்த்த மேரு ப்ரஸ்தரம்), மேரு ப்ரஸ்தரம் என்று மூன்று வகை. (1) வெள்ளி, தங்கம் முதலிய தகடுகளில் கோடு வடிவமாக இருப்பது பூப்ரஸ்தரம். (2) இக்கோடுகள் பள்ளமாக இல்லாமல் மேலே மேலே கனமாகச் செய்யப்பட்டிருப்பது கைலாஸப்ரஸ்தரம் எனப்படும். (3) உயரமாகவே ரதம் போல் இருப்பது மேரு ப்ரஸ்தரம் எனப்படும். அந்தர்முகமாக பாவனை செய்யும்போது இப்பெயர் பொருத்தமாக அமைக்கப்பட்டது. வஶினீ முதலிய எட்டு ஶக்திகளோடு இருப்பதாக, பாவனை செய்யும்போது பூப்ரஸ்தரம். மாத்ருகா அக்ஷரங்களுடன் இருப்பதாகப் பாவனை செய்யும் போது கைலாஸ ப்ரஸ்தரமாம். 16 நித்யா ஶக்திகளுடன் இருப்பதாக த்யானம் செய்யும்போது மேரு ப்ரஸ்தரமாம்.

776. **मन्दारकुसुम प्रियायै नमः** — மந்தார குஸும ப்ரியாயை நம:— மந்தார மலரில் ப்ரியமுள்ளவள். தேவலோகத்தில் மந்தாரம், பாரிஜாதம், ஸந்தானம், கல்பவ்ருக்ஷம், ஹரி சந்தனம் என்ற ஐந்து மரங்கள் இருக்கின்றன. அவை நமது இஷ்டத்தைப் பூர்த்தி செய்பவை. அவைகளில் முதலாவதான மந்தார மரத்தின் புஷ்பத்தில் அன்னைக்கு விருப்பமுண்டாம். மந்தாரப்பூ, பவழமல்லி, அல்லது பாரிஜாதம் என்ற இருவகை புஷ்பங்களைக் காண்கின்றோம், ஆனால் இவையல்ல அவை. வெள்ளை எருக்கம் புஷ்பமும் சில விடத்தில் மந்தாரம் எனப்படுகிறது.

777. वीराराध्यायै नमः — வீராராத்யாயை நம :— க்ஞானிகளால் ஆராதிக்கத்தக்கவள். இந்த்ரியங்களுடனும், விஷயங்களுடனும் முக்குணங்களுடனும் இவைகளுக்கு மூலஸ்தானமான அக்ஞானத்துடனும் போர் புரிந்து வெற்றி பெற்ற வீரர் க்ஞானிகளே. க்ஞான வடிவமான தேவி க்ஞானிகளாலேயே ஆராதிக்கத்தக்கவள்.

778. विराड् रूपायै नमः — விராட்ரூபாயை நம :— விராட் வடிவமானவள். ஸகல ஜகத்திலுள்ள ப்ராணிகளது ஸ்தூல சரீர ஸமஷ்டிக்கு அபிமானி தேவதையாக உள்ளவர் விராட் எனப்படுவர். அந்த வடிவமாகவும் இருக்கிருள் தேவி. விராட் புருஷனது ஸ்வரூபம் வேத புராணங்களில் விஸ்தாரமாகக் கூறப்படுகிறது.

779. विरजायै नमः— விரஜாயை நம:— ரஜஸ் இல்லாதவள். ரஜஸ் என்பது ரஜோகுணம், பாபம், அழுக்கு முதலிய பல பொருள்கள் உள்ளது. எந்த வகையான ரஜஸ்ஸும் இல்லாதவள்.

780. विश्वतो मुख्यै नमः— விஸ்வதோ முக்யை நம :— எங்கும் முகமுள்ளவள். பக்தன் எந்த திக்கில் எந்த தேவதா ரூபமாக உபாஸித்தாலும் அந்த முகமாகவே வந்து அருள் புரிபவள் அம்பிகை.

781. प्रत्यग्रूपायै नमः— ப்ரத்யக் ரூபாயை நம:— உள் நோக்கினவர்க்கு ரூபத்தைக் காட்டுபவள். நமது உடல் பிண்டம் எனப்படும். உலகம் அண்டமாம். இவ்விரண்டிலும் நமது கண் வெளி நோக்கியே செல்கிறது. அதாவது, உடலே, வெளி உலகிலுள்ள மனைவி மக்கள், காடு மலை இவைகளைக் காண்கின்றது. அதனுள்ளே உள்ள ஜீவன் அல்லது ஶக்தியைக் காண்பதில்லை. வெளிமுகம் பார்ப்பது பராக்த்ருஷ்டி அதையே "பலாக்" பார்க்கிறோம் என்று வேடிக்கை பார்ப்பவரைக் கூறுவோம். அவைகளைவிட்டு உள்ளே கடைசியாகப் பார்த்தால், கடவுள் ஸ்வரூபம் விளங்கும். அந்த ஸ்வரூபமாக இருப்பவள் பரமேஶ்வரி.

782. **पराकाशायै नमः**— பராகாஶாயை நம :— சிறந்த ஆகாஶ ரூபமானவள். அம்பிகை, தன்னுல் படைக்கப்பட்ட ஆகாஶத்தை விடச் சிறந்த உயர்ந்த அழிவற்ற ஆகாஶமாக இருப்பவள் பராஶக்தி. இந்த ஆகாஶம் பரமாத்ம ஸ்வரூபம் என சாந்தோக்ய உபனிஷத்தும், "ஆகாஶ: தல்லிங்காத்" என்ற ப்ரும்ம ஸூத்ரமும் கூறுகிறது. "பராகாஶத்தில் ப்ரதிஷ்டிதனுக இருக்கிறது" என்ற ஶ்ருதி இருவகையான பராகாஶத்தையும் குறிக்கின்றது. (1) ஸ்தூலமான ப்ரும்மாண்டாகாஶம், மேருமலையின் தென்புறத்தில் உள்ள ஜம்பூ, ப்லக்ஷ, ஶால்மலி, குஶ, க்ரௌஞ்ச, ஶாக, புஷ்கர என்ற ஏழு த்வீபங்களும், அவைகளினிடையே உள்ள உப்பு, கரும்புச்சாறு, ஸுரா, நெய், மது, பால், சுத்தஜல ஸமுத்ரங்களும், அதன் தெற்கே பராகாஶம் என்ற பெயருள்ளதும் இருக்கின்றது. அந்த பராகாஶமாகவும் இருக்கிருள் அன்னை. (2) பிண்டாகாஶம் அல்லது ஸூக்ஷ்மாகாஶம் எனப்படுவது ஹ்ருதயத்திலுள்ள ஆகாஶம். ஆங்குள்ள சந்த்ர ஸூர்யர்களுக்கிடையே இருக்கும் அக்னிக்கு மேலே பராகாஶம் இருக்கின்றது. அன்றியும், நெற்றிக்கு மேல் உள்ள கபாலங்களின் உச்சியில் இருக்கும் இடம் த்வாதஶாந்தம் என்றும், ஆங்குள்ள ஶிரஸ்ஸிற்கு மேலே இரண்டு அங்குலம் வரை உள்ள இடமே பராகாஶம் என்றும், பிண்டமான ஶரீரத்தில் இருவகையாக பராகாஶம் வர்ணிக்கப்படுகிறது. இத்தகைய பராகாஶமாகவும் இருப்பவள் அன்னை. 2. பராகமெனும் தபஸ்ஸால் அடையத்தக்கவள். 3. பராகம் எனும் தவத்தின் பலனை அனுபவிப்பவள். 4. பாபங்களை நாஶம் செய்பவள்.

783. **प्राणदायै नमः**— ப்ராணதாயை நம :— ப்ராணனைக் கொடுப்பவள். ப்ராணிகளுக்குப் பஞ்ச ப்ராணன்களையும், பஞ்ச கர்மேந்த்ரிய, பஞ்ச க்ஞானேந்த்ரியங்களையும் அவைகளுக்கு ப்ரகாஶத்தையும் தருபவள் தேவி.

784. **प्राणरूपिण्यै नमः**:— ப்ராண ரூபிண்யை நம:— ப்ராண ரூபமாக இருப்பவள். ப்ராண என்ற சொல் முன் கூறிய பஞ்ச ப்ராணுதிகளை மாத்திரமல்லாமல், பரப்ரும்

மத்தையும் கூறும். தேவியே பரமாத்ம ஸ்வரூபமாக இருப்பதால், காமேச்வரீ, பரப்ரும்ம ரூபிணி என்பவை பொருத்தமான பொருள் உள்ளவைகளாகும்.

785. **मार्तण्ड भैरवाराध्यायै नमः**:— மார்த்தாண்ட பைரவாராத்யாயை நம:— மார்த்தாண்ட பைரவரால் ஆராதிக்கப்பட்டவள். மார்த்தாண்ட பைரவர் ஸ்ரீநகரத்தில் 22-23 ப்ராகாரங்களுக்கிடையிலிருந்து தேவியைப் பூஜிக்கிறார். இவர் தேவீ பக்தர்களை அநுக்ரஹிப்பதுடன் பக்தரிடம் த்வேஷம் கொள்பவரைக் குருடனாக்கி விடுகிறார். இந்த பைரவரே மணிமல்லன் என்ற அஸுரனை ஸம்ஹரித்ததால் மல்லாரி என அழைக்கப்படுவர். மஹாராஷ்ட்ர தேசத்தில் மல்லாரி பூஜை, பூஜா தந்த்ரம் முதலியன ப்ரஸித்தமாக உளது. அதைத் தழுவியே சிலர் மல்லாரி எனப் பெயர் வைத்திருப்பதையும் காண்கிறோம். (2) ஸூர்யனாலும், பைரவராலும் பூஜிக்கப்படுபவள். (3) ஸூர்யனாலும் பயமடைந்தவராலும் பூஜிக்கப்பட்டவள்.

786. **मन्त्रिणीन्यस्त राज्यधुरे नमः**:— மந்த்ரிணீந்யஸ்த ராஜ்யதுரே நம:— மந்த்ரிணியினிடம் ராஜ்ய பாரத்தை வைத்தவள். மந்த்ரிணீ, தண்டினீ, என்ற இருவர்களைப் பண்டாஸுர வதத்திற்காக தேவி படைத்தாள். அதில், மந்த்ரிணியிடம் ராஜ்யபாரத்தை விட்டு, அதற்கு அறிகுறியாக முத்ரா மோதிரத்தையும் அளித்தாள். லலிதோபாக்யானத்தில் இது விவரமாக வர்ணிக்கப்படுகிறது. (2) தன்னை உபாஸிப்பவர்களுக்கு மோக்ஷம் அளிப்பவள்.

787. **त्रिपुरेश्यै नमः**:—த்ரிபுரேச்யை நம:— த்ரிபுரேசியாக இருப்பவள். ஸ்ரீ சக்ரத்திலுள்ள ஸர்வாசா பரிபூரக சக்ரத்திற்கு அதிஷ்டான தேவதை த்ரிபுரேசீ.

788. **जयत्सेनायै नमः**:— ஜயத்ஸேனாயை நம:— சத்ருவை ஜயிக்கும் ஸேனைகளை உடையவள். (2) ஜயத்ஸேனன் என்ற பக்தனது ரூபமாக இருப்பவள்.

789. **निस्त्रैगुण्यायै नमः**:— நிஸ்த்ரைகுண்யாயை நம:— மூன்று குணங்களைக் கடந்தவள்.

790. **परापरायै नमः**— பராபராயை நம:—பர அபர ரூபமானவள். அதாவது பரப்ரும்ம ரூபிணீ. அன்யன், நான், சத்ரு, மித்ரன், தூரத்தில் உள்ளது, ஸமீபத்தில் உள்ளது, கலப்புள்ளது, சுத்தமானது, பராகாஶமானது, அபராகாஶமானது, பராவாக், அபராவாக் எனப் பராபரங்களுக்குப் பல பொருள்கள் உண்டு. அத்தகைய எல்லாமாக இருப்பது ப்ரும்மம். ப்ரும்ம வடிவமானவள் பராஶக்தி.

791. **सत्यज्ञानानन्दरूपायै नमः** — ஸத்யக்ஞானனந்த ரூபாயை நம:— ஸத்ய க்ஞான ஆனந்த ரூபமானவள். ஸச்சிதானந்த ஸ்வரூபிணீ. ஸதி அக்ஞ அஜ்ஞனந்த ரூபா. அதாவது ஸத்ய வஸ்துவான தேவியை அறியாதவர்க்கு ஆனந்தமில்லாத துக்கத்தைத் தருபவள் என்றும் சிலர் கூறுவர். இத்தகைய பொருளை, க்லிஷ்ட கல்பனை (அதாவது, பதத்தைப் பல வகையாகப் பிரித்துக் கஷ்டப்பட்டுப் பொருள் கூறுவது என்று சிலர் கூறுவர்)

792. **सामरस्य परायणायै नमः** — ஸாமரஸ்ய பராயணையை நம: — ஸமரஸத் தன்மையையே சிறந்த வழியாகக் கொண்டவள். ஒன்று அதிகம் ஒன்று குறைவு என்பதில்லாமல் ஶக்தியும் ஶிவமும் ஸமமே என்று நினைத்துப் பூஜிப்போருக்குச் சிறந்த வழிகாட்டியாக இருப்பவள். (2) ஸ – அமரஸ்ய என்று பிரித்து, தேவலோகத்திற்குச் சிறந்த துணையாக இருப்பவள் என்றும், (3) ஸாம ரஸ்ய என்று பிரித்து ஸாமகான ப்ரியை என்றும் கூறுவர் சிலர்.

793. **कपर्दिन्यै नमः** — கபர்தின்யை நம: — கபர்தி எனும் சிவனது பத்னியாக இருப்பவள். சிவனுடைய ஜடைக்குக் "கபர்த" என்று பெயர். (2) விஶேஷமாகக் கொண்டாடப்பட்டவள். (3) சகலண்டமென்ற க்ஷேத்ரத்தில் கபர்தி என்ற பெயருடன் இருக்கும் சிவனது பத்னி.

794. **कलामालायै नमः** — கலாமாலாயை நம :— கலைகளின் மாலையாக இருப்பவள். (2) கலைகளையே

மாலையாகத் தரித்திருப்பவள். (3) கலையையும் ஶோபையையும் உடையவள்.

795. **कामदुघे नमः** — காமதுகே நம: — காமத்தைக் கறப்பவள். பக்தர்களுடைய ஸகல காமத்தையும் பூர்த்தி செய்பவள். (2) ஸ்வர்க்கத்திலுள்ள காமதேனு ரூபமாக இருப்பவள்.

796. **कामरूपिण्यै नमः** — காமரூபிண்யை நம: — காமேஶ்வரருடைய ரூபமாக இருப்பவள். (2) இஷ்டமான ரூபமுள்ளவள்.

797 **कलानिधये नमः** - கலாநிதியே நம: – கலைகளுக்குப் பொக்கிஷம் போல் இருப்பவள். (2) 16 கலையுள்ள ஆத்மாவாக இருப்பவள். (3) சந்த்ரகலை வடிவமானவள். (4) ஸகல கர்மாக்களுக்கும் நிதியாக இருப்பவள்.

798. **काव्यकलायै नमः** — காவ்ய கலாயை நம: — காவ்ய கலா வடிவமானவள். காவ்யம், நாடகம், பாணம், டிமம், ப்ரஹஸனம் முதலிய பல பிரிவுகளுள்ளது. இவைகளை இயற்றும் சக்தி ஶப்தப்ரும்ம மயமான பராஶக்தியினிடமிருந்தே உண்டாகிறது. காளிதாஸன், மூகன் போன்ற மஹா கவிகள் அன்னையின் அருளாலேயே கவிகளாகி, காவ்யங்களை இயற்றினர்கள். (2) கவி எனும் சுக்ராசார்யரிடமுள்ள ம்ருதஸஞ்ஜீவினீ என்ற கலையாக இருப்பவள்.

799. **रसज्ञायै नमः** — ரஸக்ஞாயை நம : — ஶ்ருங்காரம் முதலிய ரஸங்களை அறிந்தவள். (நவரஸங்கள்:— ஶ்ருங்கார, வீர, கருண, அத்புத, ஹாஸ்ய, பயானக, பீபத்ஸ, ரௌத்ர, ஶாந்தி). (2) நாக்கெனும் ரஸத்தை அறியும் ரஸன ரூபமாக இருப்பவள், (ஷட்ரஸங்கள்:— மதுரம், உப்பு, புளிப்பு, கசப்பு, துவர்ப்பு, காரம்). (3) ரஸமெனும் ப்ரும்ம ஸ்வரூபத்தை அறிந்தவள்.

800. **रसशेवधये नमः** — ரஸ ஶேவதயே நம: — ரஸத்திற்கு இருப்பிடமானவள். ஆனந்த ரஸ வடிவமான

ப்ரும்மமானவள். ப்ரும்ம ரஸத்திற்கே இருப்பிடமானவள்.

801. पुष्ट्यै नमः — புஷ்டாயை நம: — புஷ்டியாக இருப்பவள். பல தத்துவங்களைத் தனது உடலாகப் பெற்றதால் "புஷ்டா" என்று தேவிக்குப் பெயர் உண்டானது. (2) நற்குணங்களால், ப்ரும்மானந்தத்தால், ப்ராம்மணோத்தமர்களால் போஷிக்கப்பட்டவள்.

802. पुरातनायै नमः – புராதனாயை நம: – ரொம்ப நாளாக இருப்பவள். ஸகல வஸ்துக்களும் உண்டாவதற்கு முன்பேயே வெகுகாலமாக உள்ளவள்.

803. पूज्यायै नमः — பூஜ்யாயை நம: — பூஜிக்கத் தக்கவள். நன்மையை விரும்பும் நரராலும், ஸுரராலும், மற்றெவராலும் பூஜிக்கத்தக்கவள் அன்னையேயாவள்.

804. पुष्करायै नमः — புஷ்கராயை நம: — புஷ்கரம் எனும் புண்யதிர்த்த ரூபமாக இருப்பவள். (2) புஷ்டியைச்செய்பவள். (3) எங்கும் நிறைந்திருப்பவள். (4) தாமரை வடிவமானவள்.

805. पुष्करेक्षणायै नमः – புஷ்கரேக்ஷணாயை நம: – தாமரை போன்ற கண்ணுள்ளவள். (2) பூமி, ஜலம், ஆகாயம், முதலிய விடங்களில் சலனமின்றி இருப்பவள். (3) புஷ்கரம் எனும் வடரூபியான பகவானிடம் கண்ணுள்ளவள்.

806. परस्मै ज्योतिषे नमः – பரஸ்மை ஜ்யோதிஷே நம: — உயர்ந்த ஜ்யோதி ஸ்வரூபமாக உள்ளவள். (2) பரஞ்ஜ்யோதிஸ் எனும் ஶிவ அஷ்டாக்ஷரீ ரூபமாக இருப்பவள்.

807. परस्मै धाम्ने नमः – பரஸ்மை தாம்னே நம: – சிறந்த இடமாக இருப்பவள். 'தாம' எனில் இருப்பிடம், ப்ரகாசம் என்று பொருள். தேவி சிறந்த ப்ரகாசமாகவும் உத்தமமான தேஜஸ்ஸாகவும் இருக்கிறாள்.

808. **परमाणवे नमः** — பரமாணவே நம: — பரமாணுவாக இருப்பவள். அணுவிலும் அணு என்று ஶ்ருதி கூறுவதால் தேவி பரமாணு எனப்படுகிறாள். ஸூர்ய கிரணம் ஒரு ஜன்னல் வழியாக வரும்போது அதில் அநேக வர்ணங்களுடன் பல அணுக்கள் காணப்படும். நம் கண்ணில் காணப்படுவது ஆறு பரமாணுக்கள் கொண்டதாகும். பரமாணு கண்ணுக்குப் புலப்படாது. (2) சிறந்த மந்த்ர ரூபமானவள்.

809. **परात्परायै नमः** — பராத்பராயை நம: — சிறந்ததில் சிறந்ததாக இருப்பவள். மும்மூர்த்திகளைவிடச் சிறந்தவள் என்பது பொருள்.

810. **पाशहस्तायै नमः** — பாஶஹஸ்தாயை நம: — பாஶத்தைக் கையில் உடையவள். "ராக ஸ்வரூப பாஶாட்யா" என்ற நாமா, ஆசை வடிவமான பாஶத்தை உடையவள் என்றது. இடது புறத்திலுள்ள இரு கரங்களில் கீழ்கையில் பாஶத்தைத் தரித்திருக்கிறாள்.

811. **पाशहन्त्र्यै नमः** — பாஶஹந்த்ர்யை நம: — பாஶங்களைப் போக்குபவள். அவித்யாபாஶம், ஆஶா பாஶம் இவைகளை அழித்துப் பக்தருக்கு நன்மை புரிபவள். (2) நாகபாஶத்தை அறுத்து அநிருத்தனைக் காத்தவள். பாணாஸுரனது பெண் உஷை, தான் ஸ்வப்னத்தில் கண்ட அநிருத்தனை, சித்ரலேகை மூலமாகத் தூக்கி வந்து தன் அந்தப்புரத்தில் ஏகாந்தமாக ரமித்தாள். இதை அறிந்த பாணாஸுரன் அவனை நாக பாஶத்தால் கட்டிச் சிறைப்படுத்தினான். இதையறிந்த அநிருத்தனது பாட்டனான கிருஷ்ணன் அம்பிகையை உபாஸித்து அநிருத்தனை மீட்டுவந்தார். (ஹரிவம்சம்)

812. **परमन्त्रविभेदिन्यै नमः** — பரமந்த்ர விபேதின்யை நம: — சத்ருவின் மந்த்ரத்தைப் பேதிப்பவள். பக்தனுக்கு சத்ருவால் ஆபிசாரவகையில் செய்யப்பட்ட மந்த்ரத்தைப் போக்குபவள். சத்ரு ராஜனால் பக்தரை ஹிம்ஸிப்பதற்காகச் செய்யப்படும் ப்ரபு ஶக்தி, மந்த்ர ஶக்தி, உத்ஸாஹ ஶக்திகளைப் பேதிப்பவள். (2) சிறந்ததான பஞ்சதஶாக்ஷரீ மந்த்ரத்தைப் பலவாகச் செய்தவள்.

813. **मूर्त्यै नमः** — மூர்த்தாயை நம: — உருவத்துடன் உள்ளவள். தேவி உருவத்துடன் இருப்பது ஸகுணம் என்றும், உருவில்லாமல் இருப்பது நிர்க்குணம் என்றும் கூறப்படும்.

814. **अमूर्त्यै नमः** — அமூர்த்தாயை நம: — ரூபமில்லாதவள். நாம ரூபமற்ற ஆனந்த வடிவமானவள். ரூபமில்லாத வாயுவாகவும் ஆகாசமாகவும் இருப்பவள். ப்ருதிவீ, ஜலம், தேஜஸ் இவை ரூபமுள்ளதாக இருப்பதால், மூர்த்தா என்றும் பொருள்.

815. **अनित्यतृप्तायै नमः** – அனித்யத்ருப்தாயை நம: அழிவுள்ளதான உபசாரங்களால் கூட ஸந்தோஷமடைபவள். நித்யமான பராசக்திக்கு க்ஷணத்தில் அழியக் கூடிய பூஜை நிவேதனங்களைச் செய்கிறோம். அது பக்தியுடன் கூடியதாக இருந்தால், தேவீ பரம ஸந்தோஷமடைகிறாள். (2) அனிதி—அத்ருப்தா. ஜீவர்களால் மாத்ரம் த்ருப்தி அடையாதவள். மற்றெல்லாவற்றையும் தனது அம்சமாகக்கொண்டு ஸந்தோஷமடைகிறாள். (அனிதி-ஜீவன்).

816. **मुनिमानस हंसिकायै नमः**–முனிமானஸ ஹம்ஸிகாயை நம: — முனிவர்களுடைய மனமாகிற மானஸ ஸரஸ்ஸில் ஹம்ஸமாக இருப்பவள். "பக்த மானஸ ஹம்ஸிகா" என்ற நாமாவால் கூறப்பட்டதையே இதுவும் விளக்குகிறது. முனிவர்களது மனம் மானஸஸரஸ் போல் ஆழமாகவும் தெளிவாகவும் சீதளமாகவும் இருப்பதால் தேவி அங்கு ஹம்ஸம்போல் ஸஞ்சரிக்கிறாள்.

817. **सत्यव्रतायै नमः** — ஸத்ய வ்ரதாயை நம: — ஸத்யமான வ்ரதமுடையவள். (2) ஸத்யத்தையே வ்ரதமாக உடையவள். (3) ஸத்யம் பேசுபவரிடம் அன்புள்ளவள். ஸத்ய ஸந்தா என்ற நாமாவும் இந்தப் பொருளை விவரிக்கிறது. ஸத்ய வ்ரதன் என்ற ப்ராம்மணச் சிறுவனுக்கு ஆறுமாதம் கூறியும் காயத்ரீ வரவில்லை. அவனது தாய் "ஸத்யத்தைத் தவறாதே" என உபதேசித்

தனுப்பினாள். அவன் மூடனாயிருந்தும் ஸத்யம் தவறாதவனாக இருந்ததால், ஸத்யவ்ரதன் என்று பெயர் வழங்கிற்று. ஒரு நாள் ஒரு வேடன் பன்றியைத் துரத்திக் கொண்டு வரும்போது அதன் குரலைக் கேட்டு ஐ ஐ என்றான் ஸத்யவ்ரதன். அதனால், அதை வ்யாஜமாகக் கொண்டு, ஸத்யத்தைக் கைப்பற்றிய அவனுக்குத் தேவி ஸகல வித்யைகளையும் அளித்தாள். (தேவீ பாகவதம்).

818. **सत्यरूपायै नमः** — ஸத்ய ரூபாயை நம: — ஸத்யமான ரூபத்தை உடையவள். முக்காலத்திலும் அழியாத ரூபமுள்ளவள். (2) ஸத்யத்தை ரக்ஷிப்பவள்.

819. **सर्वान्तर्यामिण्यै नमः** – ஸர்வாந்தர்யாமிண்யை நம: — ஸர்வ ப்ராணிகளிடமும் அந்தர்யாமியாக இருப்பவள். "ஸர்வ ப்ராணிகளிடமும் ஆத்மா அந்தர்யாமியாய் அம்ருதனாக இருக்கிறார்" என வேதம் கூறுகிறது. (2) ஸர்வ வடிவமாகவும் அந்தர்யாமியாகவும் இருப்பவள்.

(ஸர்வாந்தர்யாமின்யை நம: என்று வேறு பாடமும் உண்டு.

820. **सत्यै नमः** – ஸத்யை நம: – மஹா பதிவ்ரதை. (2) ஸதீ என்ற தக்ஷகுமாரியாய் பரமசிவன் பத்னியாய் இருந்தவள்.

821. **ब्रह्माण्यै नमः** — ப்ரஹ்மாண்யை நம: — ப்ரும்ம சக்தியாக இருப்பவள். ப்ரும்மாவுக்கு ஜீவநாடியாக இருப்பவள் என்று பொருள். (2) ஸரஸ்வதி. (3) ப்ரும்மபுச்சமாக இருப்பவள். "புச்சம்" என்றால் கடைசியில் ஆணிபோல் முக்யமாக இருப்பது என்று பொருள். "ப்ரும்ம புச்சம் ப்ரதிஷ்டா, ப்ரும்மண ஆணீஸ்த" என்ற ஸ்ருதிகள் இதை வர்ணிக்கின்றன.

822. **ब्रह्मणे नमः** — ப்ரஹ்மணே நம: — ப்ரும்மமானவள். மோக்ஷமடைபவர்க்குத் தன் ஸ்வரூபத்தை விட வேறல்லாமல் இருப்பதும், ஞான ஆனந்த வடிவமாக இருப்பதும் "ப்ரம்மம்" எனப்படும்

823. **जनन्यै नमः** — *ஜனன்யை நம:* — *ஸகலத்தை யும் உண்டுபண்ணுபவள். ஜகதீகந்தா. (325) ஜகத் தாத்ரீ (935) ஆகியவைகளும் இப்பொருளேயே கூறு கின்றன.*

824. **बहुरूपायै नमः** — *பஹுரூபாயை நம:* — *அநேக ரூபமுள்ளவள். "தானே புத்ரனுகப் பிறக்கிருன்" என்ற ஸ்ருதியின்படி தாயே ஸமஸ்த உலக வடிவமாக ஆகின்ருள். நாம ரூபத்துடன் கூடிய ஸமஸ்த வடிவமாக உள்ளவள் தேவீ. (2) லலிதா, பாலா, சண்டீ முதலிய பலரூபமுள்ளவள். (3) அச்சாகவும், ஹல்லாகவும், பிரிந்த ஸகல அக்ஷர வடிவமானவள். (ஸூதஸம்ஹிதை). (4) கோடிக்கணக்கான ரூபமுள்ள ருத்ரன் மனைவியான வள்.*

825. **बुधार्चितायै नमः** — *புதார்ச்சிதாயை நம:* — *ஞானிகளால் பூஜிக்கப்பட்டவள், க்ஞானத்தை விரும்பு பவராலும், க்ஞானத்தை அடைந்தவராலும் அம்பிகை அர்ச்சிக்கப்படுகிருள். உலகம் தன்னைப்போல் அன்னை யைப் பூஜிக்கட்டும் என்று க்ஞானத்தைப் பெற்றவர்கூட தேவியைப் பூஜிப்பர்.*

826. **प्रसवित्र्यै नमः** – *ப்ரஸவித்ர்யை நம:* – *எல்லா வற்றையும் படைத்தவள். ஆகாஶாதிகள் மூலமாக ஸகல ப்ரபஞ்சத்தையும் தேவியே படைக்கிருள். ப்ரும்மா படைத்தாலும், அவருக்கு அந்த ஶக்தியைத் தந்தது தேவியே. உலகில் ப்ரஸவ கார்யம் ஸ்திரீகளைச் சார்ந்ததே என்பது ப்ரஸித்தம்.*

827. **प्रचण्डायै नमः** –*ப்ரசண்டாயை நம:* — *அதிக கோபத்துடன் கூடியவள். (2) ப்ரசண்டமான தூதர்களை உடையவள். (3) காற்று முதலியவைகள் பயப்படும் படியாய் உக்ரமாக உள்ளவள். காற்று, ஸூர்யன், அக்னி முதலியன ப்ரும்மத்தினிடம் பயந்தே தம்தம் கார்யங்களைச் செய்வதாக ஶ்ருதி வர்ணிக்கிறது. (4) ஶங்க புஷ்பத்தில் விருப்பமுள்ளவள்.*

828. **आज्ञायै नमः** — ஆக்ஞாயை நம: — ஆக்ஞா ரூபிணி (2) வேத வடிவமானவள் "நிஜாக்ஞா ரூப நிகமா" என்ற நாமாவின் கருத்தை ஒத்தது இது. வேதமே மனிதர்களுக்கு, இதைச்செய், இதைச்செய் யாதே என கட்டளையிடுகிறது. இந்த வேத ஸ்வரூபிணி, (3) "க்ஞா" என்ற ரூபமானவள். குணங்களை அனு பவிக்கும் புருஷரூபமானவள் என்று பொருள். (4) ஈஸ்வரன், ப்ரும்மா, புத்திமான், புதன் முதலிய ரூப முள்ளவள்.

829. **प्रतिष्ठायै नमः** — ப்ரதிஷ்டாயை நம: — ஸகல வஸ்துக்களுக்கும் தங்கும் நிலையான இடம். (2) ப்ர திஷ்டா என்ற சந்தஸ்ரூபமானவள். (3) ப்ரதிஷ்டா என்ற ஜலத்தின் கலாவடிவமானவள். அந்தக் கலை ஜீவனைச் சிவ பக்தியில் ஈடுபடுத்துகிறது. (சிவாகமம்)

830. **प्रकटाकृतये नमः** — ப்ரகடாக்ருதயே நம: — ப்ரகாசமான உருவமுள்ளவள். தேவியின் உருவம் மிக ஸூக்ஷ்மமாகவும் அடையமுடியாததாகவும் இருந்தாலும், பக்தருக்கும், உபாஸகருக்கும் நன்ருகத் தெரியும்படி யானது. (2) எல்லோராலும் **நான், நான்**, என ஸ்பஷ்ட மாக-அறியப்படுகிறவள். (ஸூதஸம்ஹிதை). (3) ஸ்ரீ சக்ரத்தின் முதலாவதான ஆவரணத்தில் ப்ரகடா என்ற பெயருடன் இருப்பவள். (4) "அப்ரகடாக்ருதி" என பதம் பிரித்து, ரஹஸ்யமான ரூபமுள்ளவ்ள் என்றும் கூறலாம். (5) ஜலத்தில் தெரியும் ரூபமுள்ளவள்.

831. **प्राणेश्वर्यै नमः** — ப்ராணேஶ்வர்யை நம: — ப்ராணனுக்கு ஈஶ்வரி. ப்ராணன், அபானன், வ்யானன், உதானன், ஸமானன் என்ற ஐந்துக்கும் ஈஶ்வரீ, (2) இந்த்ரியங்களுக்கு ஈஶ்வரீ. (3) வேதத்தால் வர்ணிக் கப்படும் தேவதை.

832. **प्राणदात्र्यै नमः** — ப்ராணதாத்ர்யை நம: — ப்ராணனைக் கொடுப்பவள். ஸகல ஜீவராசிகளும் பிழைத் திருக்கும்படி செய்பவள். (2) கர்மேந்த்ரியம் 5, க்ஞா

னேந்த்ரியம் 5, மனஸ் 1, எனும் 11 இந்த்ரியங் களையும் அளிப்பவள்.

833. **पञ्चाशत्पीठ रूपिण्यै नमः** — பஞ்சாஶத்பீடரூபி ண்யை நம: — 50 பீடங்களது ரூபமானவள். இங்கு ஐம்பது என்பது ஐம்பத்தொன்றையே குறிக்கும். அன்றி யும், பீடம் என்பது பீடந்யாஸத்தில் 51 அக்ஷரங்களைக் குறிக்கும். (2) அம்பிகையின் 51 பீடமானவள். தக்ஷன் புத்ரி தன் உடலை விட்டபோது, பரமசிவன் அவ்வுடலை தன் தலைமீது தூக்கி வைத்துக்கொண்டு, துக்கத்தினால் வருந்தினார். அவ்வுடல் இருக்கும்வரை ருத்ரனுக்கும் அவர் மூலமாக ஸகல உலகிற்கும் துன்பம் வரும் என உணர்ந்தார் மஹாவிஷ்ணு. தனது சக்ரத்தால் தேவியின் உடலைத் துண்டித்தெறிந்தார். அதுவிழுந்த இடமெல்லாம் தேவியின் பீடமாயின. அவை முறையே கீழே கூறப் படுகின்றன.

காமரூபம்
வாராணஸீ
நேபாலம்
பௌண்ட்ரம்
வர்த்தனம்
புரஸ்தரம்
கான்ய குப்ஜம்
பூர்ண ஶைலம்
அற்புதம்
ஆம்ராதகேஶ்வரம்
ஏகாம்ரம்
த்ரிஸ்ரோதஸ்
காமகோடிகம்
கைலாஸம்
ப்ருகு
நகரம்
கேதாரம்

சந்த்ர புஷ்கரம்
ஶ்ரீபீடம்
ஓங்கார பீடம்
ஜாலந்தரம்
மாலவம்
அட்டஹாஸம்
விரஜம்
ராஜ கேஹம்
மஹாபதம்
கோலாபுரம்
ஏலாபுரம்
காலேஶம்
ஜயந்திகம்
உஜ்ஜயினி
சித்ரா
க்ஷீரகம்
ஹஸ்திபுரம்

உட்டீஶம்
ப்ரயாகம்
ஷஷ்டீ
மாயாபுரீ
ஜலேஶம்
மலயம்
ஶைலம்
மேரு
மஹேந்த்ரம்
வாமனம்
ஹிரண்யபுரம்
மகாலக்ஷ்மீபுரம்
ஒட்டியாணம்
சாயா
சக்ரம்
காமபீடம்

834. **विशृङ्खलायै नमः** – விஶ்ருங்கலாயை நம: – கட் டில்லாதவள். கர்ம, கட்டு, விலங்கு, சங்கிலி முதலியவை

ம்ருங்கலா என்ற மப்தத்தின் பொருள். தேவி எந்தவித மான பந்தமும் இல்லாதவள். (2) விசேஷமான கர்ம வடிவமாயிருக்கும் நிர்ப்பந்த ரூபமானவள். (3) அரணுள் இல்லாதவள்.

835. **विविक्तस्थायै नमः** —விவிக்த ஸ்தாயை நம: — ஏகாந்தமான இடத்தில் இருப்பவள். ஜனங்கள் இல்லாத இடம் மூத்தமானது. அத்தகைய இடத்தில் இருப்பவள் அன்னை. (2) ஆத்ம அநாத்ம விவேக முள்ளவர் மனதில் இருப்பவள்.

836. **वीरमात्रे नमः** —வீரமாத்ரே நம: —வீரர்களுக் குத்தாய். அஹங்காரத்துடன் அதற்குக் காரணமான அக் ஞானத்துடன் போர்புரியும் ஞானிகளே வீரராவர் அவர்களுக்குத் தாய் போல் நன்மை செய்பவள். (2) போரில் முன்வைத்த காலைப்பின்வைக்காமல் சண்டை யிட்டு இறக்கும் வீரருக்கு ஸ்வர்க்கமளிப்பவள். (3) வீர மெனும் மதுபான பாத்ரத்திலுள்ள மதுவால் பூஜிக்கத் தக்கவள். (4) வீரன் எனும் கண நாதனது தாய்.

837. **वियत्प्रसुवे नमः** — வியத் ப்ரஸூவே நம : — ஆகாயத்தைப் படைத்தவள். ஆத்மாவிடமிருந்து ஆகா யம், அதிலிருந்து மற்றபூதங்கள் உண்டான்தாக ம்ருதி வர்ணிக்கிறது. ஆத்மாவாக உள்ளவள் அன்னை.

838. **मुकुन्दायै नम** : — முகுந்தாயை நம :— முக்தி அளிப்பவள். (2) முகுந்தன் வடிவமானவள்.

839. **मुक्तिनिलयायै नम** :— முக்தி நிலயாயை நம: — முக்திக்கு இருப்பிடமானவள். ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் முதலான நால்வகை முக்திகளும், கைவல்யம் என்ற முக்தியும் அன்னையிடமிருந்தே உண்டா கின்றன. அவள் அருளால் அவளை அடைந்து ஐந்து வகை முக்தி பெறலாம்.

840. **मूलविग्रहरूपिण्यै नमः** —மூலவிக்ரஹ ரூபிண்யை நம: — ஸமஸ்த மக்திகளுக்கும் மூலஸ்தானமான ரூப

முள்ளவள். பண்டாஸுர வதத்திற்காகவே தேவி தன்னிடமிருந்தே மந்த்ரிணி, தண்டினி, ப்ராம்மீ முதலிய ஸகல ஶக்திகளேயும் படைத்தாள்.

841. **भावज्ञायै नमः** — பாவக்ஞாயை நம: — எண்ணத்தை அறிந்தவள். பாவ எனில் நமது எண்ணம், இருத்தல், ஸ்வபாவம், புத்தி முதலிய பல பொருள்கள் உண்டு. அவை எல்லாவற்றையும் உணர்ந்தவள் தேவி.

842. **भवरोगघ्न्यै नमः** — பவ ரோக க்ன்யை நம: — ஸம்ஸாரரோகத்தைப் போக்குபவள், ஸம்ஸார நோயைப் போக்கவல்லவன் சிவனே என்று பல புராணங்கள் கூறுகின்றன. ஶிவனுடன் ஒன்ருக இருக்கும் தேவியும் பவப்பிணியை நீக்கவல்லவளே.

843. **भवचक्रप्रवर्तिन्यै नमः** –பவசக்ர ப்ரவர்த்தின்யை நம: —ஸம்ஸார சக்ரத்தைச்சுற்றுபவள். அம்பிகையின் மாயா ஶக்தியால் மறுபடி மறுபடி பிறந்து வளர்ந்து, இறப்பது என்ற சக்ரம் சுழல்கிறது. (2) அநாஹத சக்ரமான ஶிவசக்ரத்தைச் சலிக்கும்படி செய்பவள். (3) ஸ்ரீசக்ரத்திலுள்ள பிந்து, அஷ்டதளம், ஷோடஶ தளம், சதுரஶ்ரம் என்ற ஶிவ சக்ரத்தை நடத்துபவள். (4) ஶிவனது மநதைச் சலிக்கும்படிச் செய்பவள்.

844. **छन्दःसारायै नमः** — சந்த: ஸாராயை நம : — வேத ஸாரமானவள். உபநிஷத் அர்த்தமானவள் என்று கருத்து. (2) காயத்ரி முதலான சந்தஸ்களின் ஸாரமானவள், (3) உபாஸகர்களது மநதின் ஸாரமானவள்.

845. **शास्त्र सारायै नमः** –ஶாஸ்த்ர ஸாராயை நம :– ஶாஸ்த்ரங்களின் ஸாரமானவள், ஸகல ஶாஸ்த்ரங்களின் பரம தாத்பர்யம் ஜகன் மாதாவை உபாஸிப்பதே.

846. **मन्त्रसारायै नमः** — மந்த்ரஸாராயை நம : — மந்த்ரங்களின் ஸாரமானவள், வேதத்திலும் அதைத் தழுவிய தந்த்ர சாஸ்த்ரங்களிலும் கூறப்பட்ட எழு கோடி மந்த்ரங்களில் தேவீ மந்த்ரமே ஸாரமானது.

847. **तलोदर्यै नम** :–தலோதர்யை நம:–சிறியஇடை உடையவள். உள்ளங்கைபோல் மெல்லியதாயும் ஸமமாயும் சிறியதாயும் இருக்கிறது. அன்னையின் வயிறு. (2) அதலோதரீ என்று பிரித்து, அன்னை விஸ்வரூபமெடுத்தபோது அதலம் எனும் லோகமே வயிருக இருந்தது என்றும் பொருள் கூறுவர்.

848. **उदारकीर्तये नम** : — உதார கீர்த்தயே நம: — விசாலமான கீர்த்தி வாய்ந்தவள். (2) உபாஸகனுக்கு விரைவில் கீர்த்தியைத் தருபவள் (3) செவ்வாய் முதலிய க்ரஹங்களால் உண்டாகும் தோஷத்தை அகற்றுபவள், (4) ஸூர்யனைப்போல், ஒளிக்கும் கீர்த்தி உள்ளவள்.

849. **वर्णरूपिण्यै नम** : — வர்ண ரூபிண்யை நம : — எழுத்து ரூபமானவள், ஸமஸ்த அக்ஷரவடிவமானவள் அன்னை. பஞ்சாக்ஷரீ, அஷ்டாக்ஷரீபோல் தேவியின் பெயருடன் நம: என்பது சேர்ந்ததல்ல. பாலை பஞ்சதசாக்ஷரீ முதலிய தேவீ மந்த்ரம் கேவல அக்ஷர ரூபமாகவே அமைந்துள்ளது. (2) ப்ராம்மண, க்ஷத்ரிய, வைஸ்ய, சூத்ர என்ற நான்கு வர்ணரூபமானவள்.

850. **उद्दाम वैभवायै नम**: — உத்தாம வைபவாயை நம: — அளவிடமுடியாத வைபவமுள்ளவள்.

851. **जन्ममृत्युजरातप्त जनविश्रान्तिदायिन्यै नमः** — ஜன்ம ம்ருத்யு, ஜராதப்த ஜன விஸ்ராந்தி தாயின்யை நம: — பிறப்பு, இறப்பு, கிழத்தன்மை இவைகளால் உண்டாகும் துக்கத்தை அகற்றி, பிறப்பிறப்பில்லாத மோக்ஷ ஸுகத்தைத் தருபவள்.

852. **सर्वोपनिषदुद्घुष्टायै नमः** — ஸர்வோபநிஷதுத்குஷ்டாயை நம: —எல்லா உபநிஷத்களாலும் சிறந்தவள் என கோஷிக்கப்பட்டவள். உபநிஷத் எனில் மிக ரஹஸ்யமானது. ஆத்மாவுடன் ஜீவனைச் சேர்த்து அவித்யையை அழிப்பது என்று பொருள். அத்தகைய வித்யைகளால் அம்பாள் மிக உயர்ந்த சிறந்த ப்ரும்ம

வித்யா ஸ்வரூபிணீ என்று ஸங்கையின்றி உரக்க கோஷிக்கப்படுகிருள். எல்லா உபநிஷத்தும் ஏக முக மாக அன்னையையே உத்கோஷம் செய்கின்றன.

853. **शान्त्यतीत कलात्मिकायै नमः** — ஸாந்த்யதித கலாத்மிகாயை நம: — ஸாந்த்ய திதம் என்ற கலாவடிவ மானவள். ஸாந்த்யதீதம் எனும் கலை ஆகாயத்திலிருப்ப தாகவும் அந்த ரூபமாக தேவி இருக்கிருள் என்றும் சிவ புராணம் கூறுகிறது. (2) ஸாந்திக்கு மேலான கலா வடிவமானவள். நவரஸங்களிலும் சிறந்தது ஸாந்தி. அந்த ஸாந்திக்கும் மேலான ஆனந்த வடிவமான கலை உள்ளவள் தேவி.

854. **गंभीरायै नमः** — கம்பீராயை நம: — அளவிட முடியாத ஆழ்ந்த ரூபமுள்ளவள். உயர்ந்த செயலையும் உருவையும் கம்பீரமானது என்போம். தேவியின் செய லும் மனமும் உருவமும் இத்தகையது என்று எவராலும் அளவிடமுடியாதது. (2) கணபதியின் பயத்தை அகற்று பவள்.

855. **गगनान्तस्थायै नमः** — ககனந்தஸ்தாயை நம :— ஆகாஸத்தினிடையில் இருப்பவள். ஹ்ருதயாகாஸம், பஞ்ச பூதாகாஸம், பரமாகாஸம் ஆகியவைகளின் நடுவில் இருப்பவள். (2) ஆகாஸ பீஜாக்ஷரமான ஹ காரமாக வும், அந்தஸ்தா என்ற ய, ர, ல, வ என்ற அக்ஷரங்களாக வும் இருப்பவள். இவ்வக்ஷரங்கள் பஞ்சபூஜையில் ஸகல மந்த்ரங்களிலும் உபயோகமாகின்றன. (லம் ப்ருதிவ் யாத்மனே கந்தான் தாரயாமி. ஹம் ஆகாஸாத்மனே புஷ்பாணி ஸமர்ப்பயாமி. யம் வாய்வாத்மனே தூபமாக் ராபயாமி. ரம் வன்யாத்மனே தீபம் தர்ஸயாமி. வம் அம்ருதாத்மனே அம்ருதம் நிவேதயாமி. ஸம் ஸர்வாத் மனே ஸர்வோபசாரான் ஸமர்ப்பயாமி என்பன பஞ்ச பூஜை.)

856. **गर्विताये नमः** — கர்விதாயை நம: — கர்வ முள்ளவள். உலகத்தவர் கொள்ளும் கர்வம்போலல்ல தேவியின் கர்வம். உலக சிருஷ்டி ஸ்திதி லய காரண மான அஹந்தா என்ற கர்வமுள்ளவள்.

857. **गानलोलुपायै नमः** –கானலோலுபாயை நம: – ஸங்கீதத்தில் விசேஷ ப்ரியமுள்ளவள். ஸங்கீதம் பல வகைப்படும். வீணு வேணு முதலிய வாத்யங்களால் பாடப்படுவது, காந்தர்வ கானம், ஸாமகானம், தத, ஆனந்த, ஸுஷிர, களம் என்ற நால்வகை கானமும் ஸங்கீதத்தைச் சார்ந்தவை.

858. **कल्पनारहितायै नमः** — கல்பனு ரஹிதாயை நம: — கல்பனைகளில்லாதவள். ஒரு பொருளை மனதில் "அது இப்படி இருக்கும். இப்படி இருந்தால் நன்ருக இருக்கும்" என்று எண்ணுவது கல்பனு எனப்படும். கவிகள் ஒன்றைப் பார்த்து ஒரு வகையாகக் கல்பனை செய்வார்கள். இத்தகைய கல்பனைகள் தேவியினிடம் செய்ய முடியாது. (2) கல்ப—நார—ஹிதா என்று பதம் பிரித்து, ப்ரளயகாலத்திலும் நர ஸமூஹத்திற்கு நன்மை புரிபவள் என்றும் வேறு பொருள் கூறுவர்.

859. **काष्ठायै नमः** — காஷ்டாயை நம: — உயர்ந்த எல்லையாக இருப்பவள். உபநிஷத்தில் "ஸா காஷ்டா. ஸா பராகதி:" அதே சிறந்த கடைசி எல்லை. உயர்ந்த கதி; என்று கூறப்படுகிறவள். (2) காஷ்டா என்ற கால வடிவமானவள். 18 நிமிஷங் கொண்டது ஒரு காஷ்டை யாகும். (3) காஷ்டா எனும் வ்ருக்ஷ ரூபமானவள். (4) பீம என்ற அஷ்டமூர்த்தியின் பத்னியானவள். (5) எல்லாவற்றையும் கடந்தவள்.

860. **अकान्तायै नमः** – அகாந்தாயை நம:–பாபத்தை அகற்றுபவள். அகம் எனில் பாபம். அதற்கு அந்தா— முடிவைச் செய்பவள்.

861. **कान्तार्ध विग्रहायै नमः** — காந்தார்த்த விக்ர ஹாயை நம: — கணவனின் பாதி ரூபமானவள். (2) ஸ்வர்க்கத்தைத் தன் உடலில் ஒரு பாகமாக உள்ளவள்.

862. **कार्य कारण निर्मुक्तायै नमः** — கார்ய காரண நிர்முக்தாயை நம: — கார்ய காரணங்களிலிருந்து விடு பட்டவள். சுத்த சைதன்ய வடிவமாக இருக்கும்போது

கார்யம், காரணம் என்றவை இல்லாதவள். ஒன்றிற்குக் காரணமாகவோ, தனக்கு வேறொரு காரணமுள்ளவளாகவோ, ஒன்றின் கார்யமாகவோ ஒன்றைச் செய்பவளாகவோ இல்லாதவள்.

863. **कामकेलितरङ्गितायै नमः** — காமகேலி தரங்கிதாயை நம: — அலைபோல் மேன்மேலும் வ்ருத்தியான காம கேலி உள்ளவள். இந்தக் காமலீலை உலகிலுள்ள ஸாமான்யமான லீலையல்ல. காமேச்வரரிடம் உலகைப் படைத்துப் பரிபாலிப்பதற்காகத் தோன்றிய கேலிகளாம்.

864. **कनत्कनक ताटङ्कायै नमः** — கனத்கனக தாடங்காயை நம:–ப்ரகாசமான ஸுவர்ண தாடங்கமுள்ளவள். தாடங்கம் என்பது காதில் அணியும் ஆபரணம். தேவியின் தாடங்க மஹிமையால் விஷத்தை உண்டும் சிவன் ஜீவித்திருக்கிறார் என்று ஸௌந்தர்ய லஹரீ கூறுகிறது. ஜம்புகேச்வரத்தில் (திருவானைக்கோவில்) அகிலாண்டேச்வரிக்கு ஆதி சங்கரர் ஸ்ரீசக்ரவடிவமான தாடங்க ப்ரதிஷ்டை செய்தார்கள். அதைக் காமகோடி பீடத்தில் 68 வது பட்டத்தில் அமர்ந்திருக்கும் ஸ்ரீ மதாசார்ய பாதாள் புதுப்பித்தார்கள்.

865. **लीला विग्रहधारिण्यै नमः** — லீலா விக்ரஹ தாரிண்யை நம: — விளையாட்டாக உருவமெடுப்பவள். (2) விளையாட்டிற்காக உருவமுள்ளவள், (3) லீலை என்ற ஒரு பதிவ்ரதையின் உருவாக இருப்பவள்.

866. **अजायै नमः**-அஜாயை நம:-பிறப்பில்லாதவள்.

867. **क्षयविनिर्मुक्तायै नमः** — க்ஷய விநிர் முக்தாயை நம: — க்ஷயமில்லாதவள். பிறந்தால் இறக்கவேண்டும். அம்பிகைக்குப் பிறப்புமில்லை. இறப்புமில்லை. (2) வீட்டில் இருப்பவர்களுக்கும் முக்தி அளிப்பவள். ப்ரும்ம வித்யை "வீட்டை விட்டுத் துறவியானவர்க்கே முக்தி" எனக்கூறுகிறது. ஸ்ரீவித்யையில் ஈடுபட்டவரே வீட்டிலிருந்தும் முத்தியைப் பெறலாம்.

868. **मुग्धायै नमः** — *முக்தாயை நம:* — மிக அழகானவள். (2) அமுக்கா—மூடரல்லாத உபாஸகர்களை உடையவள் என்றும் கூறலாம்.

869. **क्षिप्रप्रसादिन्यै नमः** — *க்ஷிப்ர ப்ரஸாதின்யை நம :* — விரைவில் அருள் புரிபவள்.

870. **अन्तर्मुख समाराध्यायै नमः** — *அந்தர்முக ஸமாராத்யாயை நம:* — அந்தர் (உள்) முகமாக நன்கு ஆராதிக்கத்தக்கவள்.

871. **बहिर्मुख सुदुर्लभायै नमः** — *பஹிர்முக ஸுதுர்லபாயை நம:* — பஹிர்முகமானவர்க்குக் கிடைக்காதவள். உள்ளே ஹ்ருதயத்திலுள்ள தேவியை த்யானம் செய்து வெளி வ்யாபாரங்களை விட்டவர் எளிதில் தேவியை அடையலாம். கண், காது, கை, கால் முதலிய அவயவங்களைக்கொண்டு பஹிர்முகமாகப் பூஜிப்பவர் தேவியைப் பெற பல வருஷங்களாகும்.

872. **त्रय्यै नम :** —*த்ரய்யை நம :* —வேத ரூபமானவள், கர்ம, பக்தி, க்ஞான மென்ற மூன்று வடிவமானவள். 23 எழுத்தின் சேர்க்கையான வாக்பவ பீஜமானவள். ருக்வேதம் "அக்னி மீடே" என ஆரம்பிக்கின்றது. யஜுர்வேதம் "இஷேத்வா" என்றும், ஸாமவேதம் "அக்ன ஆயாஹி" என்றும் ஆரம்பிப்பதால் **அ இ அ** என்ற எழுத்துக்களின் ஸந்தியால் வாக்பவ பீஜம் உண்டாகின்றது.

873. **त्रिवर्गनिलयायै नमः** – *த்ரிவர்க்கநிலயாயை நம:* த்ரிவர்க்கத்தி லிருப்பவள். தர்ம, அர்த்த, காமம் என்பவை த்ரிவர்க்கம் எனப்படும். தர்மார்த்த காமங்களைத் தன் இருப்பிடமாகக் கொண்டவள்.

874. **त्रिस्थायै नम :**— *த்ரிஸ்தாயை நம :* —முக்காலத்திலு மிருப்பவள். சென்ற காலம், நிகழ்காலம், வருங்காலம் என்ற முக்காலத்திலும் தேவி இருக்கிறாள். அகார, உகார, மகார வடிவமான ப்ரணவத்திலும்,

ஸ்வர்க்க, மத்ய, பாதாளம் எனும் மூன்று உலகிலும் மூன்று மூன்ருக உள்ள ஒவ்வொன்றிலுமிருப்பவள்.

875. **त्रिपुरमालिन्यै नमः** – த்ரிபுர மாலின்யை நம: – த்ரிபுர மாலினீ எனும் தேவியானவள். ஸ்ரீ சக்ரத்தின் அந்தர் தஶார சக்ரத்திற்கு அபிமான தேவதையாக இருப்பவள். த்ரிபுர மாலினீ என்றவள்.

876. **निरामयायै नमः** — நிராமயாயை நம: — நோய் இல்லாதவள், "ரோகபர்வத தம் போளி:" என்ற நாமாவை ஜபித்தவர்க்கே நோய் அகலும். பிறப்பு, இறப்பு எனும் பெரும் பிணியே ஒழியும் எனில், அன்னையிடம் நோய்க்கு இடமேது.

877. **निरालंबायै नमः** — நிராலம்பாயை நம: — ஆலம்பமில்லாதவள். ஆலம்பம் எனில் தனக்கு உதவி செய்ய ஒரு பிடிப்பாம். தேவி மற்றவருக்கு ஆலம்பமாக இருக்கிருளே தவிர, தேவிக்கு யாதொரு பிடிப்புமில்லை.

878. **स्वात्मारामायै नमः** — ஸ்வாத்மா ராமாயை நம: — தனது ஆத்மாவிடத்திலேயே ரமிப்பவள். (2) தன்னையே ஆணுகவும் பெண்ணுவும் பிரித்துக்கொண்டு ஸந்தோஷிப்பவள். (3) தன் மனதையே உத்யானமாகக் கொண்டு க்ரீடை செய்பவள்.

879. **सुधासृत्यै नमः** — ஸுதாஸ்ருத்யை நம: — அம்ருத தாரையாக இருப்பவள். ஶிரஸிலுள்ள ஆயிர தளத்தாமரையின் கர்ணிகையில் சந்த்ரனும் அவனிடம் அம்ருதமும் இருக்கின்றது. மூலாதாரத்திலிருந்து குண்டலினி ஶக்தி கிளம்பி முறையே ஆறு சக்ரங்களைப் பிளந்து அங்குள்ள அம்ருதத்தைப் பெருகச்செய்வது, அம்ருத தாரையாகும். ஸுதா ஸாராபி வர்ஷிணீ என்ற 106 வது நாமா இதைப்பற்றி விவரிக்கின்றது. (2) சந்த்ர மண்டலத்திலுள்ள அம்ருத வர்ஷமாக இருப்பவள். அந்த அம்ருதத்தை அக்னி, ஸூர்யன் முதலியவர்கள் முறையாக உண்டு களிக்கின்றனர். (3) ஜ்வரம், விஷம் முதலியவைகளை நீக்கும் ப்ரயோகத்தில் அம்ருத வர்ஷிணியாக உபாஸிக்கப்படுகிறவள்.

880, **संसार पङ्क निर्मग्न समुद्धरण पण्डितायै नमः** — ஸம்ஸார பங்க நிர்மக்ன ஸமுத்தரண பண்டிதாயை நம:- ஸம்ஸாரம் எனும் சேற்றில் புதைந்தவரைத் தூக்குவதில் ஸாமர்த்திய முள்ளவள். அன்னையைச் சரணமென ஒரு முறை நினைத்தாலும், ஆழம் கண்டுபிடிக்க முடியாத ஸம் ஸார ஸாகரத்தில் விழாமலிருக்கலாம். (கூர்ம புராணம்)

881. **यज्ञप्रियायै नमः** — யக்ஞ ப்ரியாயை நம: — யாகத்தில் ஆசை உள்ளவள். (2) யக்ஞம் எனப்படும் விஷ்ணுவுக்கு ப்ரியமானவள்.

882. **यज्ञकर्त्र्यै नमः** — யக்ஞ கர்த்ர்யை நம : — யக் ஞத்தைச் செய்பவள். (2) யஜமானனது பத்னீ வடிவ மானவள். யக்ஞ பத்னிக்குத் தக்ஷிணை என்றும் பெயர்.

883. **यजमानस्वरूपिण्यै नमः** — யஜமான ஸ்வரூ பிண்யை நம: — யஜமானன் ரூபமானவள்.

இங்ஙனம் விஷ்ணு ஸஹஸ்ரநாமாவில் யக்ஞோ யக்ஞ பதிர் என்று யக்ஞ விஷயமான பல நாமாக்கள் கூறப்படுகின்றன. யக்ஞம் என்பது சுத்தமான ஹவிஸ்-ஸைக்கொண்டு சுத்தமான அக்னி மூலமாகப் பூஜை செய்வதாம். அந்த கர்மா ஸ்ரேஷ்டதமம் என்று வேதத் தால் வர்ணிக்கப்படுகிறது. "ப்ரும்மார்ப்பணம்" என்ற படி, ஹோமம் செய்பவர், வஸ்து, அக்னி பாத்ரங்கள், அடையத்தக்கது எல்லாம் ப்ரும்மம் போல், இங்கு தேவி யக்ஞமாகவும், செய்பவராகவும் அவர் பத்னியாகவும் இருக்கிறாள்.

884. **धर्माधारायै नमः** — தர்மாதாராயை நம : — தர்மத்திற்கு ஆதாரமாக இருப்பவள். (2) தர்மத்தை ஆதாரமாக உடையவள். வேதத்தால் ஸ்ம்ருதி, இதி ஹாஸ புராணாதிகளால் கூறப்பட்டதும், அந்தந்த தேசத் திலுள்ள ஸிஷ்டர்களால் அனுஷ்டிக்கப்பட்டதும், தார்மிக ரது மனதில் உதிப்பதும் தர்மமாம். அந்த தர்மம் தேவி யையே முதல் ஆதாரமாகக் கொண்டது.

885. **धनाध्यक्षायै नमः** — *தனுத்யக்ஷாயை நம:* — தனத்திற்கு அதிபதியாக உள்ளவள். (2) குபேர ரூபிணியானவள். தேவீ உபாஸகர்களில் முக்யமான பன்னிரண்டு பேரில் குபேரன் ஒருவன்.

886. **धनधान्य विवर्धिन्यै नमः** — *தனதான்ய விவர்தின்யை நம:* — தனத்தையும் தான்யத்தையும் நிறைய வ்ருத்தி செய்பவள். அன்னை தனலக்ஷ்மியாகவும் தான்ய லக்ஷ்மியாகவும் இருப்பதால் பக்தர்களுக்கு அவைகளை யதேஷ்டமாகத் தருபவள்.

887. **विप्रप्रियायै नमः** — *விப்ரப்ரியாயை நம:* — விப்ரரிடம் அன்புள்ளவள். பொதுவாக, விப்ரர் எனில் ப்ராம்மணர் என்று பொருள். ஆயினும் (1) ப்ராம்மணனிடம் பிறந்தவர் **ப்ராம்மணன்** (2) கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரமுள்ளவன் **த்விஜன்** (3) வித்யை கற்றபின் **விப்ரன்** (4) முன்கூறிய மூன்றும் சேர்ந்துள்ளவன் **ஶ்ரோத்ரியன்** என்றும் கூறப்படுவான். ஜாதிமாத்ர ப்ராம்மணன் கூட தன் ஶரீரம் என்று கிருஷ்ணன் கூறுகிறார். வித்யையுள்ள விப்ரரிடம் அன்னைக்கு அன்பு உண்டு எனக்கூறவும் வேண்டுமா?

888. **विप्ररूपायै नमः** — *விப்ரரூபாயை நம:* – விப்ர வடிவமானவள். (2) விப்ரர்களை ப்ரம்ம தேஜஸால் புஷ்டியாகச் செய்பவள். தேவியை விதிப்படி பூஜித்தால், தேஜஸ், தபஸ், பலம் முதலியன உண்டாகின்றன. புல் முதலியவைகளால் பசு வ்ருத்தியடைவதுபோல், பிராம்மணன் ஜபஹோம தேவதார்ச்சனைகளால் புஷ்டியுள்ளவனுகிறுன். (ஆபஸ்தம்ப ஸ்ம்ருதி)

889. **विश्वभ्रमणकारिण्यै नमः** — *விஶ்வப்ரமண காரிண்யை நம:* — உலகைச் சுற்றும்படி செய்கிறவள் (2) விஷ்ணுவைச் சுழன்றுகொண்டிருக்கும்படி செய்பவள். உலகம் உண்டாவது, சிறிது காலம் இருப்பது, மறுபடி அழிவது என்ற சுற்றலைச் செய்கிறுள். கருடாரூடனுகச் சென்ற மஹாவிஷ்ணு காமரூபம் எனுமிடத்

தில் நீலாசலத்தில் இருக்கும் காமாக்யா என்ற தேவியை வலம் வந்து பூஜிக்காமல் சென்றூர். அதனுல் அவர் கருடனுடன் கடலில் விழுந்து சுழல்போல் சுற்றிக்கொண்டிருந்தார். வெகு காலமாகியும் தன் பதி வராததைக்கண்டு வருந்தினுள் லக்ஷ்மி. நாரதர் மூலமாக நடந்ததை அறிந்து, தேவி காமாக்யா தேவியைப் பூஜித்து பதியை விடுவித்தாள். (காளிகா புராணம்)

890. **विश्वग्रासायै नमः** — விஸ்வ க்ராஸாயை நம: — உலகை உணவாக உடையவள். ப்ரளயகாலத்தில் ஸகல வஸ்துக்களும் அன்னையிடம் ஒடுங்குவதால், உணவுபோல் வர்ணிக்கப்படுகிறது. "ப்ராஹ்மண க்ஷத்ரியர் இருவரும் அன்னம். யமன் ஊறுகாய்."—(கட உபநிஷத்)

891. **विद्रुमाभायै नमः** — வித்ருமா பாயை நம: — பவழம் போன்ற காந்தி உள்ளவள். (2) க்ஞான வ்ருக்ஷம் போல் ப்ரகாசிப்பவள். ஒரு மரம் பல மரங்களைப் படைப்பது போல், அன்னையின் தத்துவத்தை அறிந்து ஸகல க்ஞானத்தையும் உண்டுபண்ணுவதால் ஞானக் வ்ருக்ஷம்போல் என்று கூறப்பட்டது.

892. **वैष्णव्यै नमः** :—வைஷ்ண வ்யை நம :—விஷ்ணு ஶக்தியான லக்ஷ்மியாக இருப்பவள். "விஷ்ணுவைப் போல் ஶங்க சக்ர கதா தாரிணியாக இருந்து ஶத்ருக்களை ஸம்ஹரிப்பதாலும், விஷ்ணுவுக்குத் தாயாக இருப்பதாலும் தேவி "**வைஷ்ணவீ**" (தேவீ புராணம்).

893. **विष्णुरूपिण्यै नमः** : – விஷ்ணு ரூபிண்யை நம:— விஷ்ணு ஸ்வரூபமானவள். கோபிகளை மோஹிக்கும்படி செய்தது எனது புருஷ ரூபமான க்ருஷ்ண ஶரீரம் (லலிதோபாக்யானம்).

மஹேஶ்வரனுடைய ஆதி ஶக்தியானது போக ரூபத்தில் பவானி. போரில் துர்க்கை. கோபத்தில் காளி. புருஷரூபத்தில் க்ருஷ்ணன் என நான்கு ரூபமாக இருக்கின்றது. என விஷ்ணு வீரபத்ரரிடம் கூறினுர். (லலிதோபாக்யானம்).

ஹிமவான் தேவியைத் துதிக்கும்போது "பாற்கடலில் படுத்திருக்கும் உனது உருவை நமஸ்கரிக்கிறேன்" என்று கூறுகிறார். (வாமன புராணம்).

894. **अयोनये नमः** — அயோனயே நம:—எங்கிருந்தும் பிறவாதவள். ஸகல உலகையும் தான்படைத்தவள் தேவீ. தேவியைப் படைத்தவர் யாருமில்லை. (2) விஷ்ணுவுக்குத் தாயானவள்.

895. **योनिनिलयायै नमः** – யோனி நிலயாயை நம:– காரணமாகவும் இருப்பிடமாகவும் உள்ளவள். தேவி காரணமானவள். ஸ்திதி காலத்திலும் லயத்திலும் எல்லாம் தேவியினிடமே தங்குகின்றன. (2) ஜகத்திற்குக் காரணரான ப்ரும்மாவுக்கு லயஸ்தானமானவள். (3) ஸ்ரீசக்கரத்தின் த்ரிகோணத்தை இருப்பிடமாகக் கொண்டவள்.

896. **कूटस्थायै नमः** — கூடஸ்தாயை நம: — கூடம் போல் அசையாதிருப்பவள், மலையின் சிகரம் "கூடம்" எனப்படும். அது காற்றில் அசையாததுபோல் அன்னை எதற்கும் சஞ்சலமில்லாதவள். கருமான் இரும்புப் பட்டரை 'கூடம்' எனப்படும். அது தன்மீது உள்ள இரும்புகளைப் பல வஸ்துக்களாக்கவோ, நீட்டவோ, வெட்டவோ காரணமாயிருக்கிறதே தவிர, தான் மாறுவதில்லை. அதுபோல் தேவி கர்மாவிற்கேற்றபடி உலகைப் படைக்கிறாள். தான் ஒரு சலனமும் இல்லாதவள். (2) அக்ஞானத்திற்கு இருப்பிடமானவள். (3) வாக்பவம் முதலிய கூடத்தில் இருப்பவள். (4) ஸ்ரீசக்ரத்திலுள்ள 'த்ரிகோணம்' எனும் கூடத்தில் இருப்பவள்.

897. **कुलरूपिण्यै नमः** — குலரூபிண்யை நம: — குலத்தின் வடிவமானவள். வம்சம், பாஹ்ய பூஜை, மூலாதாரம், கௌலமார்க்கம் ஆகிய இவைகள் ரூபமாக இருப்பவள்.

898. **वीरगोष्ठीप्रियायै नमः** — வீரகோஷ்டீப்ரியாயை நம: –உபாஸகர் கூட்டத்தில் ப்ரியமுள்ளவள். ஸாதாரண

பகைவர்களை ஜயிப்பதை விட நமக்குள்ளே நம்முடன் கூடப்பிறந்த காமன் முதலிய ஶத்ருக்களை ஜயிக்க அதிக வீர்யம் வேண்டும். அத்தகையவர்களுடைய கூட்டமும் அவர்களது ஸல்லாபமும் கோஷ்டி எனப்படும். உபாஸகர் கூட்டத்திலும் அவர்கள் பேச்சிலும் தேவிக்கு ப்ரியம் அதிகம்.

899. **वीरायै नमः** — வீராயை நம: — வீர்யமுள்ளவள். பக்தர்களைப்போல் தேவிக்கு இருவகைச் சத்துருக்களையும் ஜயிக்கும் ஶக்தி உண்டு எனக்கூறவும் வேண்டுமா? அன்னையின் அருளைக்கொண்டே பக்தர்கள் வெளிப்பகைவன் உட்பகைவன் ஆகிய இருவர்களையும் ஜயிக்கின்றனர். (2) நல்ல பதியையும் புத்ரனையும் உள்ளவள்.

900. **नैष्कर्म्यायै नमः** — நைஷ்கர்ம்யாயை நம: — கர்ம கந்தமில்லாதவள். உலகமெலாம் கர்மாவிற்கு அதீனமானது. கர்மாவின்படி உலகைப்படைத்தாலும், தேவிக்கு யாதொரு கர்ம ஸம்பந்தமும் கிடையாது. கர்மாவை விட்டால் மனிதர் பாபத்திற்கு ஆளாவர். அன்னைக்கு அந்த தோஷமில்லை. (2) கர்ம லேஶமற்ற சுத்தக்ஞான வடிவமானவள். க்ஞானத்தில் யாதொரு கர்மாவும் கிடையாது. ஆதலால் அதற்கு அப்பெயர் "நைஷ்கர்ம்யஸித்தி" என்ற வேதாந்த நூல் மண்டன மிஶ்ரரால் இயற்றப்பட்டுள்ளது.

901. **नादरूपिण्यै नमः** — நாதரூபிண்யை நம: — நாத வடிவமானவள். ப்ரணவத்தின் கடைசி பாகத்திற்கு நாதம் என்று பெயர். அந்த நாத வடிவமானவள். (2) நாதத்தில் உருவமுள்ளவள். 299-வது நாமாவும் இதை விவரிக்கின்றது.

902. **विज्ञानकलनायै नमः**—விக்ஞான கலனையை நம:— விக்ஞானத்தை உண்டுபண்ணுபவள். விக்ஞானம் என்பது ப்ரும்மானுபவ ரூபமான அறிவு. அதை உபாஸகர்களுக்கு அளிப்பவள். (2) 14 வித்யைகளை அர்த்தத்துடன் மனதில் பதியவைப்பது விக்ஞானம். (கூர்ம புராணம்)

903. कल्यायै नमः — கல்யாயை நம: — கலைகளில் ஸாமர்த்யம் வாய்ந்தவள். உஷ: காலம், ஸ்ருஷ்டி, ஆரோக்யம், ஸாமர்த்யம், மங்களமான வாக்கு முதலிய பல பொருள்கள் உள்ளது கல்யா என்ற சொல். அந்தந்த ஸ்வரூபமாக இருப்பவள்.

904. विदग्धायै नमः — விதக்தாயை நம: — மிக ஸாமர்த்யம் வாய்ந்தவள்.

905. बैन्दवासनायै नमः — பைந்தவாஸனாயை நம: — பிந்து ஸம்பந்தமான சக்ரத்தை ஆஸனமாக உடையவள். ஸ்ரீசக்ரத்தின் நடுவில் உள்ளது பிந்து. அதே ஸர்வானந்தமய சக்கரம் எனப்படும். அங்கு வஸிப்பவள் தேவி. (2) இரு புருவங்களுக்கு மேல் வ்ருத்த வடிவமாக இருக்கும் பைந்தவம் என்ற இடத்தை ஆஸனமாகக்கொண்டவள். (3) ஸுதாஸிந்து ஸஹஸ்ராரத்திலுள்ள சந்த்ரமண்டலம் காமேச்வரரின் மடி. ஆகிய இம்மூன்று பைந்த வாஸனத்திலும் இருப்பவள்.

906. तत्वाधिकायै नमः — தத்வாதிகாயை நம: — தத்துவத்தைவிட அதிகமானவள். ப்ரளய காலம்வரை இருந்து ஸகலருக்கும் போகத்தைத் தருவது எதோ அதே தத்வம் எனப்படுகிறது. அவைகளைப்போல தேவி அழியாதவள் ஆதலால் தத்துவங்களைவிட மேலானவள் ஆவள். ஸாங்க்ய சாஸ்த்ரம் சைவாகமம் முதலியவைகள் பலவகையான தத்துவங்களைக் கூறுகின்றன. எல்லா தத்துவங்களுக்கும் மேலானவள் அன்னை.

907. तत्वमय्यै नमः — தத்வமய்யை நம: — தத்வரூபமானவள். சிவதத்வத்திற்கு மேலான சின்மய தத்வமானவள். **தத்வாதிகா** என்ற சொல் சிவதத்துவத்தையும். **தத்வமயீ** என்பது தேவி தத்வத்தையும் கூறும். சிவதத்வத்தால் அஸம்ப்ரக்ஞாதஸமாதியும், சிவதத்வ அதிகத்தினால் ஸம்ப்ரக்ஞாத ஸமாதியும் உண்டாகும். இவ்விரண்டும் யோகத்தின் அஷ்டாங்கத்தின் இடையே உள்ள

தாரணத்தால் உண்டாகின்றன. சிவதத்வத்தால் தோன்றும் அஸம்ப்ரக்ஞாதஸமாதியின் லக்ஷணம் கண்கொட்டாமை, அசைவில்லா வுடல் முதலியனவாம்.

சிவதத்வாதிக்யத்தால் உண்டாகும் ஸம்ப்ரக்ஞாத ஸமாதியின் லக்ஷணம் சிறிப்பு, அழுகை, மயிர்க்கூச்சல், வியர்வை, படபடப்பு முதலியனவாம். இவை குருவின் உபதேசத்தினுல் அறியக்கூடியன.

(2) ஆத்ம தத்வம், வித்யா தத்வம், சிவ தத்வம் என்ற தனித்தனி மூன்று தத்வமாக இருப்பதால் **தத்வமயி.** இம் மூன்று தத்வங்களும் சேர்ந்து ஒன்ருக இருப்பதால் **தத்வாதிகமயீ.** இம் மூன்று தத்துவங்களுக்கு ஸத், சித், ஆனந்தம் என மற்ருேர் பெயருண்டு. ஆதலால், தேவி ஸச்சிதானந்த ரூபிணீ என்றும் அழைக்கப் படுகிருள்.

(3) பரமாத்மாவினது அவயவமான தத்வாத்வா என்ற ஸ்வரூபமாக இருப்பதால் தேவி தத்வமயீ, 991வது ஷடத்வாதீத ரூபிணீ என்ற நாமாவில் இதன் விரிவைக் காணலாம்.

908. **तत्वमर्थ स्वरूपिण्यै नमः** — தத்வமர்த்த ஸ்வரூபிண்யை நம: — தத், த்வம் இதன் அர்த்த ஸ்வரூபமாக இருப்பவள். உபநிஷத்திலுள்ள மஹா வாக்யத்தில் **தத்வம்** என்ற இருபதங்களும் இருக்கின்றன. **தத்** என்பது பரமாத்மாவையும், த்வம் என்பது ஜீவாத்மாவையும் கூறி, அஸி என்பதால் இரண்டிற்கும் ஐக்யத்தைக் கூறுகிறது. தஸ்யத்வம் தத்வம் என்று கூறுவர் சிலர். **தத்** சிவனையும் **த்வம்** ஜீவனையும் குறிக்கும் என்பர் சிலர்.

909. **सामगान प्रियायै नमः** — ஸாமகான ப்ரியாயை நம: — ஸாமகானத்தில் ஆசை உள்ளவள். (2) ஸாமவேதிகளிடம் ப்ராணப்ரியம் உள்ளவள் என்று பொருள்கூறும் போது, ஸாமக அனப்ரிய என்று பதம் பிரிக்கவேண்டும்.

910. **सौम्यायै नमः** — ஸௌம்யாயை நம:— ஸோம யாகத்தினுல் ஆராதிக்கத்தக்கவள். (2) பரமசிவனைத்தன்

அவயவமாக உடையவள். அதாவது, அர்த்த நாரீஶ்வர ஸ்வரூபமானவள். (3) சந்த்ரனைப்போல் ஸந்தோஷப் படுத்துபவள். (4) அழகானவள். இந்த நாமா **ஸோம்யா** என்றும் **ஸௌம்யா** என்றும் கூறப்படுகிறது.

911. **सदाशिव कुटुम्बिन्यै नमः** — ஸதாஶிவ குடும்பின்யை நம: — ஸதாஶிவனது பத்னியாக இருப்பவள், ஶ்யாமளா, ஶுத்த வித்யா, அஶ்வாரூடா முதலிய ரூபத்துடன் இருப்பவள் என்று பொருள்.

912. **सव्यापसव्य मार्गस्थायै नमः** — ஸவ்யாபஸவ்ய மார்க்கஸ் தாயை நம:—ஸவ்ய அபஸவ்யமார்க்கங்களுக்கு அதிபதியாக இருப்பவள். (1) உலக விதரணை, உலக ரக்ஷணம், உலகை ஆளுதல் என்றவைகளைச் செய்பவள். (2) உத்தர, தக்ஷிண, மத்ய என்ற ஸூர்யனது மூன்று மார்க்கங்களிலும் இருப்பவள். (3) தேவயான, பித்ருயான, த்ருவமண்டலம் என்ற ரூபமாக இருப்பவள். (4) வாமமார்க்க, தக்ஷிண மார்க்கங்களில் இருப்பவள். தேவீ பூஜையில் ஸவ்யம், அபஸவ்யம் என இரு வழிகள் உண்டு அல்லவா!

913. **सर्वापद्विनिवारिण्यै नमः** — ஸர்வாபத் விநிவாரிண்யை நம: — எல்லா ஆபத்துகளையும் போக்கடிப்பவள். தேவியின் நாமாவை நினைத்தாலே ஆபத்துகள் அகலும். "ஆபதி கிம் கரணீயம்? ஸ்மரணீயம் சரணயுகளம் அம்பாயா: தத் ஸ்மரணம் கிம் குருதே? ப்ரும்மாதீன் அபி கிங்கரீகுருதே" ஆபத்தில் என்ன செய்ய வேண்டும்? தேவியின் பாதாரவிந்தத்தை நினைக்கவேண்டும். அந்த ஸ்மரணம் என்ன செய்யும் ப்ரும்மாதி தேவர்களைக்கூட கிங்கரர்களாக்கும்."

914. **स्वस्थायै नमः** :—ஸ்வஸ்தாயை நம :— சஞ்சலமே இல்லாதவள், துன்பத்தாலோ, காமாதிகளாலோ மற்றவருக்கு ஏற்படுவதுபோல் தேவிக்கு யாதொரு மனக் கலக்கமும் (சஞ்சலத்தன்மையும்) கிடையாது. (2) தன்னிடமே நிலைகொண்டிருப்பவள். (3) ஸ்வர்க்கத்திற்குத் தலைவி. நற்கதி தருபவள்.

915. स्वभावमधुरायै नमः — ஸ்வபாவ மதுராயை நம: — இயற்கையாகவே மதுரமாயிருப்பவள். மற்ற பொருளெல்லாம் இன்னொன்றின் சேர்க்கையால் மதுரமாக இருக்கும். தேவியோ இயற்கையாகவே மதுரமானவள். (2) மதுரையைத்தன் இருப்பிடமாகக் கொண்டவள். (3) ஆத்மவித்யையில் ஈடுபட்டவரின் பாரத்தை வஹிப்பவள். (4) தன்னைச் சார்ந்தவர்களிடம் மதுரமாக இருப்பவள்.

916. धीरायै नमः – தீராயை நம: – தீரையானவள் புத்தியைத் தருபவள், (2) தைர்யமுள்ளவள். (3) இரா எனும் தரூமி நிதியுடன் கூடியவள்.

917. धीरसमर्चितायै नमः - தீரஸமர்ச்சிதாயை நம:- தீரர்களால் நன்கு பூஜிக்கப்பட்டவள். வேதவித்யையில் ஈடுபட்டவரே தீரராவர். (2) புத்தியுடன் கூடிய ரஸத்திற்காக பூஜிக்கப்படுகிறவள்.

918. चैतन्यार्घ्य समाराध्यायै नमः — சைதன்யார்க்ய ஸமாராத்யாயை நம:— சித்தவடிவமான அர்க்யத்தால் ஆராதிக்கத்தக்கவள். அர்க்யம் எனில் பூஜையில் அளிக்கப்படும் நீராம். தேவீ பூஜையில் சைதன்யமே அர்க்யமாம். சிதக்னி குண்டலத்தில் உதித்த தேவிக்கு சைதன்ய அர்க்யமே சிறந்ததாம். அதாவது, அன்னை எனும் ஞானத்துடன் அபேதமாக எண்ணி உபாஸிப்பதாம். (2) ஆத்மக்ஞானத்தால் ஆராதிக்கப்பட்டவள். (3) புவனேஸ்வரீ மந்த்ரத்தால் ஆராதிக்கத்தக்கவள். (4) விசேஷ அர்க்யத்தால் ஆராதிக்கத்தக்கவள்.

919. चैतन्य कुसुमप्रियायै नमः — சைதன்யகுஸுமப்ரியாயை நம: — சைதன்யமாகிற புஷ்பத்தில் விருப்பமுள்ளவள். அஹிம்ஸை, இந்த்ரியங்களை அடக்குதல், பொறுமை, தயை, ஞானம், தபஸ், ஸத்யம், த்யானம் என்ற புஷ்பங்களில் ஞான புஷ்பம் என்பதே சைதன்ய புஷ்பமாம்.

920. **सदोदितायै नमः**—ஸதோதிதாயை நம:—ஸதா உதயமாக இருப்பவள். அதாவது எப்போதும் உதய கால ஸூர்யனைப்போல் ப்ரகாசமாயும் ப்ரஸன்னமாயும் இருப்பவள்.

921. **सदातुष्टायै नमः**—ஸதாதுஷ்டாயை நம:—ஸதா ஸந்தோஷமாயிருப்பவள். பக்தர்களிடம் ஸந்தோஷ முள்ளவள். துக்கத்திற்கு உரிய பாப கர்மாதிகள் இல்லாதவள். ஆதலால் எப்போதும் ஸந்தோஷமாக இருப்பவள்.

922. **तरुणादित्य पाटलायै नमः** — தருணாதித்ய பாடலாயை நம: — மாத்யான்ஹிக ஸூர்யனைப்போல் பாடல வர்ணமுள்ளவள். வெண்மையும் சிவப்பும் கலந்ததே பாடலம் எனப்படும். காளியாக இருக்கும்போது கறுப்பு வர்ணமுள்ளவள். இப்படி அவதார பேதத்தால் வர்ண பேதமும் ரூப பேதமும் உள்ளவள்.

923. **दक्षिणा दक्षिणाराध्यायै नमः** — தக்ஷிணா தக்ஷிணா ராத்யாயை நம:— தக்ஷிணமார்க்கத்திலும் வாம மார்க் கத்திலும் ஆராதிக்கத்தக்கவள். (2) தக்ஷிணையால், பண்டிதர்களால் ஆராதிக்கத்தக்கவள். (3) கர்மாவாலும், ஞானத்தாலும் ஆராதிக்கத்தக்கவள்.

924. **दरस्मेरमुखाम्बुजायै नमः**— தரஸ்மேர முகாம்பு ஜாயை நம: — புன்சிரிப்புள்ள முகாரவிந்தமுடையவள். (2) பயம் உண்டாகக்கூடிய ப்ரளயகாலத்திலும் சிறித்த முகமுடையவள்.

925. **कौलिनी केवलायै नमः**—கௌலினீ கேவலாயை நம:—கௌல தர்மத்தையும் க்ஞானத்தையும் உடைய வள். கேவல என்ற பதத்திற்கு மோக்ஷம், சிவக்ஞானம், ஸுகதுக்கம் இல்லாமை என்று பல பொருள்கள் உண்டு. கௌல தர்மம் முன்பே கூறப்பட்டது.

926. **अनर्घ्य कैवल्यपद दायिन्यै नमः** — அனர்க்ய கைவல்யபத தாயின்யை நம: — விலைமதிக்க முடியாத

மோக்ஷத்தை அளிப்பவள். அனர்க்யா கைவல்ய பத தாயினீ என்றும் இருநாமாவாக பிறிப்பாருண்டு.

927. **स्तोत्रप्रियायै नमः** – ஸ்தோத்ர ப்ரியாயை நம: – ஸ்தோத்ரத்தில் ப்ரியமுள்ளவள். ஸ்தோத்ரம் வைதிகம், லௌகிகம் என இருவகைப்படும். பிறரை வசப்படுத்தக் கூடிய குணத்தைக் கூறுவது வைதிக ஸ்துதி, லௌகிக ஸ்துதி, நமஸ்காரம், ஆசீர்வாதம், ஸித்தாந்தம், பராக்ரமம், விபூதி, ப்ரார்த்தனை என ஆறு வகைப்படும். (1) த்ரிஜகத் வந்த்யா என்ற 627-வது நாமா நமஸ்காரத்தைக் கூறும் ஸ்துதி. (2) ஸ்வஸ்திமதி என்ற 448-வது நாமா ஆசீர்வாதரூபஸ்துதி (3) மித்யா ஜகததிஷ்டானு என்ற 735-வது நாமா ஸித்தாந்தஸ்துதி. (4) 735 பண்டா ஸுரேந்த்ர முதலிய நாமாக்கள் பராக்ரம ஸ்துதியாகும். (5) 579-வது இச்சா சக்தி என்ற நாமா விபூதியை விளக்கும் ஸ்துதி (6) ஸாம் ராஜ்ய தாயினீ என்ற 658-வது நாமா ப்ராத்தனு ரூபஸ்துதியாம்.

928. **स्तुतिमत्यै नमः** —ஸ்துதி மத்யை நம: –ஸ்துதி உடையவள். வேதத்தாலும் பல உபாஸகர்களாலும் கூறப்பட்ட ஸ்துதிகளை உடையவள். (2) ஸ்துதிப்பவர்க்கு அறிவையும் ஐஶ்வர்யத்தையும் தருபவள்.

929. **श्रुतिसंस्तुत वैभवायै नमः** — ஶ்ருதி ஸம்ஸ்துத வைபவாயை நம: — வேதத்தால் நன்கு ஸ்துதிக்கப்பட்ட வைபவத்தை உடையவள். (2) ஶ்ருதியால் நன்ருக அறியப்பட்ட வைபவம் உள்ளவள். (3) ஶரீர ரூப, சந்தஸ் ரூப, வேத ரூப, மஹா ரூப என்ற நான்கு வகையான ஸ்வரூபமாக இருப்பவள். (4) ஶாந்தி, வித்யா, ப்ரதிஷ்டா, நிவ்ருத்தி என்ற 4 ரூபமானவள்.

930. **मनस्विन्यै नमः** — மனஸ்வின்யை நம: —ஸ்வதந்த்ரமான மனமுடையவள்.

931. **मानवत्यै नमः** — மானவத்யை நம: — பெருந்தன்மையுள்ள மனமுடையவள்.

932. महेश्यै नमः — மஹேஶ்யை நம: — மஹேஶ்வரரின் பத்னீ.

933. मङ्गलाकृत्यै नमः — மங்களாக்ருத்யை நம: — மங்களமான ஆக்ருதி உள்ளவள்.

934. विश्वमात्रे नमः —விஶ்வமாத்ரே நம: –உலகத்திற்கெல்லாம் தாயாக இருப்பவள்.

935. जगद्धात्रे नमः — ஜகத்தாத்ரே நம: — ஜகத்தைத் தாங்குகிறவள். பூமி ரூபமாக இருந்து உலகைத் தாங்குகிருள் அன்னே.

936. विशालाक्ष्यै नमः — விஶாலாக்ஷ்யை நம: — விஶாலமான கண்களுள்ளவள். (2) காஶியில் விஶாலாக்ஷி என்ற பெயருள்ளவள். (3) விஶால என்ற பீடத்தை ஆக்ஷிஸ்தானமாக உடையவள்.

937. विरागिण्यै नमः —விராகிண்யை நம: —வைராக்யம் உள்ளவள்.

938. प्रगल्भायै नमः — ப்ரகல்பாயை நம: —துணிவு உள்ளவள். (2) ஸ்ருஷ்டி முதலிய கர்மாக்களைச் செய்யும் தைர்யமும் பலமுமுள்ளவள்.

939. परमोदारायै नमः — பரமோதாராயை நம: — சிறந்த உதாரகுண முள்ளவள் (2) சிறந்த ஆனந்தத்தைத் தருபவள்.

940. परामोदायै नमः — பராமோதாயை நம: — உயர்ந்த வாஸனே உள்ளவள். இங்கு வாஸனே என்பது வாஸனேயுடன் கீர்த்தியையும் குறிக்கும்.

941. मनोमय्यै नमः —மனோமய்யை நம: —மனதின் வடிவமானவள். எல்லா ஸ்வரூபமாகவும் உள்ள தேவி மனேரூபமாகவும் இருப்பது ஆச்சர்யமில்லே. அன்றியும் தேவி மனதில் சிதாகாஶ ரூபமாக இருப்பதால் மனேமயீ எனப்படுகிருள்.

942. **व्योमकेश्यै नमः** — வ்யோம கேஶ்யை நம: — ஆகாசத்தைக் கேஶமாக உடையவள். (2) வ்யோமகேஶனை ஶிவனது பத்னியாக இருப்பவள். ஸ்வாமி அல்லது அம்பாளின் விஶ்வரூபத்தில் ஆகாஶம் அவரது கேஶமாக இருந்தது. (3) சிறியதான ஆகாஶத்திற்குக் கூட ஈஶ்வரியாக இருப்பவள்.

943. **विमानस्थायै नमः** — விமானஸ்தாயை நம: — விமானத்தில் இருப்பவள். (2) விமானத்தால் செல்லும் தேவதைகள் ரூபமாக இருப்பவள். (3) பக்தர்களை விஶேஷமாக ஆதரிப்பவள். (4) கிரி சக்ரம் முதலிய ரதத்தில் இருப்பவள். (5) அளவிட முடியாத ப்ரும்மஸ்வரூபத்தில் இருப்பவள். (6) வேதத்தில் இருப்பவள்.

944. **वज्रिण्यै नमः** — வஜ்ரிண்யை நம: — இந்த்ரன் பத்னியாயிருப்பவள். வஜ்ராயுதமுள்ளவன் இந்த்ரன். அவனது பத்தினீ வஜ்ரிணீ (2) வஜ்ராயுதம் தரிப்பவள் (3) வஜ்ரம் எனும் ரத்தத்தால் அலங்கரிக்கப்பட்டவள் (4) வஜ்ர ஸ்வரூபமான ப்ரும்மத்தை உடையவள்.

945. **वामकेश्वर्यै नमः** — வாம கேஶ்வர்யை நம: — வாம கேஶ்வர தந்த்ர ரூபமானவள். (2) வாம கேஶ்வர தந்த்ரத்தால் வர்ணிக்கப்படுபவள். (3) வாம மார்க்கத்தைத் தழுவியவர்களுக்கு ஈஸ்வரீ. (4) தக்ஷன் முதலிய ப்ரஜாபதிகளுக்கு ஈஶ்வரீ.

946. **पञ्चयज्ञप्रियायै नमः** — பஞ்ச யக்ஞ ப்ரியாயை நம: — பஞ்ச யக்ஞத்தில் ப்ரியமுள்ளவள். தேவ யக்ஞம், பித்ருயக்ஞம், மனுஷ்ய யக்ஞம், பூத யக்ஞம், ப்ரும்ம யக்ஞம் என்பது பஞ்ச மஹா யக்ஞமெனப்படும். இதே வைஶ்வ தேவம் என்றும் கூறப்படும். (2) அக்னி ஹோத்ரம், தர்ஶ பூர்ண மாஸம், சாதுர் மாஸ்யம், பஶுபந்தம், ஸோமயாகம் என்ற பஞ்சயக்ஞத்தில் விருப்பமுள்ளவள். (3) அபிகமநம், உபாதானம், இஜ்யா, ஸ்வாத்யாயம், யோகம் என்ற பஞ்சயக்ஞத்தில் விருப்பமுள்ளவள். (4) கேவலம், யாமளம், மிஶ்ரம், சக்ரயுக், வீரஸம்ஸ்கார எனும் பஞ்சயக்ஞத்தில் விருப்பமுள்ளவள்.

947. **पञ्चप्रेतमञ्चाधिशायिन्यै नमः** — பஞ்ச ப்ரேத மஞ்சாதி ஶாயின்யை நம: — ஐந்து ப்ரேத வடிவமான மஞ்சத்தில் வீற்றிருப்பவள். ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈஶ்வரன் என்ற நால்வரும் நான்கு கால்களாகவும் ஸதா ஶிவன் பலகையாகவும் இருக்கும் மஞ்சம் ப்ரும்மாஸன மாம். இவர்கள் ஶக்தி இல்லாமல் தனியாக இருக்கும் போது ப்ரேதர் எனப்படுவர். அத்தகைய பஞ்ச ப்ரேத மஞ்சத்தில் இருப்பவள்.

948. **पञ्चम्यै नमः** — பஞ்சம்யை நம: — ஸதாஶிவ னுடைய பத்னியாக இருப்பவள். ப்ரும்ம, விஷ்ணு, ருத்ரன், ஈஶ்வரன், ஸதாஶிவன் ஆகியவர் முறையே ஒரு வரை விட ஒருவர் உயர்ந்தவர். அத்தகைய ஐந்தாவ தான ஸதாஶிவனது பத்னி தேவி. (2) பஞ்சமி என்ற வாராஹியாக இருப்பவள். (3) கைவல்ய மெனும் ஐந்தா வது முக்தி ரூபமாக இருப்பவள்.

949. **पञ्चभूतेश्यै नमः** — பஞ்ச பூதேஶ்யை நம: — ஐந்து பூதங்களுக்கு ஈஶ்வரியானவள். மண், நீர், தீ, வாயு, ஆகாசம் என்ற ஐந்து பூதங்களில் ஸத்தா ரூபமாக இருப்பவள். (2) ஐந்து பூத வடிவமான வைஜயந்தி என்ற மாலைக்கு ஈஶ்வரீ. அதாவது, அம்மாலை அணிந்த விஷ்ணு ரூபமானவள். முத்து, மாணிக்கம், மரகதம், இந்த்ர நீலம், வஜ்ரம் என்ற 5 ரத்னங்கள் 5 பூதங்களி லிருந்து உண்டானவை. இந்த ரத்னங்களால் அமைக்கப் பட்டது வைஜயந்திமாலா.

950. **पञ्चसङ्ख्योपचारिण्यै नमः** — பஞ்ச ஸங்க்யோப சாரிண்யை நம: — ஐந்து என்ற கணக்குள்ள உபசார முடையவள். தேவ பூஜையில் கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம் என்ற ஐந்தும் மிக முக்யமான பஞ்சோபசாரம் எனப்படும். ஜப காலத்தில் " லம் " ப்ருதிவ் யாத்மனே கந்தான் தாரயாமி என்று பஞ்ச பூஜை செய்யப்படுகிறது.

951. **शाश्वत्यै नमः** — ஶாஶ்வத்யை நம: — எப்போதும் இருப்பவள். (2) அடிக்கடி பக்தர்களால் பூஜிக்கப்படுபவள்.

952. **शाश्वतैश्वर्यायै नमः** — ஶாஶ்வதைஶ்வர்யாயை நம: — நித்யமான ஐஶ்வர்யமுள்ளவள்.

953. **शर्मदायै नमः** — ஶர்மதாயை நம: — ஸுகத்தைக் கொடுப்பவள்.

954. **शंभुमोहिन्यै नमः** — ஶம்பு மோஹின்யை நம:— சிவனை மோஹிக்கச் செய்தவள். பரமசிவன் காமனை ஜயித்திருந்தாலும், அம்பிகையிடம் மோஹம் உள்ளவர்.

955. **धरायै नमः** — தராயை நம: — பூமி வடிவமானவள். (2) ஸகல உலகையும் தரிப்பவள். (3) ல என்ற அக்ஷரரூபிணீ. மலை காடுகளுடன் கூடியதும் 50 பீடங்களுடன் கூடியதும் ஸர்வ தீர்த்த ரூபமாகவும் இருக்கின்ற பூமி என்ற பொருள் ல என்பதற்கு.

956. **धरसुतायै नमः** — தரஸுதாயை நம: — பர்வத குமாரியானவள்.

957. **धन्यायै नमः** — தன்யாயை நம: — க்ருதார்த்தை ஆனவள். (2) தனத்தை உடையவள். (3) தனத்தைத் தருபவள். (4) தன்யா எனும் யோகினீ ரூபமுள்ளவள். (5) ப்ராணன் போகும் ஸமயத்தில் உண்டாகும் "தன்யா" என்ற த்யானமாக இருப்பவள். ஆர்த்த, ரௌத்ர, தன்ய, சுக்ல என்ற நான்கு வகையான த்யானங்கள் மரண காலத்தில் உண்டாகலாம். போகங்களில் ஆசை உண்டாவது **ஆர்த்த** என்றும், போகங்களில் வெறுப்பில்லாமை **ரௌத்ர** என்றும், சாஸ்த்ர க்ஞானத்துடன் ப்ராணிகளிடம் தயை, இந்த்ரிய அடக்கம் இவை **தன்யா** என்றும், தத்துவத்திலேயே நிலையான த்யானம் **சுக்ல** மென்றும் கூறப்படும். ஆர்த்த த்யானத்துடன் இறப்பவர் பசு பக்ஷியாகவும், ரௌத்ரத்யான முள்ளவர் அதைவிட கீழான பிராணியாகவும், தன்யா என்ற த்யா

னம் உள்ளவர் தேவராகவும், சுக்ல த்யானத்துடன் இறப்பவர் முக்தனுகவும் ஆவர். (பவிஷ்யோத்தர புராணம்.)

958. **धर्मिण्यै नमः** — தர்மிண்யை நம: — தர்மஸ்வபாவம் உள்ளவள். (2) ஆனந்தானுபவம் நித்யமாயிருத்தல் முதலிய தர்மங்கள் உள்ளவள்.

959. **धर्मवर्धिन्यै नमः** — தர்ம வர்த்தின்யை நம: — தர்மத்தை வ்ருத்தி செய்பவள். தன் பக்தர்களுக்கு இந்த்ரியங்களை ஜயித்தல், சுசியாயிருத்தல், மங்களம், பக்தி முதலிய குணங்களை வ்ருத்தி செய்கிருள் தேவி. (2) த்ருஶ்ய தர்மத்தைக் கண்டிப்பவள். த்ருஶ்ய தர்மம் என்பது உலகில் காணப்படும் வெவ்வேருன வஸ்துவாய் இருத்தல். அதைக் கண்டித்து, சுத்த ப்ரும்ம ஸ்வரூபத்தைத் தருபவள் என்று பொருள்.

960. **लोकातीतायै नमः** — லோகாதீதாயை நம: — லோகங்களைக் கடந்து மேலாக இருப்பவள். இந்த்ர லோகம், ப்ரும்ம லோகம். விஷ்ணு லோகம் முதலிய உலகங்களைத் தாண்டி கைலாஸத்தில் பரமசிவனுடன் இருப்பவள். (2) ஜீவனுக்கு மேலாக இருப்பவள்.

961. **गुणातीतायै नमः** – குணுதீதாயை நம: – குணங்களைக் கடந்தவள்.

962. **सर्वातीतायै नमः** — ஸர்வாதீதாயை நம: — எல்லாவற்றையும் கடந்தவள்.

963. **शमात्मिकायै नमः** — ஶமாத்மிகாயை நம: — ஶாந்த ஸ்வரூபமாக இருப்பவள். (2) ப்ரபஞ்சத்தின் உபஶம ரூபமாக இருப்பவள். (3) ஸுகத்தை ஆத்மாவாக உடையவள்.

964. **बन्धूककुसुम प्रख्यायै नमः** — பந்தூக குஸும ப்ரக்யாயை நம: — பந்தூக புஷ்பம் போன்ற காந்தி உடையவள். பந்தூகம் என்ற புஷ்பம்போல் மிகச் சிவந்த காந்தி உள்ளவள்.

965. **वालायै नमः** — பாலாயை நம: — குமாரியாக இருப்பவள். (2) பாலாம்பிகா ஸ்வரூபிணீ.

966. **लीलाविनोदिन्यै नमः** — லீலா விநோதின்யை நம: — விளையாட்டால் ஸந்தோஷப்படுபவள். உலகைப் படைப்பது முதலியவைகளே லீலை. (2) லீலா என்ற பதிவ்ரதையை விசேஷமாகத் தூண்டுகிறவள். பத்ம ராஜனுடைய மனைவி லீலை. அவள் தவம் செய்து கணவனது ஜீவனையும் க்ஞானத்தையும் பெற்றாள். அவளைத் தூண்டியதால், லீலாவிநோதினீ. (வாஸிஷ்டம்)

967. **सुमङ्गल्यै नम** – ஸுமங்கல்யை நம: – ஸுமங்கலீ ரூபமானவள். பதியுள்ள ஸ்த்ரீ ஸுமங்கலா எனப் படுவாள். (2) ஶோபனமான ப்ரும்ம வித்யா ஸ்வரூபமாக உள்ளவள். (3) தப்பான கார்யங்களைச் செய்யாமல் ஸரியானதைச் செய்பவள்.

968. **सुखकर्यै नमः** — ஸுககர்யை நம: — ஸுகத்தைச் செய்பவள்.

969. **सुवेषाढ्यायै नमः** — ஸுவேஷாட்யாயை நம: — நல்ல வேஷத்தால் அலங்கரிக்கப்பட்டவள். நல்ல வஸ்த்ரம், புஷ்பம், நகை முதலியவைகளால் அலங்கரிக்கப் பட்டவள்.

970. **सुवासिन्यै नमः** — ஸுவாஸின்யை நம: — ஸுவாஸினி ரூபமாயிருப்பவள். உலகிலுள்ள ஸகல ஸுவாஸினி ரூபமாகவும் இருப்பவள். பரமசிவன் எப்போதும் ஜீவித்திருப்பதால் அவர் பத்னியான தேவி என்றும் ஸுவாஸினீ.

971. **सुवासिन्यर्चन प्रीतायै नमः** — ஸுவாஸின்யர்ச்சன ப்ரீதாயை நம: — ஸுவாஸினிகளைப் பூஜிப்பதால் ஸந்தோஷமடைகிறவள். தேவீ பூஜையில் ஸுவாஸினீ பூஜை செய்வது மிக முக்யம். (2) ஸுவாஸினிகள் செய்யும் அர்ச்சனையால் ஸந்தோஷிப்பவள்.

972. आशोभनायै नमः — ஆஶோபனாயை நம: — பூர்ணமான அழகுள்ளவள்.

973. शुद्धमानसायै नमः — ஶுத்தமானஸாயை நம :- சுத்தமான மனம் உடையவள்.

974. बिन्दुतर्पण सन्तुष्टायै नमः — பிந்து தர்ப்பண ஸந்துஷ்டாயை நம: — பிந்து தர்ப்பணத்தால் ஸந்தோஷமடைகிறவள். ஸ்ரீ சக்ரத்தின் நடுவிலுள்ள ஆனந்தமய சக்ரமே பிந்து எனப்படும். அதை ப்ராம்மணர் பாலாலும், க்ஷத்ரியர் நெய்யாலும், வைசியர் தேனாலும், சூத்ரர் ஆஸவத்தாலும் (ஒருவித மது) தர்ப்பணம் செய்யவேண்டும். பிந்து பதத்தின் அர்த்தத்தை உணர்ந்தவர் செய்யும் தர்ப்பணத்தால் ஸந்தோஷமடைபவள்.

975. पूर्वजायै नमः — பூர்வஜாயை நம: — எல்லாவற்றிற்கும் முன்னே உண்டானவள். ஸ்ருஷ்டிக்கு முன்பேயே தேவி இருக்கிறாள். (2) மூலப்ரக்ருதி ரூபமானவள்.

976. त्रिपुरांबिकायै नमः — த்ரிபுராம்பிகாயை நம ;- த்ரிபுராம்பிகா வடிவமானவள். ஸ்ரீ சக்ரத்தின் எட்டாவது சக்ரத்திற்கு அபிமானி தேவதையாக இருப்பவள் த்ரிபுராம்பிகை. (2) ஜாக்ரத் - ஸ்வப்பன ஸுஷுப்திகளை உண்டுபண்ணுபவள். (3) வாமாதி மூன்று ஶக்திகளின் தாய்.

977. दशमुद्रा समाराध्यायै नमः — தஶமுத்ரா ஸமாராத்யாயை நம: — பத்து வகையான முத்ரைகளால் ஆராதிக்கப்பட்டவள். ஸம்க்ஷோபண, த்ராவண, ஆகர்ஷண, வஶ்ய, உன்மாதன மஹாங்குச, கேசரீ பீஜ யோனி த்ரிகண்டா என்பவை 10 முத்ரைகளாம். பூஜா காலத்தில் செய்யவேண்டியவைகள். முத்ரை என்பது கை விரல்கள் மூலமாக சில தத்துவங்களைத் தேவர்க்குக் காட்டுவதாம். வாயால் கூறுமல், அபிநயம்போல், இந்த முத்ரைகளைக் காட்டும்போது தேவர்கள் அறிந்து ஸந்தோஷமடைகின்றனர். ஐந்து விரல்கள் 5 பூதங்களையும், 5 க்ருத்யங்களையும் காட்டுபவை. வலது கை

ப்ரகாசரூபனான சிவனையும், இடது கை விமர்ஶரூபமான தேவியையும் குறிக்கும். ஶிவ ஶக்தி சேர்ந்து 5 பூதங்களைக்கொண்டு உலகைப் படைப்பது முதலிய கார்யங்களைக் காட்டும். நவாவரண பூஜையில் அந்தந்த ஆவரண பூஜை முடிந்தபின் அந்தந்த முத்ரைகள் காட்டப்படும். முதலாவதான த்ரைலோக்ய மோஹன சக்ர பூஜையில் ஸர்வஸம்க்ஷோபிணீ முத்ரையும், அங்கிருந்து ஆரோஹண க்ரமமாகப் பூஜை செய்யும்போது ஸர்வவித்ராபிணீ முதலியவைகளையும் காட்டி, கடைசியில் ஸர்வானந்தமய சக்ர பூஜையில் யோனி முத்ரையைக் காட்டி ஒன்பது முத்ரைகளின் ஸமஷ்டி ரூபமான ஸர்வத்ரிகண்டிகா முத்ரையைக் காட்டவேண்டும்.

978. **त्रिपुराश्रीवशंकर्यै नमः** — த்ரிபுரா ஶ்ரீவஶம்கர்யை நம: — த்ரிபுரா ஶ்ரீ தேவியைத் தனக்கு வசமாக்கினவள். ஶ்ரீசக்ரத்தின் ஐந்தாவது ஆவரணம் ஸர்வார்த்த ஸாதக சக்ரம் எனப்படும். அதற்கு அதிஷ்டான தேவதை த்ரிபுராஶ்ரீ என்பவள்.

979. **ज्ञानमुद्रायै नमः** — க்ஞான முத்ராயை நம: — க்ஞான முத்ரா ரூபமானவள். கட்ட விரலும் ஆள்காட்டி விரலும் ஒன்று சேர்வது ஞான முத்ரை எனப்படும். இதே சின் முத்ரை என்றும் கூறப்படும். தக்ஷிணமூர்த்தி இந்த முத்ரையினால் ஜீவப்ரும்ம ஐக்யத்தை ஸனகாதிகளுக்கு உபதேசிக்கிறார். (2) ஞானத்தால் ஸந்தோஷத்தைத்தருபவள். (3) ஞானம் ஆனந்தம் இவ்விரண்டையும் மறைப்பவள்.

980. **ज्ञानगंयायै नमः** — க்ஞான கம்யாயை நம: — க்ஞானத்தால் அடையத்தக்கவள்.

981. **ज्ञानज्ञेयस्वरूपिण्यै नमः** — க்ஞான க்ஞேயஸ்வரூபிண்யை நம: — அறிவு, அறியத்தக்கது என்றரூபமாக இருப்பவள். இதையே த்ருக் த்ருஶ்யம் என்பர். (2) ஞானத்தினால் அறியத்தக்க ஸ்வரூப முள்ளவள்.

982. **योनिमुद्रायै नमः** — *யோனி முத்ராயை நம:*— யோனி முத்ரை வடிவமானவள். முன் கூறிய 10 முத்ரைகளில் இது ஒன்று. இது அன்னையின் ஸ்வரூபம். இதனிடமிருந்தே ஸகல முத்ரைகளும் உண்டாயின. (2) யோனியில் ஸந்தோஷத்தைத் தருபவள். (3) யோனியை மறைவாக உடைய பிந்து ஸ்வரூபமானவள்.

983. **त्रिखण्डेश्यै नमः** — *த்ரிகண்டேச்யை நம:* — த்ரிகண்டா முத்ரைக்கு ஈச்வரீ. முத்ரைகளின் ஸமஷ்டி ரூபமான த்ரிகண்டா முத்ரை மஹா யோனி முத்ரை என்றும் கூறப்படும். (2) ஸ்ரீ வித்யையிலுள்ள ஸோம, ஸூர்ய அக்னி வடிவமான மூன்று கண்டங்களுக்கு ஈச்வரீ.

984. **त्रिगुणायै नमः** — *த்ரிகுணாயை நம:* — மூன்று குணமுள்ளவள். ஸத்வம், ரஜஸ், தமஸ், என்ற மூன்று குணங்கள் சேர்ந்த ப்ரக்ருதி ரூபமாக இருப்பவள். (2) த்ரிவிக்ரம ரூபமானவள். (3) த்ரிபதகா என்ற கங்கா ரூபமானவள்.

985. **अंबायै नमः** – *அம்பாயை நம:* – தாயாக இருப்பவள். மூன்று குணத்திற்குத் தாயாக இருப்பவள் என்று பொருள் கூறினால்தான், திரும்பத்திரும்பக் கூறல் என்ற குற்றமில்லாமலிருக்கும்.

986. **त्रिकोणगायै नमः** – *த்ரிகோணகாயை நம:* — த்ரிகோணத்தை அடைந்திருப்பவள். ஸ்ரீசக்ரத்தில் உள்ள த்ரிகோணம் என்பது யோனி சக்ரம் எனப்படும்.

987. **अनघायै नमः** — *அனகாயை நம:* –பாபமற்றவள். (2) குற்றமற்றவள். (3) துக்கமற்றவள்.

988. **अद्भुतचारित्रायै नमः** — *அற்புத சாரித்ராயை நம:* — ஆச்சர்யமான சரிதம் உடையவள். (2) ஆபத்துக்களிலிருந்து காப்பவள், பண்டாஸுரனைக் கொன்று தேவர்க்குத் தேவராஜ்யத்தையும், காமனுக்கு உடலையும் அளித்து எவராலும் செய்யமுடியாத கார்யம்செய்தவள்.

989. **वाञ्छितार्थ प्रदायिन्यै नमः** — வாஞ்சி தார்த்த ப்ரதாயின்யை நம: — விரும்பிய பொருளைத் தருபவள். மற்ற தேவர்கள் போலல்லாமல், தேவி தனது சரணத்தாலேயே பக்தர் விரும்புவதை விட அதிகமான பலனைத் தருகிறவள். "த்வதன்ய" என்ற ஸௌந்தர்ய லஹரீ ஶ்லோகம் இதை விளக்குகிறது.

990. **अभ्यासातिशय ज्ञातायै नमः** — அப்யாஸாதி ஶய க்ஞாதாயை நம: — அப்யாஸத்தின் பெருக்கினால் அறியத்தக்கவள். "தூங்கும் வரை, இறக்கும் வரை வேதாந்த விசாரத்தால் காலத்தைக் கழிக்கவேண்டும்." என்றபடி அடிக்கடி ப்ரும்ம வித்யா ஸ்வரூபிணியான தேவியை, த்யானம் செய்தால்தான் அவள் ஸ்வரூபத்தை அறியலாம்.

991. **षडध्वातीत रूपिण्यै नमः** — ஷடத்வாதித ரூபிண்யை நம: — ஆறு அத்வாக்களைக் கடந்த ரூபமுள்ளவள். தேவியின் உபாஸனையில் ஆறு வழிகள் கூறப்படுகின்றன. வர்ண - பத - மந்த்ர - கலா - தத்வ - புவன என்பனவாம். அ முதல் க்ஷ வரை உள்ள வர்ணங்களாலானது வர்ணாத்வா. பதங்களாலாகியது பதாத்வா. மந்த்ரங்களாலாகியது மந்த்ராத்வா. கலைகளாலானது கலாத்வா. தத்வங்களாலாகியது தத்வாத்வா. புவனங்களாலாகியது புவனாத்வா எனப்படும். இவைகளில் வர்ண பத மந்த்ர எனும் மூன்று அத்வாக்கள் ஶப்த ரூபமானவை. ஆதலால் விமர்ஶவடிவமான தேவியின் அம்சங்களாம். கலா, தத்வ, புவன என்ற மூன்றும் ஶப்தத்தின் அர்த்த ஸ்வரூபமானவை. ப்ரகாசமெனும் ஶிவாம்ஶங்கள். இவ்விரண்டு வகையான ஆறு அத்வாக்களுக்கு மேலானவள். (2) ஶிவ, விஷ்ணு, துர்க்கா, ஸூர்யன், விநாயகர், சந்த்ரன் என்ற ஆறு தேவதைகளின் உபாஸனை ஷடத்வா எனப்படும். இவ்வாறு உபாஸனைகளைச் செய்தவருக்கு அடுத்த ஜன்மாவில் அம்பிகை உபாஸனை கிடைக்கும். ஆதலால் ஆறு அத்வாக்களைத் தாண்டினவள்.

992. **अव्याजकरुणामूर्तये नमः** — அவ்யாஜ கருணா மூர்த்தயே நம: — அவ்யாஜ கருணைவடிவமானவள். வ்யா

ஜம் என்றால் கபடம், பக்ஷபாதம், சூது என்று பொருள். இவைகளை விட்டு பக்தர்களுக்குக் கருணை செய்பவள்.

993. **अज्ञानध्वान्त दीपिकायै नमः** — அக்ஞான த்வாந்த தீபிகாயை நம: — அக்ஞான இருளை நீக்கும் தீபம். முன் நாமாவிற்குப் பின் இந்த நாமா அமைந்தது. அவ்யாஜ கருணாமூர்த்தியாக இருந்து பக்தர்களின் அக்ஞானத்தை அகற்றுகிறாள் தேவி என்பதைக் குறிக்கின்றது. அப்படி இருப்பதால்தான் தேவி அடுத்த நாமா கூறுகிறபடி ஸகலராலும் அறியப்படுகிறாள்.

994. **आपालगोप विदितायै नमः** — ஆபால கோப விதிதாயை நம: — சிறுவர் இடையர் முதல் எல்லோராலும் அறியப் பட்டவள். குழந்தைகளும் இடையர்களும் உலக சாஸ்த்ர க்ஞானம் இல்லாதவர்கள். அவர்கள் முதல் எல்லோராலும் அன்னை வடிவமாக நன்கு அறியப் பட்டவள்.

995 **सर्वानुल्लङ्घ्य शासनायै नमः** — ஸர்வானுல்லங்க்ய ஶாஸனாயை நம: — எல்லோராலும் மீற முடியாத கட்டளையை உடையவள். மும்மூர்த்திகளே அம்பிகையின் ஆணையை மீறாமல் தம்தம் கார்யங்களைச் செய்கிறார்கள் என்றால், மற்றவர்களைப்பற்றி கூறவேண்டுமா? "ஜகத் ஸூதே" என்ற ஸௌந்தர்யலஹரீ ஶ்லோகம் இந்த கருத்தை விவரிக்கின்றது.

996. **श्रीचक्रराजनिलयायै नमः** — ஸ்ரீ சக்ரராஜ நிலயாயை நம: — ஸ்ரீ சக்ரத்தை இருப்பிடமாக உடையவள். நமது உடலில் ஜீவன் இருப்பதுபோல், ஸ்ரீ சக்ரத்தில் தேவி இருக்கிறாள். ஸ்ரீ சக்ரம் ஶிவனுக்கும் அன்னைக்கும் உடல். ஸகல சக்ரங்களிலும் சிறந்த பிந்து த்ரிகோண வடிவமான ஸ்ரீ சக்ர ராஜத்தில் இருப்பவள் என்று பொருள்.

997. **श्रीमत् त्रिपुरसुन्दर्यै नमः** — ஸ்ரீமத் த்ரிபுர ஸுந்தர்யை நம: — ஸ்ரீமதியாகவும் த்ரிபுரரின் மனைவியாகவும் இருப்பவள். ப்ரும்மா, விஷ்ணு, சிவன் இவர்கள் பரம

சிவனிடம் தங்கி இருப்பதால் அவர் த்ரிபுரன் எனப் படுகிறார்.

998. **श्रीशिवायै नमः** – ஸ்ரீ ஶிவாயை நம: –ஸ்ரீயுள்ள ஶிவா. ஶிவ பத்னியானதாலும், மங்கள ரூபிணி யான தாலும் தேவி ஶிவா என்னப்படுகிறாள். ஸ்ரீ என்பது அதற்கு அடைமொழியாகவும் ஸ்ரீ உள்ளவள் என்றும் பொருள் உள்ளது.

999. **शिवशक्त्यैक्य रूपिण्यै नमः** – ஶிவஶக்த்யைக்ய ரூபிண்யை நம: — ஶிவன் ஶக்தி இருவர்களின் ஐக்யத் தையே ரூபமாக உடையவள். எள்ளும் எண்ணெயும் போல், சந்த்ரனும் சந்த்ரிகையும் போல், அக்னியும் உஷ்ணமும் போல், வாக்கும் அர்த்தமும் போல், தேவி யும் தேவனும் ஒன்றாக இருப்பவர்கள். (2) ஸ்ரீ சக்ர ரதத்தி லுள்ள ஶிவ சக்ரம், ஶக்தி சக்ரம் என்ற இரண்டின் ஐக்ய ரூபமானவள். ஸ்ரீ சக்ரத்தில் மேல் நோக்கியுள்ள 4 முக் கோணம் ஶிவ சக்ரமாம். கீழ் நோக்கி யுள்ள 5 ஶக்தி சக்ரமாம். "சதுர்பி" என்ற ஸௌந்தர்யலஹரீ ஶ்லோ கம் இதை விவரமாக வர்ணிக்கின்றது. (3) ஶிவஶக்தி களின் ஐக்யத்தைக் கூறும் ஹம்ஸ மந்த்ரமாக இருப்ப வள். (4) ஶிவனது ஶக்திகளுடைய ஐக்ய ரூபமானவள். தூமாவதி, ஹ்லாதா, பாஸ்வதி, ஸ்பந்தா, விப்வீ என்ப வைகள் ஶிவனது ஶக்திகளாம். இவைகளில் தூமாவதீ பூமியிலும், ஹ்லாதா ஜலத்திலும், பாஸ்வதீ தேஜஸ் ஸிலும், ஸ்பந்தா வாயுவிலும், விப்வீ ஆகாசத்திலும் இருக்கும் ஶக்திகள். இவை உலகில் எங்கும் பரவியிருக் கின்றன.

இந்த ஸஹஸ்ரநாமத்தில் ஸ்ரீமாதா, ஸ்ரீமஹாராக்ஞீ, ஸ்ரீமத் ஸிம்மாஸனேஸ்வரீ ஆகிய இம் மூன்று நாமாக் களால் ஜகத்ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்று கர்மாக்கள் கூறப்பட்டன. "சிதக்னிகுண்ட ஸம்பூதா" முதல் "ஶிவ ஶக்த்யைக்ய ரூபிணீ" வரை திரோதான, அனுக்ரஹங்களைக் கூறி இந்த பஞ்ச க்ருத்தியங்களைச் செய்யும் ஶக்தி மற்ற தேவர்களுக்கு இல்லை. தேவிக்கே

உண்டு எனக்காட்ட **லலிதாம்பிகா** என்ற சொல் மகுடமாக அமைந்தது.

1000. **ललितांबिकायै नमः** — லலிதாம்பிகாயை நம: — லலிதையாகவும், அம்பிகையாகவும் இருக்கிறவள். லாலனம் செய்வது எனில் குழந்தைகளை அன்போடு விளையாட்டுக் காட்டி ஆதரிப்பது என்று பொருள். உலகெனும் குழந்தையை அங்ஙனம் லாலனம் செய்யும் தாயானதால் தேவி **லலிதாம்பிகா** எனப்படுகிருள். (2) ஸகல சக்ரங்களையும் தாண்டி பிந்து ஸ்தானத்தில் அழகாக இருப்பவள். (3) இன்பம் ஊட்டும் தாய். (4) ஶ்ருங்கார ரஸ ப்ரதானமான தேவி. (5) ப்ரயாகை க்ஷேத்ரத்தில் லலிதாம்பிகை என்ற பெயருடன் இருப்பவள்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் ஸம்பூர்ணம்.

---

## ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பலச்ருதி.

இந்த லலிதா ஸஹஸ்ரநாமம் மிக ரஹஸ்யமானது. லலிதைக்கு இன்பமூட்டுவது. இதற்கு ஈடு இல்லை. ஸகல நோய்களையும் அகற்றும். ஸர்வ ஜ்வரங்களையும் நீக்கும். நீண்ட ஆயுளையும் புத்ரனையும், தர்ம, அர்த்த, காம, மோக்ஷங்களையும் அளிக்கும். தேவிக்கு இது மிக ப்ரியமானதால், நித்யம் பாராயணம் செய்ய வேண்டும். காலைக்கடனை முடித்து, ஸ்ரீ சக்ர பூஜை செய்யவேண்டும். மூல மந்த்ரத்தை 1000, அல்லது 300, அல்லது 100 முறை ஜபம் செய்து, ஸஹஸ்ரநாம பாராயணம் செய்ய வேண்டும். ஜன்ம மத்தியில் ஒரு முறை படித்தாலும், கோடி ஜன்மாக்களில் கங்காதி புண்ய தீர்த்தங்களில் புனலாடிய புண்யமும், காசியில் கோடிலிங்க ப்ரதிஷ்டை செய்த புண்யமும், குரு க்ஷேத்திரத்தில் ஸூர்ய க்ரஹணத்தில் நல்ல பாத்ரமான வேதியனிடம் கோடி ஸ்வர்ண பாத்ரத்தைக் கோடிமுறை கொடுத்த புண்யமும், கோடி அச்வமேத புண்யமும், ஜலமில்லா விடத்தில் கோடி கிணறு வெட்டியபுண்யமும், துர்பிக்ஷ காலத்தில் ஆயிரம் ஆண்டு ப்ரதிதினம் கோடி ப்ராம்மண போஜனம் செய்த புண்யமும் கோடி மடங்கு அதிகமாக உண்டாகும்.

இதில் ஒரு நாமாவைப் படித்தாலும் மஹா பாபங்கள் அகலும். நித்ய கர்மாவை விட்டுப் பாபத்தைச் செய்ததால் உண்டாகும் பாபத்தைப்போக்கும். அகஸ்த்யரே! அதிகம் கூறுவதேன்? இதில் ஒரு நாமா எவ்வளவு பாபத்தை அகற்றுமோ அவ்வளவு பாபம் செய்ய 14 உலகிலுள்ளவர்களாலும் இயலாது. பாபம் அகல இதைவிட்டு வேறொரு உபாயம் தேடுபவன், குளிரை நீக்கப் பனிமலை செல்வது போலாகும். பக்தன் இதை நித்யம் படித்தால் லலிதா தேவி ஸந்தோஷமடைந்து வேண்டிய வரனைத் தருகிறாள். இதைப் படிக்காதவன் பக்தனல்ல. நித்யம் படிக்கமுடியாதவர் புண்ய தினமான ஸங்க்ராந்தி, விஷு, தனது ஜன்மநக்ஷத்ரம் முதலிய காலங்களில், விசேஷமாக பௌர்ணமியில் பாராயணம் செய்யவேண்டும்.

இது ஸர்வ ரோகங்களேயும் அகற்றி நீண்ட ஆயுளேத் தரும் என கல்பங்கள் கூறுகின்றன. ஜ்வரம் உள்ள வனது தலேயைத் தொட்டுக்கொண்டு இதைப்பாராயணம் செய்தால், உடனே ஜ்வரம் அகலும். விபூதியில் ஜபித்து அளித்தால், ஸர்வ ரோகங்களும் நீங்கும். தீர்த்த கலசத் தைத் தொட்டுக்கொண்டே ஜபித்து, அதை அபிஷேகம் செய்வித்தால் கிரஹங்களாலுண்டாகும் துன்பம் அகலும். அம்ருதக்கடலின் இடையில் தேவியைத்யானம் செய்து இதை ஜபித்தால் விஷம் அகலும். வெண்ணேயில் இதை ஜபித்து அளித்தால் மலடுகூட ப்ரஸவிப்பாள். தேவி யின் பாசத்தால் கட்டுப்பட்டு அங்குசத்தால் இழுக்கப்படு வதாக த்யானம் செய்து ராத்ரியில் இதை ஜபித்தால் நமது இஷ்டமானவர் எங்கிருந்தாலும் நமக்கு வச்யமாகி அருகில் வருவர்.

அரசனே வச்யம் செய்ய அவன் வஸிக்கும் திக்கில் உட்கார்ந்து தேவியை த்யானம் செய்து இதை மூன்று நாள் பாராயணம் செய்தால், அரசன் பரவசனுகி, அருகே வருவான். இந்த ரஹஸ்ய ஸஹஸ்ரநாமத்தை நித்யம் ஜபம் செய்தால் நம் முகத்தைப் பார்த்தவுடன் மூன்றுலோகமும் மோஹமடையும். ஒரு முறை பக்தி யுடன் படித்தால் நமது சத்ருவைச் சரபேச்வரர் நாசம் செய்வார்.

இதைப் பாராயணம் செய்பவர் மீது எவரேனும் ஆபிசாரம், சூன்யம் முதலியவைகளேச் செய்தால், ப்ரத்யங்கிரா என்ற தேவி அதைச் செய்தவன்மீதே திருப்பி அவனேக்கொல்வாள். இதைப் பாராயணம் செய்பவனே எவன் க்ரூரமான கண்ணுல் பார்க்கிருனே அவனே மார்த்தாண்ட பைரவர் குருடனுகச் செய்கிருர். ஸஹஸ்ரநாம பாராயணம் செய்பவரது பொருளே எவ ரேனும் திருடிச்சென்றுல், க்ஷேத்ர பாலர், எங்கு சென்று லும் அவனேத் தேடிக் கொல்வர். இப்பாராயணம் செய்பவருடன் எவரேனும் வாதத்திற்கு வந்தால் நகுலீச் வரீ அவரது வாக்கை ஸ்தம்பிக்கும்படி செய்வாள்.

எந்த அரசன் பாராயணம் செய்பவரைப் பகைக்கி ருனே அவனது நால்வகை ஸேனேயையும் தண்டினீ தேவி

தானே அழிக்கிருள். ஆறு மாதம் விடாமல் இதைப் பாராயணம் செய்தால், லக்ஷ்மி அவன் வீட்டைவிட்டு அசையாமல் ஸ்திரமாக இருப்பாள். ஒரு மாதம் தினம் மும்முறை இதைப் பாராயணம் செய்தால், ஸரஸ்வதி நம் நாக்கில் தாண்டவமாடுவாள். ஒரு பக்ஷம் சோம்பலின்றி தினம் ஒரு முறை இதைப் பாராயணம் செய்தால் பெண்கள் இவனைக்கண்டு மோஹிப்பார்கள். நம் வாழ்நாளில் ஒரு முறை ஸஹஸ்ரநாம பாராயணம் செய்தால், நம்மைப்பார்த்தவரது பாபங்கள் எல்லாம் அகலும். இந்த ஸஹஸ்ர நாமத்தை அறிந்த ப்ராம்மணனுக்குத் தான் அன்னம், வஸ்த்ரம், தனம், தான்யம் முதலியவைகளைத் தரவேண்டும். மற்றவர்களுக்குக் கொடுக்கக்கூடாது. மந்த்ர ராஜத்தை (ஸ்ரீ வித்யையை) அறிந்தவனும், ஸ்ரீ சக்ரத்தைப் பூஜை செய்பவனும், ஸஹஸ்ரநாம பாராயணம் செய்பவனுமே ஸத்பாத்ரமாகும். தேவியின் அருளை விரும்புபவர் இத்தகையவர்க்கே தானம் செய்யவேண்டும். நாம பாராயணம் செய்யாதவன், மந்த்ர ராஜம் அறியாதவன் ம்ருகத்திற்கு ஸமமாவான். அவனுக்குச் செய்யும் தானம் வீணுகும். ஆதலின் ஸ்ரீவித்யை உள்ளவனைத்தேடி, அதிலும் சிறந்தவனுக்கே தானம் செய்யவேண்டும். ஸ்ரீ மந்த்ர ராஜத்திற்கு ஸமமான மந்த்ரமும், ஸ்ரீலலிதா தேவிக்கு ஸமமான தேவதையும், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திற்கு ஸமமான வேறு ஸஹஸ்ர நாமமும் இடையாது. இதைத் தன் கையால் எழுதி, ஸதா பக்தியுடன் அர்ச்சனை செய்பவரிடம் தேவி மிக ஸந்தோஷமடைகிருள். அதிகம் கூறுவதேன்? இதற்கு ஸமமானது எந்த தந்த்ரத்திலும் இல்லை. ஆதலால் தேவி உபாஸகர் நித்யம் இதை ஆதரவுடன் பாராயணம் செய்யவேண்டும்.

இந்த ஸஹஸ்ர நாமாக்களால், ஸ்ரீ சக்ரத்தைத் தாமரை, துளஸீ, செங்கழிநீர் புஷ்பம், கதம்பம், சம்பகம், ஜாதி புஷ்பம், மல்லிகை, அரளி, நெய்தல், பில்வம், முல்லை, குங்குமப்பூ, பாடலீ, தாழை, வாஸந்தி முதலிய புஷ்பங்களில் எதனுலாவது ஒன்ருல் அர்ச்சித்தால் அந்த புண்யத்தைக்கூற மஹேச்வரனுல் கூடமுடியாது.

அந்த லலிதா தேவி ஒருவளே ஸ்ரீ சக்ர ராஜ அர்ச்சனை யின் பலனை அறிவாள். ஸ்வல்ப அறிவுள்ள ப்ரும்மா முதலியவர் எங்ஙனம் இதை அறிவர்? மாதந்தோறும் பௌர்ணமியில் சக்ர ராஜத்திலுள்ள பரதேவதையையே இந்த ஸஹஸ்ர நாமாக்களால், அர்ச்சிக்கவேண்டும். அப்படி பூஜிப்பவரே ஸ்ரீ லலிதா தேவி. ஸ்ரீ லலிதா தேவியே அர்ச்சிப்பவர். இவ்விருவருக்கும் பேதமில்லை. பேதத்தை நினைப்பவர் பாபம் செய்பவராவர். நவ ராத்ரி மஹாநவமியில் ஸ்ரீ சக்ரத்தில் தேவியை ஸஹஸ்ர நாமத்தால் அர்ச்சிக்கும் பக்தனுக்கு முக்தி கை மீது உளது. சுக்ரவாரத்தில் ஸ்ரீ சக்ரத்தில் தேவியை ஸஹஸ்ர நாமத்தால் பூஜிப்பவர் புண்யத்தைக் கேள். ஸர்வ விருப்பங்களையும் பெற்று, ஸர்வ ஸௌபாக்யமும் உள்ளவனாகி, புத்ர பௌத்ராதிகளுடன் விரும்பிய போகத்தை அனுபவித்து முடிவில் சிவன் முதலியவர் களால் வேண்டப்படுவதும், கிடைக்கத்தகாததுமான ஸாயுஜ்யத்தைப் பெறுவான்.

இந்த ஸஹஸ்ர நாமாக்களால் பக்தியுடன் ஆயிரம் ப்ராம்மணர்களைப் பூஜை செய்து, அறுசுவை அன்னம் அளித்தால், ஸ்ரீ லலிதா தேவி பரம ஸந்தோஷமடைந்து தனது ஸாம்ராஜ்யத்தைத் தருகிறாள். அவனுக்கு மூவ் வுலகிலும் கிடைக்காதவஸ்து கிடையாது. காமனையின்றி பாராயணம் செய்பவர் ஆத்ம க்ஞானம் பெற்று பந்தத்தி லிருந்து விடுபட்டு முக்தி அடைவர். இந்த நாம பாரா யணத்தால் தனம், யசஸ், வித்யை முதலிய விரும்பிய தைப் பெறுவர். போகத்தையும் மோக்ஷத்தையும் சேர்த் துக் கொடுக்கும் இதற்கு ஸமமானது வேறில்லை, போக மோக்ஷங்களை விரும்புபவர் இதைப் பாராயணம் செய்ய வேண்டும். தான் செய்துவரும் தர்மத்தில் குறைவு ஏற்படாமலிருக்க நான்கு ஆச்ரமத்திலுள்ளோரும் இதைப் பாராயணம் செய்யவேண்டும். பாபம் நிறைந்து தர்ம அனுஷ்டான மில்லாததால் இந்த கலியுகத்தில் நாம பாராயணத்தைவிட வேறு சிறந்த வழியில்லை. உலகி லுள்ள ஸ்துதிகளைவிட ஸ்ரீ விஷ்ணு நாமாவைக்கூறுவது மிகச் சிறந்தது. விஷ்ணு ஸஹஸ்ர நாமாக்களைவிட

சிவனின் ஒரு நாமா மிகச்சிறந்தது. சிவனது ஸஹஸ்ர நாமாக்களைவிட தேவியின் ஒரு நாமா மிகச்சிறந்தது. தேவியின் ஸஹஸ்ர நாமம் கோடிக்கணக்காக இருக்கின்றது. அவைகளில் மிகச் சிறந்தது 10. அந்த பத்து ஸஹஸ்ர நாமங்களிலும் இந்த ரஹஸ்ய ஸஹஸ்ர நாமம் மிகச் சிறந்தது. மோஹமடைந்தவர் தேவியின் ஸஹஸ்ர நாமாவே சிறந்தது என அறிவதில்லை. விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தைச் சிலரும், சிவ ஸஹஸ்ர நாமத்தைச் சிலரும் பாராயணம் செய்வர். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமாவைப் பாராயணம் செய்பவர் ஒருவர் கூட இல்லை. (அதிகமில்லை என்று பொருள்). தேவியின் வித்யை, ஆசாரம், இவைகளை அறிந்தவர் எப்படி மிகதுர்லபமோ அப்படியே ஸ்ரீ தேவியின் ரஹஸ்யமான இந்த ஸஹஸ்ர நாமத்தைப் படிப்பவர் மிக ஸ்வல்ப மானவர்களே. மந்த்ர ராஜ ஜபம், சக்ரராஜ பூஜை, லலிதா ஸஹஸ்ர நாம பாராயணம் இவை அளவிட முடியாத புண்யத்தால் ஏற்படும் பலன். ஸஹஸ்ர நாம பாராயணம் செய்யாமல் தேவி பூஜை செய்வது கண்ணில்லாமல் உருவைப் பார்ப்பது போலாம். இந்த ஸஹஸ்ர நாமாவை விட்டு ஸித்தி அடைய முயற்சிப்பது உண்ணுமல் பசியை அகற்றுவது போலாம். ஸ்ரீ லலிதா தேவியின் பக்தன் நித்யம் இதைப் பாராயணம் செய்யவேண்டும். இல்லையேல், நூறுகோடி கல்பமானாலும் தேவி ஸந்தோஷப்படமாட்டாள். ஆதலால் இதை அடக்கத்துடன் பாராயணம் செய்யவேண்டும்.

அகஸ்த்யரே, இங்ஙனம் உமக்கு ரஹஸ்ய ஸஹஸ்ர நாமத்தைக் கூறினேன். இதை ஸ்ரீவித்யை இல்லாதவனுக்கும், பக்தி இல்லாதவனுக்கும் சொல்லக்கூடாது. ஸ்ரீ வித்யை எப்படி மிக ரஹஸ்யமாக ரக்ஷிக்கத்தக்கதோ அப்படி இதுவும் மிக ரஹஸ்யமாக ரக்ஷிக்கத்தக்கதாம். ஆசாரமின்றி பசுபோல் இருப்பவர்க்கு இந்த உத்தம ஸ்தோத்திரத்தைக் கூறக்கூடாது. **ஸ்ரீ வித்யை இல்லாதவருக்கு இந்த லலிதா ஸஹஸ்ர நாமத்தை உபதேசிப்பவன் மூடன். யோகினிகள் அவன் மீது கோபங்கொள்வர். பலவகையான அனர்த்தங்கள் ஏற்படும்.** ஆதலால் இதை நன்கு ரஹஸ்யமாக ரக்ஷிக்கவேண்டும். அகஸ்த்

யரே! நான் உமக்கு தானுகவே என் இஷ்டபடி இதைக் கூறவில்லை. ஸ்ரீ லலிதா தேவியின் உத்திரவினுல்தான் கூறினேன்.

இதைப் பக்தியுடன் இடைவிடாமல் பாராயணம் செய்தால் தேவி ஸந்தோஷமடைந்து. இஷ்டமானதைத் தருவள். ஸூதர் கூறினுர். இங்ஙனம் ஸ்ரீ ஹயக்ரீவர் அகஸ்த்ய மஹரிஷிக்கு இந்த உத்தமமான ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தைக் கூறிமுடித்து, ஸ்ரீ லலிதாம்பிகையை மனதால் நினைத்து ஆனந்தத்தில் முழுகின மனமுள்ளவராகவும், மயிர்க்கூச்சல் உள்ளவராகவும் ஆனுர்.

ப்ரும்மாண்ட புராணத்தில் ஸ்ரீ லலிதோபாக்யானத்தில்
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்.
ஸ்ரீ பரா பட்டாரிகாயை நம:
ஸ்ரீ வித்யா ஸம்ப்ரதாய கர்த்தாவான
ஸ்ரீ பாஸ்கர ராயருக்கு நமஸ்காரம்.
ஸ்ரீரஸ்து...மங்களானி ஸந்து.
ப்ரும்மார்ப்பணம்.
ஓம் தத்ஸத்.

---

# ஸ்ரீ லலிதா அஷ்டோத்தரம்.

1. रजताचल शृङ्गाग्र मध्यस्थायै नमो नमः *ரஜதாசல ஶ்ருங்காக்ர மத்யஸ்தாயை நமோ நம: — வெள்ளி மலையின் சிகர நடுவில் இருப்பவளுக்கு நமஸ்காரம்.*

2. हिमाचल महावंश पावनायै नमो नमः *ஹிமாசல மஹாவம்ஶ பாவனாயை நமோ நம: — ஹிமவான் என்ற பர்வத ராஜனின் உயர்ந்த வம்ஶத்தை பரிசுத்தம் செய்தவள்.*

3. शङ्करार्धाङ्ग सौन्दर्य शरीरायै नमो नमः *ஶங்கரார்தாங்க ஸௌந்தர்ய ஶரீராயை நமோ நம: — ஸ்ரீ சங்கருடைய பாதி சரீரத்திற்கு அழகைக் கொடுக்கும் சரீரத்தை உடையவள்.*

4. लसन्मरकत स्वच्छ विग्रहायै नमो नमः *லஸன் மரகத ஸ்வச்ச விக்ரஹாயை நமோ நம: — ப்ரகாசிக்கும் மரகத மணியைப்போல அழகான தேஹமுடையவள்.*

5. महातिशय सौन्दर्य लावण्यायै नमो नमः *மஹாதிஶய ஸௌந்தர்ய லாவண்யாயை நமோ நம: — மிகவும் அதிசயிக்கத்தக்க அழகை உடையவள்.*

6. शशाङ्क शेखर प्राणवल्लभायै नमो नमः *ஶஶாங்க ஶேகர ப்ராண வல்லபாயை நமோ நம: — சந்த்ர சேகரனுக்கு உயிர்போல் ப்ரியமானவள்.*

7. सदा पञ्चदशात्मैक्य स्वरूपायै नमो नमः *ஸதா பஞ்சதஶாத்மைக்ய ஸ்வரூபாயை நமோ நம: — பஞ்சதஶாக்ஷரியில் ஐக்யமான சரீரத்தை உடையவள். அதன் வடிவமாகவே இருப்பவள்.*

8. वज्र माणिक्य कटक किरीटायै नमो नमः *வஜ்ர மாணிக்ய கடக கிரீடாயை நமோ நம: — வைரம், மாணிக்கம், தங்கம் இழைத்ததான கிரீடம் உடையவள்.*

9. कस्तूरी तिलकोद्भासि निटिलायै नमो नमः கஸ்தூரீ திலகோத்பாஸி நிடிலாயை நமோ நம: — கஸ்தூரி திலகத்தால் ப்ரகாசிக்கும் நெற்றியைஉடையவள்.

10. भस्म रेखाङ्कित लसन्मस्तकायै नमो नमः பஸ்மரேகாங்கித லஸன்மஸ்தகாயை நமோ நம: — விபூதி ரேகையால் அழகான நெற்றியை உடையவள்.

11. विकचांभोरुह दल लोचनायै नमो नमः விகசாம்போருஹ தள லோசனுயை நமோ நம: — மலர்ந்த தாமரை இதழ்போன்ற கண்களை உடையவள்.

12. शरच्चांपेय पुष्पाभ नासिकायै नमो नमः ஶரச்சாம்பேய புஷ்பாப நாஸிகாயை நமோ நம: ஶரத்காலத்தில் மலர்ந்த சண்பக புஷ்பம் போன்ற மூக்கை உடையவள்.

13. लसत्कनक ताटङ्क युगलायै नमो नमः லஸத்கனக தாடங்க யுகளாயை நமோ நம: — ப்ரகாசிக்கின்ற ஸ்வர்ண இரு தாடகங்களை உடையவள்.

14 मणिदर्पण संकाश कपोलायै नमो नमः மணிதர்ப்பண ஸங்காஶ கபோலாயை நமோ நம: —ரத்னக் கண்ணடிபோல் ப்ரகாசிக்கின்ற கன்னம் உடையவள்.

15. तांबूल पूरित स्मेर वदनायै नमो नमः தாம்பூல பூரித ஸ்மேர வதநாயை நமோ நம: — தாம்பூலத்தால் நிறைந்து, புன்சிரிப்புள்ள முகமுடையவள்.

16. सुपक्व दाडिमीबीज रदनायै नमो नमः ஸுபக்வ தாடிமீ பீஜ ரதனுயை நமோ நம: - நன்கு பழுத்த மாதுளை முத்து போன்ற பற்களை உடையவள்.

17. कंबुपूग समच्छाय कंधरायै नमो नमः கம்புபூக ஸமச்சாய கந்தராயை நமோ நம: — வலம்புரி சங்கம் போன்ற காந்தியுள்ள கழுத்தை உடையவள்.

18. स्थूल मुक्ताफलोदार सुहारायै नमो नमः ஸ்தூல முக்தா பலோதார ஸுஹாராயை நமோ நம: — பெரிய முத்து பவழங்களால் ப்ரகாசிக்கும் அழகான மாலையை உடையவள்.

19. गिरीश बद्ध माङ्गल्य मङ्गलायै नमो नमः கிரீஶபத்த மாங்கல்ய மங்களாயை நமோ நம: — பரமசிவனால் கட்டப்பட்ட மங்கள ஸூத்ரமுடையவள்.

20. पद्मपाशाङ्कुश लसत्कराब्जायै नमो नमः பத்ம பாஶாங்குஶ லஸத்கராப்ஜாயை நமோ நம: — தாமரை, பாசம், அங்குசம் முதலியவைகளால் ப்ரகாசிக்கும் கைகளை உடையவள்.

21. पद्मकैरव मन्दार सुमालिन्यै नमो नमः பத்ம கைரவ மந்தார ஸுமாலின்யை நமோ நம: — தாமரை, ஆம்பல், மந்தாரபுஷ்பங்களாலான அழகிய மாலை அணிந்தவள்.

22. सुवर्णकुम्भ युग्माभ सुकुचायै नमो नमः ஸுவர்ணகும்ப யுக்மாப ஸுகுசாயை நமோ நம: — தங்கக்குடம் போல் ப்ரகாசிக்கும் இருஸ்தனங்களையுடையவள்.

23. रमणीय चतुर्बाहु संयुक्तायै नमो नमः ரமணீய சதுர்பாஹு ஸம்யுக்தாயை நமோ நம: — வெகு அழகான நான்கு கைகளுடன் கூடியவள்.

24. कनकाङ्गद केयूर भूषितायै नमो नमः கநகாங்கத கேயூர பூஷிதாயை நமோ நம: — தங்கத்தாலான தோள் வளை முதலான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவள்.

25. बृहत्सौवर्ण सौन्दर्य वसनायै नमो नमः ப்ருஹத் ஸௌவர்ண ஸௌந்தர்ய வசநாயை நமோ நம: -விசாலமானதும், ஸ்வர்ணம்போல் அழகானதுமான வஸ்த்ரம் தரித்தவள்.

26. **बृहन्नितंब विलसत् जघनायै नमो नमः** ப்ருஹந்நிதம்ப விலஸத் ஜகனுயை நமோ நம: — பெரியதாயும், விசாலமாயும். ப்ரகாசத்தோடு கூடியதுமான சரீரத்தின் இடைப்ரதேசத்தை உடையவள்.

27. **सौभाग्य जात शृङ्गार मध्यमायै नमो नमः** ஸௌபாக்ய ஜாத ஶ்ருங்கார மத்யமாயை நமோ நம: — அழகிலிருந்து உண்டான ஶ்ருங்காரமான இடையை உடையவள்.

28. **दिव्यभूषण संदोह रञ्जितायै नमो नमः** திவ்ய பூஷண ஸந்தோஹ ரஞ்ஜிதாயை நமோ நம: — திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவள்.

29. **पारिजात गुणाधिक्य पदाब्जायै नमो नमः** பாரிஜாத குணதிக்ய பதாப்ஜாயை நமோ நம: – பாரிஜாதத்தைவிட அதிகமான குணமுள்ள பாதமுடையவள்.

30. **सुपद्मराग संकाश चरणायै नमो नमः** ஸுபத்மராக ஸங்காஶ சரணுயை நமோ நம: — பத்மராகத்திற்கு ஸமமான சரணங்களை உடையவள்.

31. **कामकोटि महापद्म पीठस्थायै नमो नमः** காமகோடி மஹாபத்ம பீடஸ்தாயை நமோ நம: — காமகோடி மஹா பத்மபீடத்தில் இருப்பவள்.

32. **श्रीकण्ठनेत्र कुमुद चन्द्रिकायै नमो नमः** ஸ்ரீகண்டநேத்ர குமுத சந்திரிகாயை நமோ நம: — நீலகண்டனது கண்ணை ஸந்தோஷப்படுத்துபவள்.

33. **सचामर रमा वाणी वीजितायै नमो नमः** ஸசாமர ரமா வாணீ விஜிதாயை நமோ நம: — லக்ஷ்மியாலும் ஸரஸ்வதியாலும் சாமரம் வீசப்படுபவள்.

34. **भक्तरक्षण दाक्षिण्य कटाक्षायै नमो नमः** பக்தரக்ஷண தாக்ஷிண்ய கடாக்ஷாயை நமோ நம: – பக்தர்களைக் காக்கும் கடாக்ஷம் வாய்ந்தவள்.

35. भूतेशालिङ्गनोद्भूत पुलकाङ्ग्यै नमो नमः பூதேஶாலிங்க ஞோத்பூத புலகாங்க்யை நமோ நம: – சிவனுடைய ஆலிங்கனத்தால் மயிர்க்கூச்சலுண்டானவள்.

36. अनङ्गजनकापाङ्ग वीक्षणायै नमो नमः அனங்க ஜனகா பாங்க வீக்ஷணாயை நமோ நம: — மன்மதனை உண்டுபண்ணும் கடைக்கண் உடையவள்.

37. ब्रह्मोपेन्द्रशिरोरत्न रञ्जितायै नमो नमः ப்ரஹ்மோபேந்த்ர ஶிரோரத்ன ரஞ்ஜிதாயை நமோ நம: — ப்ரஹ்ம விஷ்ணுக்களின் கிரீட ரத்னத்தால் அலங்கரிக்கப் பட்டவள்.

38. शचिमुख्य अमरवधू सेवितायै नमो नमः ஶசீமுக்ய அமர வதூ ஸேவிதாயை நமோ நம: — இந்த்ராணி முத லிய தேவஸ்த்ரீகளால் ஸேவிக்கப்பட்டவள்.

39. लीलाकल्पित ब्रह्माण्ड मण्डलायै नमो नमः லீலாகல்பித ப்ரஹ்மாண்ட மண்டலாயை நமோ நம: –லீலையாக ப்ரும்மாண்டத்தைப் படைப்பவள்.

40. अमृतादि महाशक्ति संवृतायै नमो नमः அம்ருதாதி மஹா ஶக்தி ஸம்வ்ருதாயை நமோ நம: — அம்ரு தாதி மஹா ஶக்திகளால் சூழப்பட்டவள்.

41. एकातपत्र साम्राज्य दायिकायै नमो नमः ஏகாதபத்ர ஸாம்ராஜ்ய தாயிகாயை நமோ நம: – சக்ரவர்த்தி பதவியை அளிப்பவள்.

42. सनकादि समाराध्य पादुकायै नमो नमः ஸனகாதி ஸமா ராத்ய பாதுகாயை நமோ நம: — ஸனகாதிகளால் பூஜிக்கத்தக்க பாதங்களை உடையவள்.

43. कलशोद्भव दूर्वास पूजितायै नमो नमः கலஶோத்பவ தூர்வாஸ பூஜிதாயை நமோ நம: — அகஸ்த்யரா லும் தூர்வாஸராலும் பூஜிக்கப்பட்டவள்.

44. देवर्षिभिस्तूयमान वैभवायै नमो नमः தேவர்ஷி பிஸ்தூயமான வைபவாயை நமோ நம: — தேவரிஷிகளால் துதிக்கப்பட்ட மஹிமை உடையவள்.

45. मत्तेभवक्त्र षड्वक्त्र वत्सलायै नमो नमः மத்தேபவக்த்ர ஷட்வக்த்ர வத்ஸலாயை நமோ நம: — விநாயகரிடமும் ஸுப்ரஹ்மண்யரிடமும் அன்புள்ளவள்.

46. चक्रराज महायन्त्र मध्यवर्त्यै नमो नमः சக்ரராஜ மஹாயந்த்ர மத்யவர்த்யை நமோ நம: — ஸ்ரீ சக்ரத்தின் நடுவில் உள்ளவள்.

47. चिदग्निकुण्ड संभूत सुदेहायै नमो नमः சிதக்னிகுண்ட ஸம்பூத ஸுதேஹாயை நமோ நம: — சைதன்ய அக்னிகுண்டத்தில் உண்டானவள்.

48. शशाङ्क खण्ड संयुक्त मकुटायै नमो नमः ஶஶாங்க கண்ட ஸம்யுக்த மகுடாயை நமோ நம: — சந்த்ரனுடன் கூடிய கிரீடம் உடையவள்.

49. मत्तहंस वधूमन्द गमनायै नमो नमः மத்தஹம்ஸ வதூமந்த கமனாயை நமோ நம: — ஹம்ஸம்போன்ற நடையுள்ளவள்.

50. वन्दारुजन संदोह वन्दितायै नमो नमः வந்தாருஜன ஸந்தோஹ வந்திதாயை நமோ நம: — பக்த கணங்களால் நமஸ்கரிக்கப்பட்டவள்.

51. अन्तर्मुख जनानन्द फलदायै नमो नमः அந்தர்முக ஜனானந்த பலதாயை நமோ நம: — த்யானம் செய்வோருக்கு ஆனந்தம் அளிப்பவள்.

52. पतिव्रताङ्गनाभीष्ट फलदायै नमो नमः பதிவ்ரதாங்கனாபீஷ்ட பலதாயை நமோ நம: — கற்புள்ளவர் இஷ்டத்தை அளிப்பவள்.

53. अव्याज करुणापूर पूरितायै नमो नमः அவ்யாஜ கருணா பூர பூரிதாயை நமோ நம:— காரணமின்றி கருணை செலுத்துபவள்.

54. निरञ्जन चिदानन्द संयुक्तायै नमो नमः நிரஞ்ஜன சிதானந்த ஸம்யுக்தாயை நமோ நம: — பற்றற்ற பரப்ரும்மத்துடன் சேர்ந்தவள்.

55. सहस्र सूर्य संयुक्त प्रकाशायै नमो नमः ஸஹஸ்ர ஸூர்ய ஸம்யுக்த ப்ரகாஶாயை நமோ நம: — ஆயிரம் சூர்யன் போன்ற காந்தியுள்ளவள்.

56. रत्न चिन्तामणिगृह मध्यस्थायै नमो नमः ரத்ன சிந்தாமணிக்ருஹ மத்யஸ்தாயை நமோ நம: — ரத்ன சிந்தாமணி க்ருஹத்தில் இருப்பவள்.

57. हानिवृद्धि गुणाधिक्य रहितायै नमो नमः ஹானிவ்ருத்தி குணாதிக்ய ரஹிதாயை நமோ நம: — குறைதல் வளர்தல் முதலிய குணமற்றவள்.

58. महापद्माटवीमध्य निवासायै नमो नमः மஹாபத்மாடவீ மத்ய நிவாஸாயை நமோ நம: — தாமரை வனத்தின் நடுவில் இருப்பவள்.

59. जाग्रत्स्वप्न सुषुप्तीनां साक्षिभूत्यै नमो नमः ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்திநாம் ஸாக்ஷி பூத்யை நமோ நம: — விழித்தல் ஸ்வப்னம் தூங்குதல் இவைகளுக்கு ஸாக்ஷியாய் இருப்பவள்.

60. महातापौघ पापानां विनाशिन्यै नमो नमः மஹா தாபௌக பாபானும் விநாஶிந்யை நமோ நம: — தாபத்தை அளிக்கும் பாபத்தை நீக்குபவள்.

61. दुष्ट भीति महाभीति भञ्जनायै नमो नमः துஷ்டபீதி மஹாபீதி பஞ்ஜனயை நமோ நம: — துஷ்டர் பயம்முதல் மஹா பயங்களை நீக்குபவள்.

62. **समस्त देवदनुज प्रेरकायै नमो नमः** ஸமஸ்த தேவதனுஜ ப்ரேரகாயை நமோ நம: — எல்லா தேவாஸுரர்களையும் தூண்டுபவள்.

63. **समस्त हृदयांभोज निलयायै नमो नमः** ஸமஸ்த ஹ்ருதயாம்போஜ நிலயாயை நமோ நம: — எல்லோருடைய ஹ்ருதய தாமரையிலும் இருப்பவள்.

64. **अनाहत महापद्म मन्दिरायै नमो नमः** அநாஹத மஹாபத்ம மந்திராயை நமோ நம: — அநாஹதம் என்ற தாமரையில் இருப்பவள். (அநாஹத என்பது ஷட் சக்ரங்களில் ஒன்று.)

65. **सहस्रार सरोजात वासितायै नमो नमः** ஸஹஸ்ரார ஸரோஜாத வாஸிதாயை நமோ நம: — ஸஹஸ்ராரம் எனும் சிரஸிலுள்ள தாமரையிலிருப்பவள்.

66. **पुनरावृत्तिरहित पुरस्थायै नमो नमः** புநராவ்ருத்திரஹித புரஸ்தாயை நமோ நம: - மறுபடி திரும்பாத புரத்திலுள்ளவள். (ஸ்ரீநகரம் சென்றவர் திரும்ப மாட்டார்கள்.)

67. **वाणी गायत्री सावित्री संनुतायै नमो नमः** வாணீ காயத்ரீ ஸாவித்ரீ ஸம்நுதாயை நமோ நம: — ஸரஸ்வதி, காயத்ரீ, ஸாவித்ரிகளால் துதிக்கப் பட்டவள்.

68. **नीलारमा भू संपूज्य पादाब्जायै नमो नमः** நீலா ரமா பூ ஸம்பூஜ்ய பாதாப்ஜாயை நமோ நம: – நீலாதேவி, ஸ்ரீதேவி, பூதேவிகளால் பூஜிக்கத்தக்க பாதாரவிந்தமுள்ளவள்.

69. **लोपामुद्रार्चित श्रीमच्छरणायै नमो नमः** லோபாமுத்ரார்சித ஸ்ரீமச் சரணாயை நமோ நம: — லோபாமுத்ரையினால் பூஜிக்கப்பட்ட சரணமுடையவள்.

70. **सहस्र रति सौन्दर्य शरीरायै नमो नमः** ஸஹஸ்ர ரதி ஸௌந்தர்ய ஶரீராயை நமோ நம: — ஆயிரம் ரதிபோன்ற அழகுவாய்ந்தவள்.

71. भावनामात्र संतुष्ट हृदयायै नमो नमः பாவனுமாத்ர ஸம் துஷ்ட ஹ்ருதயாயை நமோ நம: – த்யானமாத்ரத் தால் ஸந்தோஷப்படுபவள்.

72. नतसंपूर्ण विज्ञान सिद्धिदायै नमो नमः நதஸம்பூர்ண விக் ஞானஸித்திதாயை நமோ நம: - வணங்குவோர்க்கு பூர்ண அறிவையும் ஸித்தியையும் அளிப்பவள்.

73. त्रिलोचन कृतोल्लास फलदायै नमो नमः த்ரிலோசன க்ருதோல்லாஸ பலதாயை நமோ நம: - சிவ விலாஸ முள்ளவருக்குப் பலனளிப்பவள்.

74. श्रीसुधाब्धि मणिद्वीप मध्यगायै नमो नमः ஸ்ரீ ஸுதாப்தி மணித்விப மத்யகாயை நமோ நம: — அம்ருதக் கடலிலுள்ள மணித்விபத்தில் இருப்பவள்.

75. दक्षाध्वर विनिर्भेद साधनायै नमो नमः தக்ஷாத்வர விநிர் பேத ஸாதனுயை நமோ நம: — தக்ஷயக்ஞத்தை அழிக்க ஸாதனமானவள்.

76. श्रीनाथ सोदरीभूत शोभितायै नमो नमः ஸ்ரீ நாத ஸோ தரீபூத ஶோபிதாயை நமோ நம: — விஷ்ணுவுக்கு ஸஹோதரியாய் ப்ரகாசிப்பவள்.

77. चन्द्रशेखर भक्तार्ति भञ्जनायै नमो नमः சந்த்ரஶேகர பக்தார்த்தி பஞ்சனுயை நமோ நம: — சிவபக்தர் களின் துன்பத்தை அகற்றுபவள்.

78. सर्वोपाधि विनिर्मुक्त चैतन्यायै नमो नमः ஸர்வோபாதி விநிர்முக்த சைதன்யாயை நமோ நம: — ஶுத்த சைதன்யமானவள்.

79. नाम पारायणाभीष्ट फलदायै नमो नमः நாம பாராயணு பீஷ்ட பலதாயை நமோ நம: — நாமபாராயணம் செய்வோர் இஷ்டத்தை அளிப்பவள்.

80. सृष्टि स्थिति तिरोधान संकल्पायै नमो नमः ஸ்ருஷ்டி ஸ்திதி திரோதான ஸங்கல்பாயை நமோ நம: — ஸங்கல்ப மாத்ரத்தால் ஸ்ருஷ்டி ஸ்திதி லயம் செய்பவள்.

81. **श्री षोडशाक्षरी मन्त्र मध्यगायै नमो नमः** *ஸ்ரீ ஷோடஶா க்ஷரீமந்த்ர மத்யகாயை நமோ நம: — ஷோடஶா க்ஷரீ மந்த்ரத்தின் நடுவில் இருப்பவள்.*

82. **अनाद्यन्त स्वयंभूत दिव्यमूर्त्यै नमो नमः** *அநாத்யந்த ஸ்வயம்பூத திவ்யமூர்த்யை நமோநம: ஆதிஅந்தம் இல்லாமல் தானே தோன்றிய தேஹமுள்ளவள்.*

83. **भक्त हंसवतीमुख्य नियोगायै नमो नमः** *பக்த ஹம்ஸவதி முக்ய நியோகாயை நமோ நம: — ஹம்ஸவதி முதலிய சக்திகளுக்கு ஆக்ஞை அளிப்பவள்.*

84. **मातृमण्डल संयुक्त ललितायै नमो नमः** *மாத்ருமண்டல ஸம்யுக்த லலிதாயை நமோ நம: — மாத்ருகாதேவி களுடன் கூடி அழகாயிருப்பவள்.*

85. **भण्डदैत्य महासत्व नाशनायै नमो नमः** *பண்டதைத்ய மஹாஸத்வ நாஶனாயை நமோ நம: — பண்டா ஸுரன் பலத்தை அழித்தவள்.*

86. **क्रूर भण्ड शिरश्छेद निपुणायै नमो नमः** *க்ரூர பண்ட ஶிரச்சேத நிபுணாயை நமோ நம: — க்ரூரனை பண்டன் தலையை அறுத்தவள்.*

87. **धराच्युत सुराधीश सुखदायै नमो नमः** *தராச்யுத ஸுரா திஶ ஸுகதாயை நமோ நம: — பூமி, விஷ்ணு, இந்த்ரன் இவர்களுக்கு ஸுகமளிப்பவள்.*

88. **चण्ड मुण्ड निशुंभादि खण्डनायै नमो नमः** *சண்ட முண்ட நிஶும்பாதி கண்டநாயை நமோ நம: — சண்டன், முண்டன் நிசும்பன் இவர்களைக் கண்டித்தவள்.*

89. **रक्ताक्ष रक्त जिह्वादि शिक्षणायै नमो नमः** *ரக்தாக்ஷ ரக்த ஜிஹ்வாதி ஶிக்ஷணாயை நமோ நம: — ரக்தாக்ஷன் ரக்தஜிஹ்வன் முதலியோரை சிக்ஷித்தவள்.*

90. **महिषासुर दोर्वीर्य निग्रहायै नमो नमः** *மஹிஷாஸுர தோர்வீர்ய நிக்ரஹாயை நமோ நம: — மஹிஷா ஸுரன் தோள்வலியை அடக்கியவள்.*

91. अभ्रकेश महोत्साह कारणायै नमो नमः அப்ரகேஶ மஹோத்ஸாஹ காரணாயை நமோ நம: — சிவனுக்கு உத்ஸாஹம் அளிப்பவள்.

92. महेश युक्त नटन तत्परायै नमो नमः மஹேஶ யுக்த நடன தத்பராயை நமோ நம: - மஹேஸ்வரனுடன் சேர்ந்து நடனம் புரிபவள்.

93. निजभर्तृ मुखांभोज चिन्तनायै नमो नमः நிஜபர்த்ரு முகாம்போஜ சிந்தனாயை நமோ நம: — தன் பர்த்தாவின் முகத்தையே சிந்திப்பவள்.

94. वृषभध्वज विज्ञान तपः सिध्यै नमो नमः வ்ருஷபத்வஜ விக்ஞான தபஸ்ஸித்யை நமோ நம: - சிவக்ஞானத்துடன் தபஸ்ஸித்தி தருபவள்.

95. कामक्रोधादि षड्वर्ग नाशनायै नमो नमः காமக்ரோதாதி ஷட்வர்க நாஶனாயை நமோ நம: — காமம், கோபம், லோபம், மதம், மோஹம், மாத்ஸர்யம் இவைகளை அழிப்பவள்.

96. जन्म मृत्यु जरा रोग भञ्जनायै नमो नमः ஜன்ம ம்ருத்யு ஜராரோக பஞ்சனாயை நமோ நம: - ஜனனம், மரணம், கிழத்தனம், ரோகம் இவைகளை அழிப்பவள்.

97. विरक्ति भक्ति विज्ञान सिद्धिदायै नमो नमः விரக்தி பக்தி விக்ஞான ஸித்திதாயை நமோ நம: - வைராக்யம், பக்தி, க்ஞானம், ஸித்தி இவைகளை அளிப்பவள்.

98. राज राजार्चित पद सरोजायै नमो नमः ராஜராஜார்ச்சித பத ஸரோஜாயை நமோ நம: — குபேரனால் அர்ச்சிக்கப்பட்ட பாதாரவிந்தமுடையவள்.

99. सर्व वेदान्त सिद्धान्त सुतत्वायै नमो नमः ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸுதத்வாயை நமோ நம: — ஸர்வ வேதாந்த தத்வமாயிருப்பவள்.

100. श्री वीरभक्त विज्ञान निदानायै नमो नमः ஸ்ரீ வீரபக்த விக்ஞான நிதாநாயை நமோ நம: – வீரபக்தருக்கு விக்ஞானம் அளிப்பவள்.

101. अशेष दुष्ट दनुज सूदनायै नमो नमः அஶேஷ துஷ்ட தனுஜ ஸூதநாயை நமோ நம: — எல்லா அஸுரர்களையும் நாஶம் செய்தவள்.

102. साक्षात् श्री दक्षिणामूर्ति मनोज्ञायै नमो नमः ஸாக்ஷாத் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி மனோக்ஞாயை நமோ நம: — தக்ஷிணாமூர்த்தியின் மனதிற்கு இசைந்தவள்.

103. हयमेधाग्र संपूज्य महिमायै नमो नमः ஹயமேதாக்ர ஸம்பூஜ்ய மஹிமாயை நமோ நம: — அஶ்வமேத யாகத்தால் அர்ச்சிக்கத்தக்க மஹிமைவாய்ந்தவள்

104. दक्षप्रजापति सुता वेषाढ्यायै नमो नमः தக்ஷப்ரஜாபதி ஸுதாவேஷாட்யாயை நமோ நம: - தக்ஷன் பெண்ணாகத் தோன்றியவள்.

105. सुमबाणेक्षु कोदण्ड मण्डितायै नमो नमः ஸுமபாணேக்ஷு கோதண்ட மண்டிதாயை நமோ நம: – புஷ்பபாணம், கரும்புவில் இவைகளால் அழகியவள்.

106. नित्य यौवन माङ्गल्य मङ्गलायै नमो नमः நித்ய யௌவன மாங்கள்ய மங்களாயை நமோ நம:—நித்ய யௌவனமும் மங்களமும் உடையவள்.

107. महादेव समायुक्त महादेव्यै नमो नमः மஹாதேவ ஸமாயுக்த மஹாதேவ்யை நமோ நம: — மஹாதேவனுடன் கூடிய மஹாதேவி.

108. चतुर्विंशति तत्वैक स्वरूपायै नमो नमः சதுர்விம்ஶதி தத்வைக ஸ்வரூபாயை நமோ நம: — 24 தத்வரூபமாய் இருப்பவள்.

(கர்மேந்த்ரியம், க்ஞானேந்த்ரியம் (விஷயம்) 20. மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் 4.)

# ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பிழை திருத்தம்.

| பக்கம். | நாம. | அஶுத்தம். | ஶுத்தம். |
|---|---|---|---|
| 12 | 64 | பராஶத்தி | பராஶக்தி |
| 13 | 68 | ஸர்வாந்தமய | ஸர்வாநந்தமய |
| 16 | 78 | யந்தா | யந்த்ர |
| 17 | 82 | எரித்தான் | எரித்தாள் |
| 17 | 83 | மஹேந்தர | மஹேந்த்ர |
| 17 | 84 | தந்தர | தந்த்ர |
| 31 | 149 | அறவு | அறிவு |
| 36 | 178 | निर्भोद | निर्भेद |
| 36 | 178 | நிர்போத | நிர்பேத |
| 43 | 217 | மஹாசக்தி | மஹாஸக்தி |
| 47 | 235 | மணீபிட | மணிபீட |
| 53 | 245 | விளக்கு | விளங்கு |
| 55 | 253 | रूपिण्ये | रूपिण्यै |
| 70 | 333 | மெயம்மற | மெய்மற |
| 71 | 335 | ஸொபாக்ய | ஸௌபாக்ய |
| 84 | 387 | पाडगुण्यै | षाड्गुण्यै |
| 87 | 402 | அடைகிருள் | அடைகிருன் |
| 94 | 431 | सालिन्यै | शालिन्यै |
| 95 | 440 | உன்ள | உள்ள |
| 103 | 483 | விசுக்தி | விசுத்தி |
| 107 | 506 | ஸைவ | ஶைல |
| 107 | 508 | अदि | अति |
| 109 | 525 | मुक्य | मुख्य |
| 110 | 531 | ஸுக்ல | ஶுக்ல |
| 111 | 539 | श्रृत्यै | सृत्यै |

[பின்புறம் பார்க்கவும்.]

| பக்கம். | நாம. | அஶுத்தம். | ஶுத்தம். |
|---|---|---|---|
| 112 | 543 | लव्या | लभ्या |
| 114 | 553 | கண்பதி | கணபதி |
| 115 | 555 | नाशन्यै | नाशिन्यै |
| 117 | 670 | लव्या | लभ्या |
| 120 | 582 | ஸாலினீ | ஶாலினீ |
| 121 | 587 | क्षरि | क्षरी |
| 123 | 598 | தர்ஸ | தர்ஶ |
| 123 | 603 | தேஸிக | தேஶிக |
| 123 | 603 | தர்ஸித | தர்ஶித |
| 124 | 607 | தேவேஸ்யை | தேவேஶ்யை |
| 129 | 628 | ருத்ர்ா | ருத்ரா |
| 136 | 652 | இல்லாவள் | இல்லாதவள் |
| 136 | 661 | ஸதஸ்த் | ஸதஸத் |
| 137 | 665 | ஸ்வந்தர | ஸ்வதந்த்ர |
| 139 | 676 | ब्रह्या | ब्रह्मा |
| 144 | 699 | ஸ்விதா | ஸவிதா |
| 150 | 720 | गुह्यक | गुह्यका |
| 161 | 765 | ஸுத்தா | ஶுத்தா |
| 165 | 780 | விஸ்வ | விஶ்வ |
| 171 | 811 | हन्त्र्यैं | हन्त्र्यै |
| 173 | 822 | ஸ்ருதி | ஶ்ருதி |
| 179 | 849 | வைஸ்ய | வைஶ்ய |
| 183 | 868 | அமுக்கா | அமுக்தா |
| 187 | 891 | ஞானக் | ஞானம் |
| 204 | 988 | அற்புத | அத்புத |
| 206 | 994 | आपाल | आबाल |

இதைப்பார்த்து புத்தகத்தில் திருத்திப் படியுங்கள்.